# கட்டுரைக் களஞ்சியம்

ம. பொ. சிவஞானம்




மயிலாப்பூர் :: சென்னை—4.

முதற் பதிப்பு: 26—ஜூன், 1956.
ம. பொ. சி. ஐம்பதாவது ஆண்டு நிறைவு (பொன்) விழா.


விலை
ரூ. 5-8-0

## ம. பொ. சி.
## எழுதிய நூல்கள்

இன்பத் தமிழகம்
கட்டுரைக் களஞ்சியம்
இலக்கியச் செல்வம்
முரசு முழங்குகிறது
வீரபாண்டியக் கட்டபொம்மன்
கப்பலோட்டிய தமிழன்
வானொலியில் ம. பொ. சி.
தமிழன் குரல்
சிலப்பதிகாரமும் தமிழரும்
சுதந்தரப் போரில் தமிழகம்
தமிழர் கண்ட காந்தி
பிரிவினை வரலாறு
இலக்கியத்தின் எதிரிகள்
தமிழரசா, திராவிடஸ்தானா?
கயத்தாற்றில் கட்டபொம்மன்
தலைவர் ம. பொ. சி.
(தொகுப்பு நூல்)

மாருதி பிரஸ், ராயப்பேட்டை, சென்னை—14.

# பதிப்புரை



திரு. ம. பொ. சி. அவர்கள் எந்தக் கருத்தையும் தமிழன் என்ற இன உணர்ச்சியோடு நோக்குபவர்.

கலாச்சாரம், அரசியல், வீரர்கள் வரலாறு, பாட்டாளி மக்களின் நிலை, காந்தீயம் ஆகிய பல்வேறு விஷயங்கள் பற்றி ம. பொ. சி. அவர்கள் எழுதியுள்ளவைகளின் தொகுப்பே இக்'கட்டுரைக் களஞ்சியம்' என்னும் நூல்.

இந்நூலை வெளியிடும் நல்வாய்ப்பை அளித்த ம. பொ. சி. அவர்களுக்கு எனது நன்றியும் வணக்கமும்.

**சோம. சுவாமிநாதன்**
இன்ப நிலையம்

26-6-56

# பொருளடக்கம்

# இன உணர்ச்சி வேண்டும்

மக்கள் மனதை ஒருமைப் படுத்துவதற்குத் தக்க கருவி மொழியன்றி வேறில்லை. எனவே, மொழி வழியே மக்களை ஒன்றுபடுத்தி அவர்களது உரிமையை வரையறுப்பதுதான் உலகம் ஒன்றுபடுவதற்கான வழி.

மொழி வழிப்பட்ட நாட்டுப் பற்றும், இனப் பற்றும் இன்று நேற்றுத் தோன்றியவை அல்ல. மனிதன் என்று பேசத் தொடங்கினானே அன்றே தோன்றி இன்று வரை தொடர்ந்து வருபவை; இனியும் என்றென்றும் தொடரக் கூடியவை. எனவே, மொழி வழிப்பட்ட இன உணர்ச்சி, உலகத்துக்கோ அல்லது இந்தியாவுக்கோ புதுமையானதல்ல; தமிழகத்துக்கும் அப்படித்தான்.

சுமார் இரு நூறு ஆண்டுகளுக்கு மேலாக, ஏகாதிபத்திய ஆட்சியில், இந்தியாவுக்குத் தெற்கே நான்கு மொழிகளைப் பேசும் வெவ்வேறு இனத்தவரை ஒரே ஆட்சியின் கீழ் அழுத்தி வைத்திருந்தும் அவர்களிடையே மொழிவழிப்பட்ட இனப்பற்று அழிந்துவிடவில்லை. தமிழர், ஆந்திரர், கேரளர், கன்னடர் என்ற இயற்கையான வேற்றுமைகள் வெளிப்பட்டு வருகின்றன. மொழிக்

குரிய சக்தி எத்தகையது என்பதை இது தெற்றெனவிளக்கும். இந்த மொழி வழிப்பட்ட இன வேற்றுமையால் இந்தியாவிற்கு எத்தகைய கேடும் நேராது. உண்மையில் இந்த வேற்றுமையிலேயே ஒற்றுமை அம்சங்கள் நிறைந்திருக்கின்றன. சான்ருக, அன்ருட வாழ்க்கையில் தமிழே பேசி, தமிழகத்தையே தாயகமாகக் கொண்டுவிட்ட மக்கள், அவர்கள் எந்தச் சமயத்தவராயினும் எந்தச் சாதியினராயினும் 'தமிழர்' என்ற இன உணர்ச்சியால் இணைந்துவிடுகின்றனர். ஆகவே, இன்று நம்மிடையே காணப்படும் சாதி வேற்றுமைகளேயும், சமயப் பகைமைகளேயும் ஒழிப்பதற்கு மொழிவழி இன உணர்ச்சியை வளர்ப்பதொன்றே சரியான வழி.

மொழிவழி இன உணர்ச்சியை வளர்ப்பது இந்திய தேசியத்திற்குத் தீங்கிழைப்பதாகும் என்று அஞ்சுகின்றனர் சிலர். இவர்கள் தேசியத்தின் உண்மையை அறியாதவர்களாவர். தேசியக் கவிஞர் என்று நம்மால் போற்றப் பெறும் பாரதியார் "பாருக்குள்ளே நல்ல நாடு எது?" என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு, 'எங்கள் பாரத நாடே!' என்று இறுமாந்து பதில் கூறுகின்ருர். அதே பாரதியார்:

> செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
> தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
> தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
> சக்தி பிறக்குது மூச்சினிலே

என்ற வரிகளில் தமது இன உணர்ச்சியை வெளிப்படுத்துகிருர். ஆம்; பாரதநாடு தமிழனுக்குப் பகை நாடல்ல; நேச நாடுதான். ஆனல், ஒரு தமிழனுக்குத் தமிழ் நாடு என்று கேட்கும்போதுதான் அவன் இதயம் களிக்கிறது;

இன்பம் பெருக்கெடுத்தோடுகிறது. ஏனெனில் அதுதான் அவனது தாய்த்திருநாடு. தேசீயப் பற்றும் இன உணர்ச்சியும் வெவ்வேறனதுதான். என்றாலும், ஒன்றுக் கொன்று விரோதமானவை அல்ல. ஆனால், இன உணர்ச்சியின் அடிப்படையில்தான் தேசியம் வளரமுடியும் என்பதை மறந்து விடக் கூடாது. இதனால்தான் “வாழிய செந்தமிழ்; வாழ்க நற்றமிழர்” என்று தமிழையும் தமிழரையும் வாழ்த்திய பின்னரே “வாழிய பாரத மணித் திருநாடு” என்று வாழ்த்திப் பாடினர் பாரதியார். ஆனால் இன்றையத் தமிழகத்துத் தேசபக்தர்களில் பெரும் பாலோர், ‘ஜெய் ஹிந்த்’ என்று இந்தியாவை வாழ்த்தி, ‘இந்தி வாழ்க’ எனப் பேரொலி செய்து, பின் கேள்விக்குப் பதிலாக ‘நாங்களும் தமிழர்கள்தான்; எங்களுக்கு மட்டும் தமிழ்ப்பற்று இல்லையா?” என்று பரிதாபமாகக் கூறுகின்றனர்!

லாலா லஜபதிலயை இந்திய தேசபக்தர்கள் அதற்குள் மறந்திருக்க முடியாது. அவருக்குப் ‘பாஞ்சாலச் சிங்கம்’ எனப் பட்டம் தந்து பாராட்டினர் பாரத மக்கள். ஏகாதி பத்தியம் அவ்வீரரை நாட்டை விட்டுக் கடத்தியதனல், அவர் பல ஆண்டுகள் அமெரிக்காவில் பரதேசியாக வாழ்ந்து வந்தார். அக்காலே, அவர் பாஞ்சால நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தில் தமது இனப்பற்றை வெளிப்படுத்தினர். அக் கடிதத்தின் கருத்தைப் பாரதி யார் கவிதையாகத் தீட்டியுள்ளார்.

வீடும் உறவும் வெறுத்தாலும் என்னருமை
நாடு பிரிந்தநலிவினுக்கென் செய்கேனே

என லஜபதி பிரலாபிக்கிறர். அவர் கூறும் நாடு, பாரத மல்ல; பாஞ்சாலம்.

எத்தனை ஜென்மங்கள்
இருட்சிறையில் வைத்தாலும்
தத்துபுனல் பாஞ்சாலம் தனில்
வைத்தால் வாடுகிலேன்

*     *     *

என்னருமைப் பாஞ்சாலம்
என்றேனும் காண்பேனே
பன்னரிய துன்பம்
படர்ந்திங்கே மாய்வேனே

என்று பாஞ்சாலத்தை நினைத்துப் பரிதவிக்கிறார் லஜபதி. வீடும் உறவும் வெறுத்தாலும் பாஞ்சால நாட்டை வெறுப்பது நடக்காத காரியம் என்பது தேசபக்தர் லஜபதியின் தீர்ப்பு.

வங்க வீரர் சுபாஷ் சந்திரருக்கு, 'நேதாஜி' என்பது சிறப்புப் பெயர். 'நேதாஜி' என்றால் கண்போன்றவர் என்பது பொருள். தமது இறுதிக் காலம்வரை இந்தியாவின் விடுதலைக்கே பாடுபட்ட அவர் "இளைஞன் கனவு" என்ற தமது நூலில் :

"என்னுடைய பிரார்த்தனை யெல்லாம் வங்காளிகள் என்றென்றும் வங்காளிகளாகவே இருக்கவேண்டுமென்பதே."

"வங்காளிகளே! இந்த வாக்கை நீங்கள் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். இந்தியாவில் ஏன்? உலகத்திலேயே நமக்கென்று ஓர் இடம் இருக்கிறது. அதைச் சீர்திருத்திப் பயன்படுமாறு செய்வதே நலம். வங்காளிகள் தம் நாட்டை முதலில் உரிமையாக்கிக் கொள்ள வேண்டும்.

அதைச் செப்பனிட்ட பின்னரே, பாரத நாட்டின் மற்றையப் பகுதிகளைச் சீர்செய்ய முயல வேண்டும்"

என்கிறார். எந்த ஒரு தேசபக்தரும் தமது இன உணர்ச்சியை இதைவிட அழுத்தந்திருத்தமாக எடுத்துக் கூற முடியாது.

இனவுணர்ச்சி தேசியத்திற்கு எதிரானதல்ல என்பதை விளக்கவே இவ்வளவையும் எடுத்துக் காட்டினேன். இன்றுகூட வேங்கடத்திற்கு வடக்கே உள்ள எந்த மொழியினரும் தங்கள் இன உணர்ச்சியை இழந்து விடவில்லை. பரந்த தேசியம் பேசி, மொழி வழி இன உணர்ச்சியைக் குறுகிய புத்தியெனக் கூறுகின்றனர் சிலர். இவர்களில் பெரும்பாலோர் இந்தியா முழுவதிலும் ஆதிக்கம் செலுத்தும் இனத்தவராகவே இருப்பர். சந்தர்ப்பவசத்தால் தங்கள் கையில் சிக்கியுள்ள ஆதிக்கத்தை இழந்துவிடக் கூடாதென்பதற்கே இந்த வாய் வேதாந்தம்! ஆனால் பிற இனத்தவரின் நிலை எதுவாயினும், தமிழினத்தார் விழிப்படைந்து விட்டனர். இனி நிறத் தத்துவத்தைக் கூறியோ, நிலத்தின் ஒருமையைக் காட்டியோ, பரந்த தேசியம் பேசியோ தமிழரை ஏய்த்துவிட முடியாது.

—'முரசு' 29-8-48.

# தமிழர் கலாச்சாரம்

சரித்திரத்தை ஆராய்ந்தால், தமிழகம் அரச பரம்பரை வழி மூன்று நாடுகளாகப் பிரிந்து கிடந்ததை அறிகின்றோம். அந்த வேற்றுமையிலேயும் தமிழ் மக்களிடையே ஒற்றுமையைக் காத்த பெருமை தமிழுக்கும் தமிழ்ப் புலவருக்கும் உண்டு.

தமிழ் நாட்டில்—ஆரியம், சமணம், பௌத்தம் என புறச் சமயங்கள் பலவும் புகுந்ததுண்டு. ஆனால், அந்தச் சமயங்கள் எல்லாம், தமிழைப் புறக்கணித்து தத்தம் மொழிவழி தமிழகத்தில் நிலைத்து நிற்க முடியவில்லை. ஆகவே, புறச் சமயம் ஒவ்வொன்றும் தமிழைப் போற்றி வளர்த்து அதன் மூலமே தமிழகத்தில் வாழ்வு பெற்றன.

ஆரிய மதம், வேங்கடத்திற்குத் தெற்கே தனது தனித்தன்மையை இழந்து, தமிழ்ப் பண்பு வழியும், தமிழருடைய பழக்க வழக்கப்படியும் திரிந்துவிட்டதை எவரும் தெரிந்து கொள்ள முடியும்.

அப்படித் தமிழ்ப் பண்புவழி திருந்தமறுத்ததால் தான் சமணமும் பௌத்தமும் ஆரிய மதத்துக்கு எதிராகத் தமிழகத்தில் வாழ முடியவில்லை. வேங்கடத்துக்குத்

தெற்கே புகுந்த புறச்சமயக் கருத்துக்கள், கதைகள் எதையும் தமிழர்கள் ஏற்க மறுத்து எதிர்த்துப் போராடிய தில்லை. அவற்றைத் தமிழ் வழிப்படுத்தி தங்களுக்கே உரியதாக்கிக் கொண்டனர். குறிப்பாக, ஆரிய மதப் பண்புகளைக் கூறும் ராமாயணம், பாரதம் போன்ற மாபெரும் காப்பியங்களை தமிழர்கள் விரும்பி ஏற்றனர்; வெறுத்து ஒதுக்கவில்லை. ஆனால், அவற்றை மூல மொழியில் ஏற்க மறுத்து, மொழிபெயர்ப்பின் வடிவில் வரவேற்று வாழ்வளித்தனர். தமிழில் பெயர்த்ததோடு நிற்காமல், அக்காப்பியங்கள் கூறும் பண்பாட்டினைத் தமிழ் வழியிலும் திருத்திக் கொண்டனர்.

சமய வேற்றுமைகளை யெல்லாம் விரோதங்களாக வளர்த்துக்கொள்ளாமல், சர்வ சமயங்களையும் சமரசமாகப் பாவிக்கும் பெருமை தமிழருக்கே உரியது. ஆம்; பண் பட்ட தமிழ் அதற்குப் பயன்பட்டது.

சமண சமயம், 'சிந்தா மணி' என்ற செந்தமிழ்க் காப்பியத்தின் மூலம்தான் தமிழரிடையே அறிமுகமானது; வடமொழி மூலம் அல்ல!

பௌத்த சமயம், 'மணிமேகலை' என்ற தமிழ்க் காப்பி யத்தின் மூலம்தான் தமிழகத்தில் நுழைந்தது; பாலி மொழி மூலம் அல்ல!

அதுபோன்றே, கம்பருடைய ராமாயணமும், வில்லி புத்தூரார் பாரதமும் இல்லையானால், புராதன ஆரிய மதத்தின் அடிச்சுவட்டைக்கூட இன்றையத் தமிழகத்தில் நாம் கண்டிருக்க முடியாது.

தமிழகத்தில், பின்னாளில் பௌத்த சமயம் பரவா தொழிந்தது. ஆயினும், அந்தச் சமயத்தின் காப்பிய

மான 'மணிமேகலை' பௌத்தரல்லாத தமிழர்களாலும் இந்நாள் வரை பாராட்டப்பட்டு வருகிறது.

சமண சமயம் தமிழகத்தில் தழைத்து வளரவில்லை. என்றாலும், சமண காப்பியமான, 'சீவகசிந்தாமணி' சைவ—வைணவ சமயங்களைச் சேர்ந்தவர்களாலும் சிறப்புச் செய்யப்படுகின்றது.

'தமிழருடைய கலாச்சாரத்தை சங்க இலக்கியங்களில் தான் காண முடியும். சமய இலக்கியங்களில் காண முடியாது' என்று சிலர் பேசுகின்றனர். இது தவறு. சங்க காலத் தமிழர் பிறப்பு வழி சாதிகளாகப் பிளவுபடவில்லை; பிணங்கி நிற்கும் சமயங்களாகப் பிரிந்து நிற்கவில்லை. அவர்கள், உருவங்களால் ஒரு கோடியாயினும் உள்ளத்தால் ஒருவராகவே வாழ்ந்தனர். எனவே, சங்க காலத் தமிழருடைய கலாச்சாரத்தை ஒரே எண்ணத்தில் காண முடிகிறது.

பிற்காலத் தமிழர்கள் பிறப்பு வழி சாதிகளாக, பேதப் பட்ட சமயங்களாகப் பிளவுபட்டனர். ஆகவே, தமிழருடைய கலாச்சாரமும் பல வண்ணங்களிலும் வடிவங்களிலும் காட்சி அளிக்கின்றது.

'கலாச்சாரம்' என்பதற்குச் சரியான தமிழ்ச் சொல் 'பண்பாடு' என்பதாம். பண்பாடு வேறு; பழக்க வழக்கங்கள் வேறு! ஆகவே, தமிழர் பின்பற்றும் மதங்களிடையே பழக்க வழக்கங்களில் வேறுபாடு இருக்கலாம். ஆனால், தமிழகத்தைப் பொறுத்தவரை, எல்லா மதங்களையும் சேர்ந்த தமிழரிடையே பண்பாடு ஒன்று போலத் தான் இருக்கிறது. அதனாற்றான், சமய வேற்றுமைகள் எல்லாம் கொலைக்கும் கொள்ளைக்கும் தூண்டுகின்ற விரோதங்களாக இருக்கவில்லை.

கடவுளை நம்பாத, மதத்தை விரும்பாத மக்களுக்கு 'கலாச்சாரத்'தில் நம்பிக்கை இருக்க முடியாது ; இருப்பதாகச் சொன்னால் அது வெறும் பாசாங்கே ! அவர்கள் விரும்பும் கலாச்சாரம் பழைமையிலிருந்து பிறந்ததாகவோ அல்லது பழைமையிலிருந்து திருந்தியதாகவோ இருக்க முடியாது. தங்களுடைய நவீன கோணங்கித் தனங்களுக்குக் 'கலாச்சாரம்' என்று பெயர் வைத்துக் கொண்டிருப்பார்கள் ; அவ்வளவுதான் !

—'செங்கோல்' *31-10-54.*

# கலாச்சார வேற்றுமை

முஸ்லிம்கள், தங்கள கலாச்சாரம் தனியான தென்றும், இந்து-கிறிஸ்தவ மதத்தினரின் கலாச்சாரங் களிலிருந்து வேறுபட்ட தென்றும் கூறுகின்றனர். அப்படியே இந்துக்களும், தங்கள் கலாச்சாரம் தனிச் சிறப் புடையதென்றும், பின்னல் தோன்றிய கிறிஸ்தவ— இஸ்லாமிய கலாச்சாரங்களிலிருந்து வேறுபட்ட தென்றும் நம்புகின்றனர். கிறிஸ்தவரும் அப்படியே.

இந்தக் கலாச்சார வேற்றுமை பற்றிய வாதங்கள் மதத்தோடு நிற்கவில்லை. மொழி வழிப்பட்ட இனவாரி கலாச்சார வேற்றுமையும் பேசப்படுகின்றது. ஆம், தமிழ ருடைய கலாச்சாரம் வேறு; ஆந்திரருடைய கலாச்சாரம் வேறு; அப்படியே மராத்தி, குசராத்தி, வ்ங்காளி கலாச் சாரமும் வெவ்வேருனவை என்றும் எண்ணப்படுகின்றது.

கலாச்சாரம் என்பது உடை, உணவு, தட்ப வெப்ப நிலை, மொழி, பொருளாதாரம் ஆகிய அனைத்தாலும் உருவாவதாகும். மதவழி கலாச்சாரப் பிரிவினை பேசுவது வெறும் மாயா வாதமே. அராபிய நாட்டின் தட்ப வெப்ப

நிலை வேறு; தமிழ் நாட்டின் தட்ப வெப்ப நிலைவேறு. இதன் காரணமாக இந்த இரு நாடுகளிலும் வாழும் மக்கள் அவர்கள் இந்துக்களாயினும் சரி; முஸ்லிம்களாயினும் சரி; உணவு, உடை, தோற்றம் ஆகிய எல்லாவற்றிலுமே வேறுபாடுடையவர்களாக இருக்கின்றனர்.

தமிழ் மொழி பேசுவோர் தமிழர் எனப்படுகின்றனர். அவர்கள் வாழும் நாடு தமிழ்நாடு. அந்த நாட்டின் தட்ப வெப்ப நிலை ஒரே தன்மையானது. கூடுமானவரை அவர்கள் உண்ணும் உணவும், உடுத்தும் உடையும் ஒரே மாதிரியானவை. ஆகவே, தமிழர்களுடைய கலாச்சாரம் தனியானதென்று கூற நியாயமுண்டு. இதற்கு மாறாக, மதவழி கலாச்சாரம் பேசுவதை ஏற்றுக்கொண்டால், முஸ்லிம் தமிழரின் கலாச்சாரம் வேறு, சைவத் தமிழரின் கலாச்சாரம் வேறு; வைணவத் தமிழரின் கலாச்சாரம் வேறு; அப்படியே முஸ்லிம், கிறிஸ்தவ, சமண, பௌத்த மதங்களைப் பின்பற்றும் தமிழரின் கலாச்சாரமும் வேறு வேறானவை என்று ஏற்பட்டுவிடும். இது உண்மைக்கு மாறானதாகும்.

இன்னொரு சாரார் பூகோள வழிக் கலாச்சார ஒற்றுமை பேசுகின்றனர். அதாவது, வடக்கே இமயமலை; தெற்கே குமரிமுனை; மேற்கே அரபிக் கடல்; கிழக்கே வங்காளக் குடாக்கடல்—இந்த நாற்பாங் கெல்லைக்குட்பட்ட இந்தியா ஒரே நிலப்பரப்பாதலால், இங்கு வாழும் 40 கோடி மக்களும் ஒரே கலாச்சார முடையவர்களாம்! அதன் பெயர் இந்தியக் கலாச்சாரமாம்! இந்த வாதம் உண்மையாயின் அதற்காக யாரும் வருந்தவேண்டியதில்லை; மகிழ்ச்சியாக வரவேற்கலாம். ஏனெனில், நாற்பது கோடி மக்கள் ஒரே கலாச்சாரத்தால் கட்டுப்பட்டவர்களென்றால், அது காரணமாக அவர்கள் ஒற்றுமைப்பட்டு வாழவும்

வாய்ப்பிருக்குமல்லவா ! ஆனால், உண்மை இதற்கு நேர் மாறானது. காஷ்மீரிலிருந்து கன்னியா குமரி வரை எத்தனை மொழிகள் பேசப்படுகின்றனவோ, அத்தனை மொழிகளுக்கும், மொழிக்கு ஒருவராகத் தேர்ந்தெடுத்து வரிசையாக நிறுத்தி வைத்துப் பார்த்தால், அவர்களுடைய தோற்றங்களாலேயே கலாச்சார வேற்றுமைகளைக் கண்டு கொள்ளலாம். தோற்றத்தால் மட்டுமல்ல ; உண்ணும் உணவாலும் இவர்களிடையே வேற்றுமைகள் உண்டு. ஆம், பூகோள வழி காஷ்மீரியரும் தமிழரும் ஒரே நாட்டினர். என்றாலும், மொழி, உணவு, உடை, வாழும் பிரதேச வேற்றுமை காரணமாக அவர்களுடைய கலாச்சாரம் வேறுபட்டுவிட்டது.

சீனம், ருஷ்யா, துருக்கி, எகிப்து, இந்தியா ஆகிய பல்வேறு நாடுகளிலும் வாழும் முஸ்லீம்கள் மதத்தால் ஒருமைப்பாடுடையவர்க ளாயினும் உடை, தோற்றம், உணவு, மொழி, பழக்க வழக்கம் ஆகியவற்றால் வேறுபாடுடையவர்களாவர். அந்த வேறுபாடுகள் அவர்கள் பேசும் மொழி, வாழும் நாட்டின் தட்ப வெப்ப நிலை காரணமாக ஏற்பட்டனவாகும். ஆகவே, மத வழிப்பட்ட கலாச்சார வாதம் பசையற்றதாகும்.

மொழி வழிக் கலாச்சார வேற்றுமைகளை ஒப்புக் கொள்ளுமிடத்தும், அந்த வேற்றுமைகளை யொட்டி வளர்க்கப்படும் விரோதங்களை ஏற்பதற்கில்லை. தமிழர் தங்களுடைய கலாச்சாரம் சிறந்ததென்று கூறிக்கொள்ளலாம். தொன்மை வாய்ந்த இனம் என்ற காரணத்தால் அது உண்மையாகவும் இருக்கலாம். ஆனால், தங்களுடைய கலாச்சாரத்தினும், பிற இனத்தவருடைய கலாச்சாரம் தாழ்ந்ததென்று எண்ணுவது கூடாது. பண்டைத் தமிழர் அப்படி எண்ணியதுமில்லை.

ராமாயணத்தில், சீதையைத் தேடுவதற்காக தெற்கே செல்லும் வானரர்களை நோக்கி, "பொதிகை மலை, தமிழ் வளர்க்கும் அகத்தியர் இருக்குமிடமாகும். அங்கு செல்லுங்கால், கொஞ்சம் அடக்கத்தோடு நடந்து கொள்ளுங்கள்" என்று எச்சரிக்கிறான் சுக்ரீவன். இது தமிழின் மீதும், தமிழ்ப் புலவர்மீதும் வால்மீகி முனிவர் கொண்டிருந்த நல்லெண்ணத்திற்கு அத்தாட்சியாகும்.

சேரன் செங்குட்டுவன் வடநாடு நோக்கிப் படை நடத்தியபோது இமய மலையில் வாழும் ஆரிய முனிவர்களுக்கு அல்லல் கொடுப்பதில்லை என்று மாடலனுக்கு வாக்குறுதி தருகிறான்.

மொழியாலும் கலாச்சாரத்தாலும் தமிழினத்தாருக்கு வேறுபட்ட இலங்கைக் கயவாகு வேந்தன், வஞ்சியில் கண்ணகித் தெய்வத்துக்கு வழிபாடு நடந்த போது வந்திருந்ததாகவும், தம் நாட்டிலும் கண்ணகி தேவிக்குக் கோயில் கட்டியதாகவும் கூறப்படுகிறது.

தீர்த்தங்களின் மகிமையை நம்பும் தமிழர்கள், புண்ணியம் தேடும் நோக்கத்துடன் வடக்கே சென்று கங்கையில் குளிப்பதுபோலவே, வடநாட்டு ஆரியரும் தென்னாடு போந்து காவிரியிலும் குமரி முனையிலும் நீராடியதாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

ஒரு தாய் வயிற்றில் பிறந்த சேரன் செங்குட்டுவன் சைவ மதத்தினனாகவும் அவன் தம்பி இளங்கோவடிகள் சமண மதத்தினராகவும் இருந்ததைக் கண்ணகி காப்பியத்தால் அறிகிறோம்.

அரசன் சைவனாகவும், அவனால் ஆதரிக்கப்பட்ட அவைக்களப் புலவர் பௌத்தராகவும் இருந்த செய்தியை இலக்கியங்களில் படிக்கிறோம். ஆகவே, மொழிவழி இனங்களிடையே நிலவும் கலாச்சார வேற்றுமைகளை ஒப்புக்கொண்டு, அதே நேரத்தில் அந்த வேற்றுமைகளிடையே ஒற்றுமை காண்பதுதான் தமிழர் பண்பாடு.

—'செங்கோல்' 28-12-52.

## பண்டிகையும் பொருளாதாரமும்

தமிழ் இனத்தவர் கொண்டாடும் பண்டிகை நாட்கள் பலப் பல. அவையனைத்தும் சமய வழிப் பட்டவையே. தமிழரில் ஒவ்வொரு சமயத்தினரும் தனித்தனியே தத்தம் சமய வழிப்பட்ட திருநாட்களைக் கொண்டாடி வரக் காண்கின்றோம். மற்றபடி, மூன்று கோடி தமிழர்களும் ஒரே நாளில் ஒரு மனப்பட்டு உற்சாகத்தோடு கொண்டாடக் கூடிய பண்டிகை ஒன்றுகூட இல்லை. தமிழரிடையே இனவுணர்ச்சியும், தேசிய ஒற்றுமையும் ஏற்படாமல் இருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

கடந்த சில ஆண்டுகளாகப் பொங்கல் திருநாள் தமிழ் இனத்தின் தேசியத் திருநாளாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. ஆனால், அதைக் கூடப் பெரும்பாலும் இந்துக்கள் எனப்படும் தமிழர்கள்தான் கொண்டாடுகின்றனர். இந்துக்கள் ' அல்லாத ' இஸ்லாமிய—கிறிஸ்தவ சமயங்களைச் சார்ந்த தமிழர்கள் பொங்கல் திருநாளில் உற்சாகத்தோடு பங்கு கொள்வதில்லை. பொங்கல் திருநாள் ஒன்றையேனும் சமய பேதங்களுக்கு அப்பாற்பட்ட தேசியத் திருநாளாக எண்ணி மூன்று கோடி தமிழர்

களும் ஒன்றுபட்டுக் கொண்டாடுவார்களானல், தமிழ் இனம் உலகத்தின் முன்பு தலை நிமிர்ந்து வாழ வழி பிறக்கும்.

பண்டைத் தமிழகத்தில்கூட சாதி சமய ஊர் வேற்றுமையின்றி தமிழர் அனைவரும் கூடிக் கொண்டாடிய திருவிழா ஒன்று இருந்ததாகத் தெரியவில்லை. சிலப்பதி காரத்தில் வரும் இந்திரவிழாவை, சமய வேற்றுமையின்றி தமிழர் எல்லோரும் ஒன்றுகூடிக் கொண்டாடினார்கள் என்பது உண்மைதான். ஆனல், அந்த இந்திர விழாவும் தமிழகத்தின் ஒரு பகுதியான சோழ நாட்டின் தலை நகரில் தான் நடைபெற்றதாகத் தெரிகின்றது. மற்றபடி, வட வேங்கடம்—தென் குமரிக்கு இடைப்பட்ட தமிழகம் முழுவ திலும் மக்கள் இந்திர விழாக் கொண்டாடியதாக சிலப்பதி காரத்தில்கூட செய்தி இல்லை. ஆம்; இந்திர விழா, அரசியல் விழாவாகக் கருதப்பட்டு, அரசாங்கத் தலை நகரான புகார் நகரத்தில் மட்டுமே கொண்டாடப் பட்டது.

சிலப்பதிகாரத்தில் வரும் மற்றொரு விழா, இந்திர விழாவைவிட, அரசர்கள் குடிமக்கள் ஆகிய எல்லோரும் சேர்ந்து கொண்டாடிய தேசியத் திருவிழாவாகச் சொல்லப்படுகிறது. அதுதான்,கற்புக்கரசியான கண்ணகி தேவியின் திருவிழா.

கண்ணகி விழா, முதலில் சேரநாட்டு மன்னனல், அவனுடைய நாட்டின் தலைநகரான வஞ்சியில் மட்டுமே துவக்கி வைக்கப்பட்டது. பின்னர் அவ்விழா நாளடைவில் வேங்கடத்திற்குத் தெற்கேயுள்ள தமிழ் மன்னர்கள், மக்கள் ஆகிய எல்லோராலும் பிரதி ஆடித் திங்கள்தோறும் கொண்டாடப்பட்டு வந்ததாகச் சிலப்பதிகாரம் கூறு கின்றது. தமிழகத்தில் மட்டுமின்றி வட நாட்டிலும்,

தெற்கே இலங்கைத் தீவிலும் கண்ணகி விழாக் கொண்டாடப்பட்டதாக அறிகிறோம். முற்காலத்தில் மட்டுமின்றி இக்காலத்திலும் "மாரி விழா" என்ற பெயரில் பிரதி ஆடித் திங்கள் தோறும் தமிழ் மக்கள் கண்ணகி விழா நடத்துகின்றனர். மற்றும் இலங்கை, கேரளம் ஆகிய நாடுகளிலும் கண்ணகி விழாக் கொண்டாடப்படுகின்றது.

ஆனால், இந்தக் கண்ணகி விழாக்கூட இக்காலத்தில் நாகரீகமான முறையில் சமய பேதமின்றி தமிழர் எல்லோரும் கலந்து கொண்டாடும் தேசியத் திருவிழாவாக நடத்தப்படவில்லை என்பது எல்லோரும் அறிந்ததே. கண்ணகிதேவியின் மாண்பு சாதி—சமய பேதங்களுக்கு அப்பாற்பட்டது. வீரத்தையும் கற்பு நெறியையும் விரும்பாத மக்கள் உலகத்தில் உண்டா? வீரமும் கற்பும்தானே கண்ணகி தேவியிடம் நாம் காணும் விழுமிய பண்புகள். பண்டைக் காலத்திலேயே கண்ணகி தேவி சாதி, வருணம், நாடு, மொழி, நிறம் ஆகிய வேற்றுமைகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட வீராங்கனையாகவும், பத்தினித் தெய்வமாகவும் கருதப்பட்டாள்.

கண்ணகி, வணிக வருணத்தைச் சேர்ந்தவள். ஆயினும், அந்தண வருணத்தைச் சேர்ந்த தேவந்தி என்பாள், வஞ்சியில் கோயில் கொண்ட கண்ணகியின் தெய்வச் சிலைக்குப் புனலாட்டி பூச்சூட்டி நித்த நித்தம் வழிபாடு நிகழ்த்தி வந்தாள்.

கண்ணகி தேவி, சமண சமயத்தைச் சார்ந்தவள் என்பது ஆராய்ச்சியால் அறியக் கிடக்கும் செய்தி. எனினும், சேரன் செங்குட்டுவன் வஞ்சியில் கண்ணகி விழாவைத் துவக்கி வைத்த பொழுது பௌத்தனை இலங்கைக் கயவாகு வேந்தன் அவ்விழாவுக்கு வந்திருந்து கண்ணகி தேவியை வழிபட்டிருக்கிறான்.

கண்ணகி, சோழ நாட்டுக் குடிமகள்; அப்படி இருந்தும், தமிழ் மொழி வழங்கிய சேர—பாண்டிய நாடுகளிலும், சிங்கள மொழிக்குரிய இலங்கையிலும், தமிழ் அல்லாத வேற்று மொழிகள் வழங்கிய ஆரிய—மாளுவ நாடுகளிலும் கண்ணகி விழாக் கொண்டாடியதாகக் கூறப் படுகின்றது.

பெருவாரியான மக்கள் ஒன்று கூடி, நாடு முழுவதிலுமாக விழாக் கொண்டாடும் வழக்கம் புராண காலத்தில்தான் பிறந்தது போலும்! அதனுற்றான், தமிழகத்தில் இன்று மக்கள் கொண்டாடும் விழாக்கள் எல்லாம் சமய வழிப்பட்டனவாகவே இருக்கின்றன. தீபாவளியும் இந்துக்களுக்கு மட்டுமே உரிய சமயப் பண்டிகை தானே! சமயவழிப்பட்ட எந்தப் பண்டிகையும் மொழி வழிப்பட்ட நாட்டின் எல்லைக்குள்ளேயே அடங்குவதில்லை. இந்து சமயப் பண்டிகைகள் மட்டுமல்ல; இஸ்லாமிய— கிறிஸ்தவ சமயங்களைச் சார்ந்த தமிழர்கள் கொண்டாடும் பண்டிகைகளும் இதுபோலத்தான்.

இந்துக்கள் என்போர்க் குரிய பண்டிகைகளில் தீபாவளி ஒன்றுதான் இந்தியாவில் உள்ள இந்துக்கள் எல்லோராலும் கொண்டாடப் படுகின்றது. இந்தப் பண்டிகை தெய்வ நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டதுதான். என்றாலும், உருவ வழிபாட்டோடு அல்லாமல், ஒளி வழிபாட்டோடுதான் உறவு கொண்டிருக்கிறது. இந்தியா முழுவதிலும், இந்துக்கள் என்போர் எல்லோராலும்—இவ்விழாக் கொண்டாடப் பெறுவதற்கான முக்கிய காரணம் இதுதான்.

பொதுவாக, பண்டிகைகளெல்லாம் சமயங்களின் பேரால்—புராணங்களின் போதனையால் கொண்டாடப்

படினும், அந்தப் பண்டிகைகளைத் துவக்கி வைத்ததற்கான அடிப்படைக் காரணம் பொருளாதாரம் தான்.

பணம் ஒரு சிலரிடையே தேங்கி விடாமல் நாடு முழுவதும் பரவலாகச் சுற்றி வரும்படி செய்வதற்காகத்தான் நமது முன்னோர்கள் பண்டிகைகளை ஏற்படுத்தியிருக்க வேண்டும். ஒரு பண்டத்தைக் கொடுத்து இன்னொரு பண்டத்தை வாங்கும் பண்டமாற்று வாணிபம் இருந்த காலத்தில், நாடு முழுவதுமாகப் பண்டிகைகள் கொண்டாடப்படவில்லை. பண்டத்தைப் பணத்திற்கு விற்கும் நாணய மாற்று முறை ஏற்பட்ட காலத்தில் தான் பண்டிகைகள் கொண்டாடும் பழக்கம் ஏற்பட்டதாகத் தெரிகின்றது. பண்டிகைகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றிற்கான உண்மைக் காரணங்களை மறைத்து, கற்பனையாகக் காரணங்களைச் சொல்வது இந்துக்களிடையே தொன்று தொட்டு இருந்து வரும் பழக்கம். ஆம், எதையும் தெய்வீக சக்தியோடு பிணைத்தால் தான் மக்கள் பய பக்தியோடு செய்வார்கள் என்று முன்னோர்கள் நம்பினர் போலும்! அதனாற்றான், தீபாவளி போன்ற பண்டிகைகளுக்கு தெய்வீகச் சம்பவங்களைக் கற்பித்து புராணங்கள் எழுதியிருக்க வேண்டும். அப்படிக் கற்பிப்பவர்கள் தாங்கள் வாழ்ந்த பிரதேசம், பேசிய மொழி ஆகியவற்றிற் கேற்ப சம்பவங்களைச் சிருஷ்டிப்பது இயற்கை தானே! தீபாவளிப் பண்டிகையை யொட்டி வழங்கி வரும் புராணக் கதையும், கற்பனையே யன்றி சரித்திரமன்று.

—'தமிழன் குரல்' நவ—'54.

# தமிழில் அர்ச்சனை

தமிழகத்தைப் போன்று விண்ணை இடிக்கும் கோபுரம் உடைய கோயில்கள் வேறு நாடுகளில் இல்லை. மலைங்கவரும் மதில்கள், உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் கோபுரம்,சிந்தனையைக் கிளறும் சிற்பங்கள் இவ்வளவையும் தமிழகத்துக் கோயில்களில்தான் காண முடியும். திரு வரங்கம் பெரிய கோயிலைப் பார்த்தால், ஒரு பெரிய சாம்ராஜ்யத்தின் கோட்டையைப் போன்று காட்சியளிக் கின்றது. மதுரைக் கோயிலில் உள்ளும் புறமும் காட்சி யளிக்கும் சிற்பங்களைக் காணும் தோறும், நமக்கு ஏற்படும் பெருமிதம் தான் என்னே!

கோயில்கள் எதற்காகக் கட்டப்பட்டன? மக்களின் வாழ்க்கையைப் பண்படுத்தவே என்பதை எவரும் மறுக்க முடியாது. "மக்கள் துங்க முயர்ந்து வளர்கெனக் கோயில்கள் சூழ்ந்தது மிந்நாடே" என்றார் பாரதியார்.

கீழ் மக்களையும் மேன் மக்களாகச் செய்ய வேண்டும் என்பதே கோயிற்களைக் கட்டியவர்களின் குறிக்கோள். ஆனால், பிற்காலத்தில், ,கோயில்களின் பெயரால் மேன்மக்களையும் கீழ்மக்களாக்கிய கொடுமையை என் னென்பது!

" அன்பெனும் பிடியுள் அகப்படுவான் ஆண்டவன் " என்றார் அருட்சோதி வள்ளலார். ஆனால், இன்று ஆலயத்துக் கடவுளர் எல்லாம் அடங்கியிருப்பது, அன்பெனும் பிடியுள் அல்ல ; அர்ச்சகரின் பிடியிலாகும். இந்த நிலை தொலைந்து காசியிலிருப்பதுபோன்று கடவுளர் சிலைகளை எல்லோரும் தொட்டுத் தொழும் உரிமை இங்கேயும் இருக்க வேண்டும். பக்தருக்கும் கடவுளருக்கும் இடையேயுள்ள தடைகள் அனைத்தும் எடுபட வேண்டும்.

தமிழ் மொழி எல்லாத் துறைகளிலும் மெல்ல முன்னேறி வருகிறது. ஆங்கிலத்தில் வழங்கி வரும் கலைச் சொற்களைத் தமிழில் பெயர்த்து வருகின்றனர். இன்னும் மொழிவழி மாகாணம் பிரிக்கப்படவில்லை என்றாலும், தமிழை அரசியல் மொழியாக்கும் முயற்சி ஒரு ஜில்லாவில் பரீட்சிக்கப்பட்டு வருகிறது. தமிழகம் முழுவதும் தமிழே அரசியல் மொழியாக ஆகப் போகிற காலமும் அதிக தூரத்தில் இல்லை.

ஆனால் சமயத் துறையில் மட்டும் தமிழுக்குரிய இடத்தை வடமொழி ஆக்கிரமித்திருக்கும் நிலை இன்னும் அகன்றபாடில்லை. இந்த நிலை நீங்கி, மக்கள் வாழும் இல்லங்கள்தோறும், வழிபடும் கடவுளரின் ஆலயங்கள் தோறும்— தமிழே ஆட்சி பெறச் செய்ய வேண்டும்.

" காட்டிலே மறைக் கதவும் திறந்தது எங்கள் கன்னித் தமிழ் ; எலும்பைப் பெண்ணுருவாக்கியது எங்கள் இன்பத் தமிழ் ; முதலை யுண்ட பாலனை அழைத்தது எங்கள் முத்தமிழ் " என்றெல்லாம் கன்னித் தமிழுக்குக் கடவுள் தன்மை கூறாத புலவர் இல்லை. ஆனால், இவ்வளவு பெருமையுள்ள தமிழுக்கு ஆலயத்தில் வாழ உரிமை இருக்கின்றதா? அதுதான் இல்லை. முருகனை தமிழ்த் தெய்வம் என்றனர் முன்னோர். ' முத் தமிழால்

வைதாரையும் வாழ வைப்பான் முருகன்' என்றார் அருண கிரியார். அந்த முருகன் கோயில்களில் கூட தமிழுக்கு முதலிடம் இல்லை! இந்த நிலை மாறி தமிழகத்துக் கோயில்கள் எல்லாவற்றிலும் தமிழ் மறையே ஓதப்படல் வேண்டும். தேவாரம், திருவாசகம், திருமந்திரம், பிரபந்தம் போன்ற தமிழ் மறைகளைப் பண்ணோடு கலந்து பாடப் பயிற்சி பெற்றவர்களையே அர்ச்சகர்களாகவும், பட்டாச் சாரிகளாகவும் அமர்த்த வேண்டும்.

ஆனால், பெருவாரியான தமிழர்களிடையே இன்னும் வடமொழி மோகம் விட்டபாடில்லை. பண்டைக் காலத்தில் வடமொழியில்தான் இறை வழிபாடு நடைபெற்று வந்த தாக நம்புகின்றனர் மக்கள். இது தவறான எண்ணம்.

குமரி முதல் இமயம் வரை தமிழ்மொழியே ஆட்சி செலுத்திய காலம் ஒன்று உண்டென்பதை ஆராய்ச்சி யாளர் மூலம் அறிகிறோம். அந்தத் தமிழ் இந்தியாவில் தமிழர்கள் இறை வழிபாடு நிகழ்த்தாமலா இருந்தார்கள்?

ஹரப்பா, மொகஞ்சதரோ நகரங்களைப் பற்றிய ஆராய்ச்சியிலிருந்து சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன்பே தமிழர் நாகரீகம் படைத்த மக்களாக வாழ்ந்தனர் என்று நிச்சயிக்க முடிகிறது. எனவே, உலகத்திலேயே மிகப் புராதன கால நாகரீகத்தைப் படைத்த நமக்கு, இடையே வந்த வடமொழிதான் கடவுள் வழிபாட்டுக் குரிய மொழியாக இருக்க முடியும்—இருக்க வேண்டும் என்பது எவ்வளவு அறியாமை!

ஆலயங்களில், வழி பாட்டுக்குரிய பாடல்கள் எல்லாம் வடமொழியிலேயே சொல்லப்படுகின்றன. ஏன்? மூவர் தேவாரங்களும், மாணிக்கவாசகரின் திருவாசகப் பாடலும் இறைவனின் திருவுள்ளத்திற்கு ஏற்காதா?

திருவா சகமிங் கொருகா லோதில்
கருங்கல் மனமும்
கரைந்துருகக் கண்கள்
தொடுமணற் கேணியில்
சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப
விதிர்விதிர்ப் பெய்தி
அன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகில்
மற்றைய ரிலரே

என்பது, சிவப்பிரகாசரின் திருவாக்கு. அத்தகைய திருவாசகத்திற்கு இறைவன் திருக்கோயிலில் இடமில்லை யென்றால், அதைத் தமிழர் பொறுத்துக் கொள்ளலாமா ?

வடமொழி தமிழகத்தில் புகு முன்னரே, தமிழரிடை இறை வழிபாடு இருந்ததென்று ஆராய்ச்சியாளர்கள் அறிவிக்கின்றனர். வடமொழி புகுந்த பிற்காலத்தில் வழிபாட்டு முறைகளிலே மாறுதல்கள் தோன்றியிருக் கலாம். ஆனால், வழிபடும் வழக்கம் தொன்றுதொட்டே இருந்து வந்திருக்கிற தென்பதை மறுப்பதற்கில்லை. இடைக் காலத்தில்தான் இந்த வழிபாட்டுத் துறையில் வடமொழி ஆதிக்கம் பெற்றுவிட்டது.

'ஆலய வழிபாட்டு வழக்கம் குறைந்து வருகிறதே !' என்று அங்கலாய்க்கின்றனர், ஆத்தீகவாதிகள். வாழ்வில் நைந்த மனதுக்குச் சாந்தி தேடும் இடம்தானே கோயில். ஆனால், ஆலயத்திலே புரியாத மொழியில், தெரியாத மந்திரத்தைக் கேட்டுத் திகைத்து நிற்பதால் சிந்தை தெளிந்து விடுமா ? அலை மோதும் உள்ளம் அமைதி பெற முடியுமா ? சஞ்சலப்படும் மனம் சாந்தியடைய இயலுமா ! இதைச் சமயவாதிகள் சிந்திக்க வேண்டும்.

ஆலய வழிபாடு தமிழிலேயே நடைபெற வேண்டும் எனக் கூறுவதோ, வழிபாட்டுத் தொழிலில் சாதி வேற்றுமை கூடாதென்று வற்புறுத்துவதோ நாத்தீக வாதமல்ல ; நாட்டில் பரவி வரும் நாத்தீகத்தைத் தடுக்க அதுவே சரியான வழி.

வடமொழியை தேவமொழி என்று நாட்டு மக்கள் நம்பியிருந்த காலத்தில், அம் மொழி ஆலயத்தில் ஆட்சி பெற்றிருக்கலாம். ஆனால், மக்கள் பேசும் மொழிகளிலே ஒன்று தேவமொழி என்றும், இன்னொன்று மனித மொழியென்றும், முன்னது உயர்ந்த மொழி, பின்னது தாழ்ந்த மொழி என்றும் சொல்லப்படும் கூற்றை நம்பிய காலம் மலையேறிவிட்டது.

என்று ஆலயத்திலிருந்து தமிழ் வெளியேற்றப் பட்டதோ, அன்று முதல்தான் நாத்தீகம் நம் நாட்டில் பரவலாயிற்று. சமயத்தில் புகுந்த சதிகளைக் காரண மாகக் கொண்டு ஒழுக்க சமயத்தையும் ஒழித்துவிட வேண்டும் என்ற கிளர்ச்சி வலுத்து வருகின்றது. இது, ஒரு தீமையை எதிர்ப்பதாகச் சொல்லிக் கொண்டு இன்னொரு தீமையை வளர்ப்பதாகும்.

இந்த இரு தீமைகளையும் ஏக காலத்தில் எதிர்த்து ஒழுக்க சமயத்தை நிலைநாட்ட வேண்டியது அவசியமே. ஆனால், இன்று நாட்டில் நிலவுவது ஒழுக்க சமயமா? 'இல்லை' என்பதைச் சொல்லத் தேவை இல்லை. சங்க காலத் தமிழகத்தில் நிலைத்திருந்த ஒழுக்க சமயம் ஒழிந்தே போயிற்று. இனியேனும், கடவுளர் கோயில்கள் மக்கள் அறிவை வளர்க்கவும், அவர்களது அன்றாட வாழ்க்கையில் படிந்த துன்பத்தைப் போக்கி, இன்பத்தைப் பெருக்கவும் ஆலயங்கள் பயன்பட வேண்டும். அப்போது தான் ஒழுக்க சமயம் மீண்டும் புத்துயிர் பெறும்.

—'செங்கோல்' 22-5-55.

## விடுதலை விழா !

இன்று, சுதந்திரத் திருநாள். அந்நியரை வெளியேற்றி, இந்தியர் அரசுரிமையைக் கண்ட ஆனந்தப் பெரு நாள்; இந்திய நாடு இந்தியருக்கே ஆன இன்பத் திருநாள். ஆம், அடிமை இருள் நீங்கி சுதந்தரக் கதிரவன் சுடர்விட்டெழுந்த ஆகஸ்ட் பதினைந்தை நாம் இரண்டாம் முறையாக இன்று சந்திக்கிறோம்.

இந்தியாவின் விடுதலைக்காக அடிபட்டும், உதை பட்டும், அந்நிய நாடுகளுக்கு விரட்டப்பட்டும் அல்லலுற்ற எல்லாத் தேசபக்தர்களையும் நாம் தலைவணங்கிப் போற்று கிறோம். விடுதலைப் போரில் மைந்தரை இழந்து வருந்தியும் கணவரை இழந்து கைம்மை நிலை எய்தியும் கண்ணீர் விட்டழுத பெண் மக்களைக் கையாரத் தொழுது வாயார வாழ்த்துகிறோம்.

அடிமைக் குழியில் அழுந்திக் கிடந்த பல கோடி மக்களை, தமது அன்புக் கரங்களால் அணைத்தெடுத்து சுதந்தர மென்னும் ஆனந்தப் பெரு வெளியில் அழைத்து வந்த மறுகணமே, நம்மை விட்டுப் பிரிந்த அண்ணல் காந்தியடிகளுக்கு நமது அன்பு கனிந்த நன்றியை அர்ப்

பணிக்கிறோம். அவர் காட்டிய நெறி நின்று கடமையைச் செய்வோம் என்ற உறுதியை மேற்கொள்கிறோம்.

சுதந்திர இந்தியாவில் எங்கு நோக்கினும் சாதிப் பூசல், சமயச் சண்டை, கள்ளச் சந்தை ஆகிய தீய சக்திகள் தலைவிரித்தாடி நம்மைப் பயமுறுத்துகிறது. என்றாலும் நாம் சோர்ந்து விடக்கூடாது. மக்களின் துணை கொண்டு மகாத்மாவின் மேல் ஆணையிட்டு அந்தத் தீய சக்திகளை முறியடித்து முன்னேறுவோம்.

ஒரு மாகாணத்தை இன்னொரு மாகாணம் சுரண்டுவது, ஒரு மொழியின் இடத்தை இன்னொரு மொழி ஆக்கிரமிப்பது, ஒரு இனத்தவரின் பண்பாட்டை இன்னொரு இனத்தவரின் பண்பாடு பாழாக்குவது போன்ற ஆதிக்க சக்திகளை அழித்தே தீருவோம் என்று அறுதியிட்டு உறுதி மேற்கொள்வோம் !

தமிழ் மக்களாகிய நாம் ஏகாதிபத்தியப் பிடிப்பிலிருந்து விடுதலை பெற்ற நாளைக் கொண்டாடும் இந்த நல்ல நேரத்தில், அடுத்த ஆண்டு ஆகஸ்டு பதினைந்திற்குள் தமிழினத்தின் பிறப்புரிமையாகிய சுதந்திரக் குடியரசை அடைந்தே தீருவோம் என்று உலகறிய முரசடிப்போம்.

உரிமை பெற்ற தமிழகம், இந்தியாவின் இதர பகுதிகளுடன் இணைந்து நின்று கடமையைச் செய்யுமென்றும் இந்திய மக்களுக்கு உறுதி கூறுவோம்.

சுதந்திர இந்தியா, தன்னை சூழ்ந்துள்ள இன்னல்களிலிருந்து விடுபட்டு விரைவில் வெற்றி காணுமென்ற நம்பிக்கையுடன் ‘இந்தியா வாழ்க !’ என்று வாழ்த்துகிறோம். இந்தச் சுதந்திர நாளில் அதற்காகப் பாடுபட்ட

எல்லா மக்களுக்கும், அவர்களது மொழி- இனம் ஆகியவை எதுவாயினும், அவர்களின் தேசபக்திக்கும் தியாகத்திற்கும் தலை வணங்கி மீண்டுமொருமுறை நன்றி செலுத்துகிறோம்.

—‘ தமிழ் முரசு ’ 15-8-’46.

## இந்தியக் குடியரசு வாழ்க!

குடியரசு இந்தியா, தனது இரண்டாவது ஆண்டு விழாவைக் கொண்டாடுகிறது.

பிரிட்டிஷ் பேரரசின் பிடியிலிருந்து மட்டுமல்ல; இந்தியாவெங்கும் சிதறிக்கிடந்த அறுநூறு சிற்றரசர்களின் பேயாட்டங்களிலிருந்தும் இந்திய மக்கள் விடுதலை பெற்றநாள், ஜனவரி 26!

பிரிட்டிஷ் கொடுங்கோல் வகுத்த சட்டங்கள் அனைத்தையும் குழிதோண்டிப் புதைத்து, மக்களுக்காக, மக்கள் மன்றத்தாரால் தயாரிக்கப்பட்ட அரசியலை அமுல் நடத்தத் துவங்கிய நாளே குடியரசுத் திருநாள்.

இந்தியாவைப் போன்றே குடியரசு பெற்ற நாடுகள் உலகில் பலவுண்டு. அமெரிக்கா, ருஷ்யா, சீனு, பிரான்ஸ் ஆகியவை உலகக் குடியரசு நாடுகளில் மிகப் பெரியவையாகும். ஆனால், அங்கெல்லாம் முடியரசர்களை வெட்டி வீழ்த்தி, அவர்களுக்கு ஆதரவு காட்டிய பிற்போக்காளர்களைக் கொன்று, அவர்களது உடல்களைக் 'கோபுரம்' எனக் குவித்து, அந்தப் பிணக் கோபுரத்தின் உச்சியில் நின்றுதான் குடியரசுச் சட்டம் பிரகடனப்படுத்தப்பட்டது.

ஆனால், மக்களைக் கொன்று மண்ணாள விரும்பாத அசோகரைப் பெற்றெடுத்த இந்தியா, தன்னுயிர்போல மன்னுயிரையும் காப்பதே மதமாகக் கொண்ட இந்தியா, கொலைக் களத்தில் நின்று குடியரசுப் பிரகடனம் செய்ய வில்லை. பிரிட்டிஷ் பேரரசரும், இந்தியச் சிற்றரசர்களும் பணிந்து கொடுக்கும் அளவுக்கு மக்கள் சக்தியை வளர்த்து, உயிர்ப்பலியின்றி அமைதியான சூழ்நிலையில் குடியரசுப் பிரகடனம் செய்த நாள்தான் ஜனவரி 26! இது, உலக வரலாற்றில் காணாத புதுமை.

முடியரசுக் கொடுமைகளுக்கு முடிவு கட்டியதோடன்றி சாதி - சமயக் கொடுமைகளுக்கும் முடிவு கட்டிய நாள் ஜனவரி 26! தாழ்த்தப்பட்ட மக்களைப் பார்த்தாலும் பாவம்; தொட்டாலும் தோஷம் என்று எண்ணும் மூட நம்பிக்கைக்கு முடிவுகட்டத் துணைபுரிகிறது குடியரசுச் சட்டம்.

ஹரிஜன மக்களைத் தீண்ட மறுப்பது, அவர்களுக்குத் தொழில் செய்ய மறுப்பது; தொழில்களில் அமர்த்திக் கொள்ள மறுப்பது, ஆலயம், சிற்றுண்டி-சாலை, நடை பாதை, குளம், கிணறு, கல்விக்கூடம் ஆகிய பொதுவிடங் களில் அவர்கள் பிரவேசிப்பதைத் தடுப்பது போன்ற தீமைகளை ஒடுக்க வாய்ப்புத் தருகிறது குடியரசுச் சட்டம்.

ஒரே தொழிலில் ஈடுபட்டிருப்பினும், ஆண் என்பதற் காக அதிக ஊதியமும், பெண் என்பதற்காகக் குறைந்த ஊதியமும் தரும் கொடுமை ஒழிவதற்கு உதவி புரிகிறது குடியரசுச் சட்டம்.

பள்ளிக்குச் செல்லவேண்டிய பருவத்திலுள்ள சின்னஞ்சிறு பிள்ளைகளைத் தொழிற்சாலைகளில் அடைத்து குறைந்த ஊதியத்திற்கு வேலை வாங்கும் கொடுமையைத்

தடுக்கவும் அவர்களுக்குக் கட்டாயக் கல்வி கற்பிக்கவும், சந்தர்ப்பம் தருகிறது குடியரசுச் சட்டம்.

பிரிட்டிஷ் இந்தியாவில், எழுத்துரிமை, பேச்சுரிமை மட்டுமல்ல—எண்ணும் உரிமையைக்கூட இழந்திருந்தார்கள் மக்கள். அந்தக் கொடுமைகளுக்கு முடிவுகட்டி, எழுத்துரிமையையும், பேச்சுரிமையையும் வழங்கியிருக்கிறது குடியரசுச் சட்டம்.

இந்தியா சீரழிந்ததற்குக் காரணம், மதவாதிகளின் சொற்படி மன்னர்கள் ஆடிவந்ததுதான். ஒரே மன்னன், காலையில் சைவன்—நடுப்பகலில் சமணன்—மாலையிலே பௌத்தன் என்ற நிலையில் வேளைக்கொரு விதமாக மதம் மாறிய காலத்தில்தான் இந்தியாவின்மீது வெளியார் படையெடுத்தனர். 'உன் மதம், என் மதம்'என மதப்பேய் பிடித்து, மக்கள் சமுதாயம் பல முகாம்களாகப் பிரிந்து நின்று போரிட்ட காலையில்தான், ஆங்கிலேயர் புகுந்தனர். ஆகவே, மீண்டும் மீண்டும் ஆட்சி பீடத்தில் மதவாதிகள் ஆதிக்கம் பெறுமல் இருப்பதற்காக, "இந்தியா, சமயச் சார்பற்ற நாடு"எனப் பிரகடனப் படுத்திவிட்டது குடியரசுச் சட்டம்.

குடியரசு இந்தியாவில் இத்தனைச் சிறப்புக்கள் இருப்பினும், அடிப்படையிலேயே சில சீர்கேடுகளும் இருக்கத்தான் செய்கின்றன.

ஒரு மாகாணத்தவர், இன்னொரு மாகாணத்தவரை ஆள்வது ; ஒரு மொழிக்குரிய நிலத்தில், இன்னொரு மொழியினர் ஆதிக்கம் செலுத்துவது ; ஒரு வர்க்கத்தவரின் உழைப்பை, இன்னொரு வர்க்கத்தார் சுரண்டிப் பிழைப்பது போன்ற சில கொடுமைகள் அடிமை இந்தியாவில் அங்கு இங்கு எனுதபடி இந்தியா எங்கும் நிலவி

இருந்தன. இந்தக் குறைகள் இன்றையக் குடியரசு இந்தியாவிலும் தொடர்ந்து நிலவி வருகின்றன. இவற்றைப் போக்காதவரையில் குடியரசு இந்தியா உலகின்முன் தலைநிமிர்ந்து வாழ இயலாது.

இந்தியக் குடியரசுச் சட்டம் அமுலுக்கு வந்த அன்றே, இந்தியா மொழிவாரி நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருக்க வேண்டும்; மாகாண மொழிகள் அரசாங்க மொழிகளாக மலர்ந்திருக்கவேண்டும். ஆனால், மேலிடத்தாரின் அக்கறையின்மை, இந்த நிலை ஏற்படாதவாறு செய்துவிட்டது. என்றாலும், மொழிவழி நாடுகள் பிரிக்கப்படுவதற்கும் குடியரசுச் சட்டத்தில் வழி வகுக்கப்பட்டிருக்கிறது. இதைப் பயன்படுத்திக்கொண்டு, தமிழகத்தில் தமிழரசு அமைக்க, தமிழ் மக்கள் ஒன்றுபட்டு முயற்சி செய்ய வேண்டும்.

இந்தியக் குடியரசுச் சட்டத்தில் மற்றோர் பெருங் குறையுண்டு. அதாவது, புதிய குடியரசு, சுதந்திர அங்கங்களைக் கொண்ட சமஷ்டியன்று. வெறும் நிர்வாகப் பிரதேசங்களைக் கொண்ட ஏக அரசேயாகும். இந்தியாவைப்போன்று பல்வேறு தேசீய இனங்களுடைய உபகண்டம் போன்ற நாடுகள் உலகில் பலவுண்டு. சான்றாக, அமெரிக்காவைக் கூறலாம். அமெரிக்கக் குடியரசு சுதந்திர அங்கங்களைக் கொண்ட சமஷ்டியாகவே ஆரம்பமாயிற்று. மாகாணங்களின் விருப்பத்தின்மீது (விரும்பாத மாகாணங்களை விட்டுவைத்து) அமைக்கப்பட்டதே அமெரிக்க சமஷ்டிக் குடியரசு. அங்கு குடியரசுத் தலைவர் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப் படுகிறார். மாகாண அரசுகளின் தலைவர்களும் அப்படியே!

ஆனால், இந்தியக் குடியரசு இதற்கு நேர்மாறான போக்கில் அமைக்கப்பட்டிருக்கிறது. மாகாணங்கள்

சமஷ்டியில் சேர விரும்புகின்றனவா என்பதைப்பற்றி, மாகாண வாக்காளர்களையோ, சட்டசபை உறுப்பினர்களையோ கேட்கவில்லை. மற்றும், குடியரசுத் தலைவர் மறைமுகத் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்படுவார்; மாகாண கவர்னர்கள் மத்திய அரசினரால் நியமிக்கப்படுவர்—என்கிறது இந்தியக் குடியரசுச் சட்டம். சமஷ்டிக் குடியரசின் கொள்கைக்கே புறம்பான இந்தக் குறைபாடுகள் மேலிடத்தாரால் விரைவில் நீக்கப்படவேண்டும். இல்லையேல், நீக்குமாறு மக்களால் அவர்கள் நிர்ப்பந்திக்கப்படுவர்.

ஒரு சில அதிகாரங்களை மட்டும் மத்திய அரசுக்கு தாமே விட்டுக்கொடுத்து, ஏனைய எல்லா அதிகாரங்களுடனும் கூடிய சுதந்தர அரசுகளாக விளங்குகின்றன அமெரிக்க மாகாணங்கள். ஆனால், இந்தியாவிலோ 'பலம் வாய்ந்த மத்திய அரசாங்கம்' அமைக்கப்பட்டு, மாகாணங்கள் பலமற்றனவாகச் செய்யப்பட்டுள்ளன. இதனால் உணவுப் பிரச்னைபோன்ற மக்களின் அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகளைக்கூட சமாளிக்கச் சக்தியற்றிருக்கின்றன மாகாணங்கள்.

இந்நிலை அகன்று மாகாண அரசுகள் பலமுடையனவாகச் செய்யப்பட்டாக வேண்டும். குறிப்பாகச் சொன்னால் பாதுகாப்பு, போக்கு வரத்து, வெளிநாட்டு அரசியல், சுங்கம் ஆகியவை மத்திய அரசுக்கென்றும், மிச்ச அதிகாரங்கள் உள்பட ஏனைய எல்லா அதிகாரங்களும் மாகாணங்களுக்கென்றும் உறுதியாக வேண்டும்.

ருஷ்யாவும் இந்தியாவைப் போன்றே குடியரசு நாடுதான். அங்கு, ஒவ்வொரு மாகாணமும் 'குடியரசு' என்ற பெயராலேயே நிலவுகின்றன. அந்தக் குடியரசுகள் மொழி வழி பிரிக்கப்பட்ட தனித்தனி நாடுகளாகும். ஒவ்வொரு

குடியரசும் தனது அரசியலைத் தானே தயாரித்துக் கொண்டிருக்கின்றன. ஆம்; மத்திய குடியரசின் அரசியல் சட்டம் வேறு; மாகாணக் குடியரசுகளின் அரசியல் சட்டங்கள் தனித்தனியானவை. ஒவ்வொரு மாகாணமும் தத்தம் நிலைக்கேற்ப அரசியலைத் தயாரித்துக் கொண்டிருக்கின்றன. அமெரிக்கக் குடியரசிலும் அப்படித்தான்.

இந்தியாவில் மொழிவழி மாகாணங்கள் பிரிக்கப் படாதது மட்டுமல்ல; இப்போதுள்ள மாகாணங்கள்கூட தத்தம் அரசியலைத் தாமே வகுத்துக்கொள்ள உரிமை அளிக்கப்படவில்லை. மாகாணங்களுக்கும், மத்திய அரசுக்கு மாக ஒரே சட்டப் புத்தகம்தான் தயாரிக்கப்பட்டிருக்கிறது. இதனால் மொழி கலாச்சாரத் துறைகளில் வடநாட்டு மக்களிலிருந்து பல்வேறு வகைகளில் வேறுபட்டுள்ள தமிழ் நாட்டு மக்கள் குடியரசுச் சட்டத்தைக் குறைகூற வேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது.

குடியரசுச் சட்டம், இந்தியை இந்தியாவின் பொது மொழியாக்கி இருக்கிறது. பம்பாய், சென்னை போன்ற மாகாணங்கள் மொழிவழி நாடுகளாகப் பிரிக்கப்படாத தால், அங்கெல்லாம் மக்கள் பேசும் மொழிகள் அரசு மொழிகளாக வர வழி இல்லை. ஆங்கிலம்தான் அரசாளு கிறது. இந்த நிலையில் இந்தியைப் பொதுமொழியாக்கி ஞல், அம்மொழியோடு எந்த வகையிலும் தொடர்பற்ற தமிழ் மொழியின் வளர்ச்சி குன்றும் என்றும் அஞ்சுகின் றனர் தமிழ் மக்கள். தமிழ், மாகாண அரசாங்க மொழியாக உடனடியாக ஆகிவிடுமானல், அப்புறம் இந்திக்கு எதிர்ப்புக் குறைவது திண்ணம்.

இப்படி, குடியரசுச் சட்டத்தில் குறைபாடுகள் பல இருக்கின்றன. இந்தக் குறைபாடுகளை உடனடியாகத்

திருத்தியாக வேண்டும். திருத்துவதற்கு சட்டமும் வளைந்து கொடுக்கிறது.

தமிழ்நாட்டு தேசீயவாதிகள் தமிழகத்தின் நலத்துக்கு ஏற்ற வகையில் குடியரசுச் சட்டத்தைத் திருத்துவதற்கான கிளர்ச்சியில் ஈடுபட வேண்டும். ஆனால், கொள்கையை ஒப்புக்கொண்டு அதை அமுல் நடத்துவதைத் தள்ளிப் போடுவது அபாயகரமானது. இதைத் தேசீயவாதிகள் மனதில் வைத்து விரைவில் பணிபுரிய வேண்டும்.

எத்தனையோ தியாகிகள் உயிர்ப்பலி தந்து, உடைமையைப் பறிகொடுத்து தேடித் தந்தது இன்றைய குடியரசு ஆட்சி. இதை நல்ல முறையில் போற்றி வளர்க்க வேண்டியது நாட்டு மக்களின் கடமை.

வாழ்க இந்தியக் குடியரசு!

—'முரசு'—ஜன.

## குடியரசு வாழ்க, வளர்க!

மக்கள் தங்களைத் தாங்களே ஆண்டு கொள்வதற்குப் பெயர்தான் குடியரசு. பண்டைத் தமிழகத்தில் மூவேந்தர் ஆண்ட காலத்தில் முடியரசுதான் நிலவியது. ஆயினும், குடியரசுக் கொள்கை கௌரவிக்கப்பட்டது. மன்னர்கள், குடிமக்கள் கருத்துவழி கோலோச்சினர். மன்னன், மக்கள் ஆகிய இரு தரப்பினரும் மனமொத்து ஆள்வதற்குத்தான் அந்நாளில் "அரசு" என்று பெயர். ஆயினும், மன்னனைவிட மக்களுக்கே அந்த அரசில் முக்கியத்துவம் இருந்தது. ஆம்; மன்னன் வெறும் உடல். மக்கள்தான் உயிர். இதை,

> மன்னுயி ரெல்லாம்
> மண்ணாள்வேந்தன்
> தன்னுயிர்............

என்று மணிமேகலைப் பாட்டில் பார்க்கிறோம்.

மக்கள் கண்ணீர் வடித்தால், அதைக் கண்ட மன்னனின் கண்கள் செந்நீர் வடிக்கும். நீதி வேந்தன் ஆட்சிக்குட்பட்ட குடிமக்கள் மன்னன் தங்களை ஆள்வதாக நினைத்ததில்லை. தங்களைத் தாங்களே ஆண்டு கொள்வ

தாக, அல்லது தங்களையும் மன்னர்களாக எண்ணி மகிழ்ந்தனர்.

ராமன் முடி சூட்டிக் கொள்ளப் போகிறான் என்ற செய்தியைக் கேட்டதும், அயோத்தி மக்கள் ஒவ்வொருவரும் தாம்தாமே முடிசூட்டிக்கொள்ளப் போவதாக எண்ணி இறும்பூது எய்தினார்களாம். இதை,

தத்தமக்குற்ற அரசெனத்
தழைக்கின்ற மனத்தர்

என்ற வரிகளில் சித்திரம் தீட்டிக் காட்டுகிறார் செந்தமிழ்ப் புலவர் கம்பர்.

தமிழ் வேந்தர்கள், குடிமக்கள் பாராட்டும் முறையில் பாராண்டது மட்டுமல்ல ; அவர்களின் பழிச்சொல்லுக்கு அஞ்சியும் பதியாண்டனர்.

இம்மாதிரி, மக்கள் மனவழி மன்னர்கள் ஆட்சி புரிந்தது ஒரு காலம். அந்த அரசியலுக்கு "முடியரசு" என்றோ, அல்லது "குடியரசு" என்றோ பெயர்வைக்காமல், "அரசு" என்றே குறிப்பிடுகிறார் திருவள்ளுவர்.

பிற்காலத்தில் மக்களுக்காக மன்னர் ஆளுவதென்ற நிலை மாறி, மக்களுக்காக மக்களே ஆள்வதென்ற 'அரசியல்' ஆரம்பமாயிற்று. அதற்குக் 'குடியரசு' என்றும் பெயர் ஏற்பட்டது.

இந்திய நாடும் பிரிட்டிஷ் முடியரசிலிருந்து விடுதலை பெற்ற பிறகு தன்னைக் குடியரசு நாடு என்று பிரகடனப் படுத்திக் கொண்டது.

உலகில் குடியரசு நாடுகள் பல உண்டு. அவற்றில் மிகப் பெரிய நாடுகள் இந்தியா, அமெரிக்கா ஆகியனவாகும். ஆனால், இவ்விரண்டு நாடுகளிலும் வெவ்வேறு வகையான குடியரசுகள் நிலவுகின்றன.

அமெரிக்கக் குடியரசு, பல்வேறு சுதந்திரக் குடியரசு களின் கூட்டரசாகவே விளங்குகிறது. அதனால்தான், "யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்கா" என்று அதற்குப் பெயர் வைக்கப்பட்டிருக்கிறது.

இந்தியக் குடியரசு, அமெரிக்காவைப் போன்று பல் வேறு குடியரசுகளின் கூட்டரசன்று. பல நிர்வாக யூனிட்டுகளைக் கொண்ட ஏகக் குடியரசாகும்.

அமெரிக்காவில் அதிகாரம் பரவலாக இருக்கிறது. இந்தியாவில் அதிகாரம் மத்தியில் குவிக்கப்பட்டிருக் கிறது. அமெரிக்காவில் மாகாணங்கள் பூரண சுயாட்சி யுடைய குடியரசுகளாக விளங்குவதால் அங்கு மத்தியக் கூட்டரசுக்கும் மாகாணக் குடியரசுக்கும் மோதல் ஏற்படுவ தில்லை. இந்தியக் குடியரசு ஒரு வகையில் குடியரசு நாடான அமெரிக்காவையும், இன்னொரு வகையில் முடியரசு நாடான பிரிட்டனையும் ஏக காலத்தில் பின்பற்றுகிறது. அமெரிக்கக் குடியரசுத் தலைவர் நேரடியாக வயதுவந்த வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இந்தியக் குடியரசுத் தலைவர், மாகாண சட்டசபைகளின் அங்கத்தி னர்களாலும், மத்திய பார்லிமெண்ட், ராஜாங்க சபை உறுப்பினர்களாலுமே தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

ஆரம்பத்தில், இந்தியக் குடியரசுத் தலைவர் வயது வந்த வாக்காளர்களால்தான் தேர்ந்தெடுக்கப்படவேண்டு மென்று அரசியல் நகலில் விதி வகுத்தார்கள். பின்னல் என்ன காரணத்தினலோ, அந்த நகல் திருத்தப்பட்டு விட்டது.

அமெரிக்கக் குடியரசில் சமஷ்டி அரசாங்க நிர்வாகம் குடியரசுத் தலைவரால் நடத்தப்படுகிறது. இந்தியாவில் அரசாங்கத்தை நேரடியாக நடத்தும் பொறுப்பு பிரதம மந்திரியிடமே விடப்பட்டிருக்கிறது. இந்த வகையில்

இந்தியக் குடியரசுத் தலைவர், பிரிட்டிஷ் மன்னருடைய நிலையில் வைக்கப்பட்டிருக்கிறார்.

அமெரிக்காவில் மாகாணக் குடியரசுகளின் கவர்னர்கள் வயது வந்த வாக்காளர்களாலேயே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஆனால், இந்தியாவில் மாகாண கவர்னர்கள் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுகின்றனர். அதுவும் மாகாணத்தில் வாக்காளராகக்கூட அல்லாத வெளியாரையே கவர்னராக நியமிக்கும் வழக்கம் அமுலிலிருந்து வருகிறது.

மாகாண கவர்னர்கள் வயதுவந்த வாக்காளர்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று, 'இந்திய அரசியலமைப்புக் கமிட்டி' ஆரம்பத்தில் அபிப்பிராயப் பட்டது. பின்னர், மாகாண அசெம்பிளி உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று ஆலோசனை கூறியது. அதற்கப்புறம், 'பானல்' முறைப்படி மாகாண அசெம்பிளி நால்வரைத் தேர்ந்தெடுக்க வேண்டும்; அவர்களில் ஒருவரை கவர்னராக குடியரசுத் தலைவர் நியமனம் செய்ய வேண்டும் என்று அரசியல் நகல் கூறியது.

இறுதியாக அதையும் கைவிட்டு, மாகாண கவர்னர்களை ஜனாதிபதியே நேரடியாக நியமனம் செய்யவேண்டுமென்று குடியரசுச் சட்டத்தில் விதி வகுக்கப்பட்டது.

அமெரிக்காவில் மாகாணங்களின் எல்லைகளை மாற்றும்—அதாவது ஒரு மாகாணத்தின் நிர்வாகத்திலிருக்கும் பிரதேசத்தை இன்னொரு மாகாணத்தில் சேர்க்கும் உரிமை சமஷ்டி அரசிடமே இருக்கிறது. ஆனால், சம்பந்தப்பட்ட இரு மாகாணங்களின் மனப்பூர்வமான சம்மதத்தின் பேரில்தான் சமஷ்டி அரசாங்கம் அந்த உரிமையை உபயோகிக்கிறது. இந்திய அரசிய

லமைப்பிலும் மாகாணங்களின் எல்லேகளேத் திருத்தி அமைக்கும் உரிமை மத்திய அரசிடம்தான் இருக்கிறது. ஆனல், சம்பந்தப்பட்ட மாகாணங்களின் சம்மதத்தின் பேரில் செய்யப்படும் வழக்கம் இங்கு நடைமுறையில் திருப்திகரமாக இயங்கவில்லே.

அமெரிக்கக் கூட்டரசில் 48 குடியரசுகள் அங்கம் வகிக்கின்றன. அந்தக் குடியரசுகளின் சுதந்திரத்தை கௌரவிக்கும் முறையில் அமெரிக்க தேசியக் கொடியில் 48 நட்சத்திரக் குறிகள் பொறிக்கப் பட்டிருக்கின்றன. இந்திய மாகாணங்களுக்கு இதுபோன்ற அந்தஸ்து எதுவும் இல்லே.

இந்தியாவை ஆளும் பொறுப்பை கிழக்கிந்தியக் கம்பெனியிடமிருந்து பார்லிமெண்டோடு கூடிய பிரிட்டிஷ் அரசாங்கம் மேற்கொண்டதல்லவா? அப்போது இந்தியாவின் மத்திய அரசாங்கமே எல்லாத் துறைகளிலும் மாகாணங்களின் மீது அதிகாரம் செலுத்தி வந்தது. அப்புறம் மிண்டோ—மார்லி சீர்திருத்தப்படி மத்திய அரசாங்கத்திடமிருந்த அதிகாரங்கள் பல மாகாணங்களுக்கு மாற்றப்பட்டன.

பின்னர் வந்த மாண்டேகு செம்ஸ்போர்டு சீர் திருத்தப்படி மேலும் பல அதிகாரங்கள் மத்திய அரசிடமிருந்து மாகாணங்களுக்குக் கை மாறின.

மீண்டும் 1935-வது வருஷ அரசியல் சட்டப்படி மாகாணங்களுக்குப் பெருமளவு சுயாட்சி வழங்கப்பட்டது.

அதற்கப்புறம், 1946-ல் பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூது குழுவினர் தயாரித்த திட்டப்படி உள்நாட்டுப் போக்குவரத்து, வெளிநாட்டு உறவு, பாதுகாப்பு ஆகிய மூன்று இனங்கள் தவிர, மிச்ச அதிகாரங்கள் உள்பட

எல்லா அதிகாரங்களும் மாகாணங்களுக்கே வழங்கப் பட்டன.

மாகாணங்களுக்கு சுதந்தரம் வழங்கும் இந்தத் திட்டத்தை காங்கிரஸ் மகாசபை ஏற்றுக் கொண்டதோடு, அதன் வழி இந்திய அரசியலே வகுக்க அரசியல் நிர்ணய சபைக்குள்ளும் பிரவேசித்தது. (இந்தியா சமஷ்டி நாடாக விளங்க வேண்டும்; அதன் அங்க மாகாணங்கள் சம அந்தஸ்தும் சுதந்தரமும் உடையனவாக இருக்க வேண்டு மென்பதே ஹரிபுரா காங்கிரஸ் தீர்மானம்.)

கால மாறுதல் காரணமாக பிரிட்டிஷாரின் கருத்தும் மாறியது. மந்திரி சபைத் தூது குழுவினரின் திட்டத்தை வாபஸ் பெற்றுக்கொண்டு 1947 ஆகஸ்டு 15-ல் ஆங்கி லேயர் இந்தியாவிலிருந்து வெளியேறினர். முஸ்லிம் லீக் கோரிக்கைப்படி பாக்கிஸ்தானும் ஏற்பட்டது. பாக்கிஸ் தான் பிரிவினையைத் தவிர்க்கவும், லீகைத் திருப்தி செய்யவும்தான் பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூது குழுவின் திட்டத்தை காங்கிரஸ் ஒப்புக் கொண்டிருந்தது. பின்னர் நிலைமை மாறி, பாக்கிஸ்தான் பிரிவினையும் ஏற்பட்டுவிட்ட பிறகு, காங்கிரஸ் மேலிடத்தார் "பலம் வாய்ந்த மத்திய சர்க்கார்" அமைக்க வேண்டுமென்று அபிப்பிராயப் பட்டனர். அதன்படியே அரசியலையும் தயாரித்தனர்.

தலைவர் நேரு, ஆசாத் போன்ற மக்களின் மதிப்புக்குரிய மாபெரும் தலைவர்கள் மத்திய ஆட்சியை நடத்தும்வரை, பலம் வாய்ந்த மத்திய சர்க்கார் என்ற கொள்கை ஏற்கப் படலாம். மாகாண சுயாட்சிக் கோரிக்கை எதிர்க்கப் படலாம். ஆனல், ஆண்டுகள் போகப் போக, மத்திய ஆட்சியின் அதிகாரங்கள் குறை வதும், மாகாணங்களின் அதிகாரங்கள் அதிகப்படுவதும் நடக்கக் கூடியதுதான்.

இன்றுள்ள நிலையில் இந்தியக் குடியரசுக்கும் அமெரிக்கக் குடியரசுக்குமுள்ள அடிப்படை வேற்றுமைகள் வருமாறு :—

அமெரிக்கக் குடியரசுத் தலைவர் வயது வந்த வாக்காளர்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

இந்தியக் குடியரசுத் தலைவர், மாகாண அசெம்பிளிகளிலும், மத்தியப் பாராளுமன்றத்திலுமுள்ள உறுப்பினர்களால் (சுமார் நாலாயிரம் பேர்களால்) தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

அமெரிக்கக் குடியரசுத் தலைவர் மத்திய அரசாங்கத்தை நேரடியாக நிர்வகிக்கிறார். இந்தியக் குடியரசுத் தலைவர், அரசியல் அமைப்பின் தலைவராக மட்டுமே இருந்து வருகிறார்.

அமெரிக்கக் குடியரசின் அங்கங்கள், பூரண சுயாட்சியுடைய தனியரசுகளாகும். இந்தியக் குடியரசின் அங்கங்கள், பெரும்பாலான விஷயங்களில் வெறும் நிர்வாக 'யூனிட்'டுகளே.

இந்த வேற்றுமைகளுக்கெல்லாம் ஒரு முக்கிய காரணமுண்டு. அமெரிக்கக் குடியரசு பல்லாண்டுகளுக்கு முன்பே தோன்றி நன்கு வளர்ந்து பூரணத்துவம் பெற்றுவிட்டது. இந்தியக் குடியரசு மூன்றாண்டுகளுக்கு முன்புதான் தோன்றியதால், அமெரிக்கக் குடியரசைப் போன்று இனித்தான் வளர்ச்சியடைய வேண்டியிருக்கிறது. ஆம் ; அமெரிக்கக் குடியரசு பூரணச் சந்திரன், இந்தியக் குடியரசு பிறைச் சந்திரன். ஆகவே, நமது குடியரசு முழுமதியாக வளர வேண்டுமென்ற பிரார்த்தனையுடன் அதை வாழ்த்துகிறோம்.

—செங்கோல் 1—2—'56.

## வாழ்க சுதந்திரம்!

ஒரு நாட்டின் வரலாற்றிலே, ஒரு இனத்தின் வாழ்விலே, அந்நியரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவதைவிட ஆனந்தம் தரும் நிகழ்ச்சி வேறு இருக்க முடியாது. ஆகவே, நீண்ட கால அடிமைத்தனத்திலிருந்து இந்தியா விடுதலை பெற்ற நாளான ஆகஸ்டு 15-ல் இந்திய மக்கள் சுதந்திர விழாக் கொண்டாடுவது மகிழ்ச்சிக் குரியதுதான்.

இந்திய நாடு எளிதில் விடுதலை பெற்று விடவில்லை. கட்டபொம்மன் காலத்திலிருந்து 1947 ஆகஸ்டு 15-ந்தேதி வரை இந்திய மக்கள் வெள்ளை ஏகாதிபத்தியத்துக்கு எதிராக விடுதலைப் போர் நடத்தியிருக்கின்றனர்.

அந்தப் போரில் கட்டபொம்மன், பகவத்சிங் போன்ற மாவீரர்கள் பலர் தூக்கில் மாண்டனர். சிதம்பரம் பிள்ளை போன்ற தேசபக்தர்கள் பலர், சிறையில் செக்கிழுத்தும், கல்லுடைத்தும் கடுந்துன்பம் அடைந்தனர்.

லோகமான்ய திலகர், லாலா லஜபதிராய் போன்ற மக்கள் மனங் கவர்ந்த மாபெருந் தலைவர்கள் பலர் நாடு கடத்தப்பட்டனர்.

திருப்பூர் குமரன், பாபுகனு போன்ற இளம் வீரர் பலர் போலீசாரால் கொல்லப்பட்டனர். தேசபந்துதாசர் போன்ற அறிஞர்கள் பலர், வருவாய்க்குரிய தொழிலைத் துறந்து, வறுமையை வலுவில் ஏற்று தேச விடுதலைக் காகத் தியாகங்கள் பல புரிந்திருக்கின்றனர்.

தென்னாப்பிரிக்க வள்ளியம்மை, அன்னை கஸ்தூரிபாய் போன்ற வீராங்கனைகள் பலர் தங்கள் ஆருயிரையே அர்ப்பணம் செய்திருக்கின்றனர்.

இன்னும் தெற்கே பாஞ்சாலங்குறிச்சி, வடக்கே ஜாலியன் வாலா பாக் ஆகிய பிரதேசங்களில் கொல்லப் பட்ட தேசபக்த வீரர், வீராங்கனைகள் பல்லாயிரவராவர்.

ஆம்; இந்திய விடுதலை, விலை கொடுத்துப் பெற்ற சரக்கல்ல; சந்தர்ப்ப வசத்தால் கிடைத்த அதிர்ஷ்டப் பொருளுமல்ல. சர்வ வல்லமை பொருந்திய சாம்ராஜ்யத் துடன் நூற்றைம்பத்தைந்து ஆண்டுகளாகப் போராடிப் பெற்ற வீரப் பரிசு!

ஆகவே, ஆகஸ்டு 15, விடுதலைப் போரில் பங்கு கொண்ட வீராதி வீரர்களுக்கு வெற்றித் திருநாள்; 'எங்கள் சுதந்தர தாகம் என்று தணியுமோ? அடிமையின் மோகம் என்று மடியுமோ?' என ஏங்கிக் கிடந்த கோடானு கோடி மக்களுக்கு இன்பத் திருநாள்.

ஆனால், ஆகஸ்டு 15-ல் தமிழர் பெற்றது கலாச்சார விடுதலையல்ல; பொருளாதார விடுதலையுமல்ல; வெறும் அரசியல் விடுதலைதான்! இதை மறந்து விடாமல், இந்த உண்மையை மறைக்கும் சுகஜீவனக்காரர்களிடம் மயங்கி விடாமல், தமிழ் மக்கள் விடுதலை விழாவைக் கொண்டாட வேண்டும்.

கலாச்சாரத் துறையில் விடுதலையின்றி, பொருளா தாரத் துறையில் விமோசனமின்றி, வெறும் அரசியல்

விடுதலை பெற்றதற்காக விழாக் கொண்டாடுவதா? என்று கேட்கலாம். ஆனால், அரசியல் விடுதலைதான் கலாச்சார, பொருளாதார விடுதலை பெறுவதற்கு முதலாவது படி. ஒரு நாட்டிற்கு அரசியல் விடுதலையின்றேல், கலாச்சார, பொருளாதார விடுதலையுமில்லை. அதனாற்றான், அரசியல் விடுதலை பெற்றதற்கு ஆனந்தப் படுகின்றோம்.

நெடுங்காலம் அன்னிய ஆதிக்கத்தின் கீழ் இருந்து விடுதலை பெறும் ஒரு நாடு பொருளாதார வளப்பமுடைய தாக இருக்க முடியாது. ஆம்; சுதந்தரமென்னும் குழந்தை தரித்திரச் சூழ்நிலையில்தான் பிறக்கும். ஆயினும், அந்தக் குழந்தை தலையெடுத்து வளர வளர தரித்திரம் தானாகவே விடைபெற்றுக் கொள்ளும். அடிமையிலிருந்து விடுதலை பெறும் எல்லா நாடுகளுக்கும் இது பொது இலக்கணம். இந்தியா மட்டும் இந்த இலக்கணத்திற்கு விலக்காக இருக்க முடியாது.

ஆனால், இந்தியா அரசியல் விடுதலை பெற்ற பிறகு, கலாச்சாரத் துறையிலும், பொருளாதாரத் துறையிலும் வேகமாக முன்னேறி வருகின்றதா? இது, விடுதலை விழாவில் பங்கு கொள்ளும் ஒவ்வொரு இந்தியரும் சிந்திக்க வேண்டிய விஷயம்.

இதற்கு, ஒவ்வொரு தரப்பாரும் ஒவ்வொருவிதமாகப் பதிலளிக்கின்றனர்.

விடுதலை பெற்ற ஏழாண்டுகளில் இந்தியா அபாரமாக முன்னேறியிருக்கிறதென்பது ஆளும் கட்சியாரின் அபிப்பிராயம்.

விடுதலை பெற்ற பிறகு இந்தியா கொஞ்சங்கூட முன்னேறவில்லை; பல துறைகளில் பிரிட்டிஷார் காலத்தை விடப் பின்னடைந்திருக்கிறது என்பது எதிர்க்கட்சி

யினரின் குறை. இந்த இரண்டில் எந்த ஒன்றும் முழு உண்மையல்ல ; முழுப் பொய்யுமல்ல !

வெள்ளையரை வெளியேற்றி விடுதலை பெற்ற பிறகு, இந்திய நாடு பல துறைகளிலும் "ஓரளவு" முன்னேற்ற மடைந்திருக்கிறது. மேலும், முன்னேற்ற மடைவதற்கான முயற்சிகளும் எடுக்கப்பட்டு வருகின்றன. இதுதான் முழு உண்மை. ஆனால், விடுதலை பெற்ற ஏழாண்டுகளில் நாடு எவ்வளவு முன்னேறியிருக்க வேண்டுமோ, முன்னேறி யிருக்க முடியுமோ—அந்த அளவுக்கு முன்னேறவில்லை ; முன்னேற்றச் செய்த முயற்சிகளும் தீவிரப்படவில்லை. வேறு பல நாடுகள் அரசியல் விடுதலை பெற்றபோது, அங்கெல்லாம் சமூகப் பொருளாதாரத் துறையிலும் மின்னல் வேகத்தில் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்பட்டன. அத்தகைய புரட்சிகரமான மாறுதல்கள் இந்தியாவில் ஒரு துறையில்கூட ஏற்படவில்லை.

பிற நாடுகளில் விடுதலைப் போராட்டம் பலாத்காரம் மூலம் நடைபெற்றது. ஆகவே, விடுதலை வெறி பிடித்த மக்களே திரண்டெழுந்து அந்நிய ஏகாதிபத்தியத்தை விரட்டி, அதற்குத் துணையாக இருந்த உள்நாட்டுப் பிற்போக்கு சக்திகளையும் தலை குப்புற அடித்து அதி காரத்தைக் கைப்பற்றினர். அதன் விளைவாக, அரசாங்க அதிகாரப் பதவிகளை மட்டுமல்லாமல், நிர்வாக யந்திரத் தையும் விடுதலை வீரர்கள் கைப்பற்றினர். பழைய பிற்போக்காளர்கள் அரசியல் விதவைகளாக்கப்பட்டனர். இந்தியாவின் நிலை இதற்கு நேர்மாறானது. இங்கு விடுதலைப் போராட்டம் ஆயுதத்தின் துணை கொண்டு பலாத்கார முறையில் நடைபெறவில்லை. ஆயுதமின்றி அஹிம்சை முறையில் நடைபெற்றது. ஆகவே, இந்தி யாவில் அரசாங்கம் விடுதலை வெறி கொண்ட மக்களால்

கைப்பற்றப்படவில்லை. சமரசப் பேச்சுக்கள் மூலம் அதிகாரம் கைமாற்றப் பட்டது. ஆகவே பிரிட்டிஷ் மன்னராட்சி காலத்தில் அமைக்கப்பட்ட நிர்வாக யந்திரமே அடிப்படை மாற்றமின்றி இன்றையக் குடியரசு இந்தியாவிலும் இயங்கி வருகின்றது. இதனிடம் புரட்சிகரமான முன்னேற்றத்தை எப்படி எதிர்பார்க்க முடியும்?

மத்தியிலும் சரி, மாகாணங்களிலும் சரி; தற்போது இயங்கி வரும் 'சாம்ராஜ்ய மாடல்' நிர்வாக யந்திரத்தை அப்படியே நொறுக்கிப் போட்டு விட்டு, சமுதாயத்தின் அடித் தளத்திலுள்ள மக்களின் எண்ணங்களை எதிரொலி செய்யும் புதிய நிர்வாக யந்திரத்தை அமைத்தாலொழிய எந்தத் துறையிலும் இந்தியா புரட்சிகரமாக முன்னேற முடியாது.

இந்த ஜனநாயக யுகத்தில் ஆளும் கட்சியிடம் முற்போக்குக் கொள்கைகளும், புரட்சிகரமான செயல் திட்டங்களும் இருந்தாலொழிய ஆட்சியிடம் அந்த அம்சங்களை எதிர்பார்க்க முடியாது. இந்தியாவில் ஆளும் கட்சியாக இருக்கும் காங்கிரஸ், வியக்கத் தக்க வகையில் பிற்போக்காளர்கள் முகாமாக மாறிக் கொண்டு வருகிறது. மக்கள் நலன்களுக்கு விரோதமான வகுப்புவாத, முதலாளித்துவப் பிற்போக்கு சக்திகள் காங்கிரஸைக் கைப்பற்றி விட்டன. இந்த உண்மையை விரும்பியோ, விரும்பாமலோ காங்கிரஸ் தலைவர் ஜவஹர்லால் நேருவே அடிக்கடி வெளியிட்டு வருகிறார். இத்தகைய காங்கிரஸ் கட்சியின் ஆதிக்கத்திலுள்ள மாகாண அரசாங்கங்களும், மத்திய அரசாங்கமும் நாட்டைப் புரட்சிகரமான முன்னேற்றத்திற்குக் கொண்டு செல்லுமென எப்படி எதிர்பார்க்க முடியும்?

இந்தியா புரட்சிகரமாக முன்னேற வேண்டுமானல் முதலில் ஆளும் சக்தியாக இருக்கும் காங்கிரஸ்காரர்கள் உண்மையான முற்போக்காளர்களாக இருக்க வேண்டும். இந்தியா விடுதலை பெற்ற பிறகு காங்கிரஸ் கட்சியில் முற்போக்காளர்களின் எண்ணிக்கை ஏறி யிருக்க வேண்டும். அதற்கு மாருக, குறைந்து கொண்டே வருகிறது. காங்கிரஸ்காரர்கள் தனிப்பட்ட முறையில் முற்போக்கான எண்ணங்களை வெளியிடுவது கூட கட்சிக் கட்டுப்பாட்டை மீறிய குற்றமாகக் கருதப்படுகிறது. கடந்த காலத்தில் காங்கிரஸ் மகாசபை ஒப்புக் கொண்டுள்ள முற்போக்கான கொள்கைகளை அமுல் நடத்தும்படி காங்கிரஸைத் தூண்டும் உரிமைகூடத் தனிப் பட்ட காங்கிரஸ்காரர்களுக்கு மறுக்கப்படுகிறது.

தற்போது, அதிகார பீடத்தில் அமர்ந்திருக்கும் மாபெரும் தலைவர்கள் விடுதலைப் போராட்ட காலத்தில் தாங்கள் கொண்டிருந்த முற்போக்கான கொள்கைகளி லிருந்து பெரிதும் மாறிவிட்டார்கள். கடந்த காலத்தில் மக்களிடையில் எந்த எந்தக் கொள்கைகளைச் சொல்லி காங்கிரசைப் பலப்படுத்தினுர்களோ, அந்தக் கொள்கை களைப் பிறர் சொல்லக் கேட்கவும் சகிப்புத் தன்மையற்று விட்டார்கள்.

> "ஜன சமூகத்திலே அடித்தட்டுகளில் இருக் கும் மக்களின் சுதந்திரத்தைக் கொண்டுதான் நாட்டின் சுதந்தரத்தைக் கண்டு கொள்ள முடியும்".

இது, தலைவர் நேரு; விடுதலைப் போராட்ட காலத்தில் தாம் எழுதிய 'சுயசரிதை'யில் குறிப்பிட்டுள்ள மணி வாக்கு.

இந்தக் கண்ணேட்டத்துடன் தற்போதைய மாகாண, மத்திய அரசாங்கங்களின் நிர்வாகத்தை ஆராய்ந்து குண தோஷம் கூறத் துணிப்பட்ட காங்கிரஸ்காரர்களுக்கு உரிமை இல்லை.

> "ஜனங்களிடையே சோஷலிச எண்ணங்களைப் பரப்ப வேண்டும். முக்கியமாக அரசியல் உணர்ச்சி பெற்ற காங்கிரஸ் ஊழியர்களிடையே சோஷலிசக் கொள்கைகளைப் பரப்ப வேண்டும். ஏனென்றால், சமயம் வரும்போது நம்முடைய லட்சியத்தை நோக்கி இன்னேர் அடி முன்னே எடுத்து வைக்க நாம் தயாராக இருப்போம்."

இதுவும் தமது சுயசரிதையில் தலைவர் நேரு கூறுவது. இதன்படி, இன்றைய காங்கிரஸில் அங்கம் வகிக்கும் எவரும் சோஷலிசக் கொள்கைகளைத் தீவிரமாகப் பிரச்சாரம் செய்ய உரிமையுண்டா? இல்லை என்பது எல்லோருக்கும் தெரியும்.

> "பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவைப் பிரித்திருப்பது போலல்லாமல், தேசீய காங்கிரஸ் மகாசபையானது இந்தியாவை மொழிவாரியாகப் பிரித்திருப்பது உனக்குத் தெரிந்திருக்கலாம். ஏறக்குறைய ஒரே விதமான நடை, உடை, பாவனை உடைய ஒரு மொழி பேசும் மக்களை ஒரு மாகாணத்தில் சேர்த்துவிடுவதுதான் சிறந்த ஏற்பாடு............எதிர்காலத்தில் இந்தியாவை மாகாணங்களாகப் பிரிக்கும்போது அவ்வப் பிரதேசத்தின் பாஷையையே முக்கியமாகக் கவனிக்கப்படுமென்பதில் ஐயமில்லை."

இது 'உலக சரித்திரம்' என்ற பெயரில் வெளியிடப் பட்டுள்ள, தலைவர் நேரு தமது மகளுக்கு எழுதியுள்ள

கடிதங்களின் தொகுப்பு நூலில் ஒன்பதாவது கடிதத்தின் ஒரு பகுதி.

ஆம்; இன்றையப் பிரதமர் நேரு, பண்டித நேருவாக இருந்த காலத்தில் மாகாணப் புனரமைப்பில் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டிய விஷயம் **மொழிதான்** என்று முடிவு கூறினர். இன்றே, மாகாணப் புனரமைப்பில் மொழிக்கு முக்கியத்துவம் கொடுக்கக் கூடாதென்று தெளிவாகத் தீர்ப்புக் கூறிவிட்டார். அவரைப் பின்பற்றும் காங்கிரஸ் நிர்வாகிகள், மொழிவாரி மாகாணக் கோரிக்கையாளரை, 'மாகாணப் பித்தர்கள்' என்றும், 'மாகாண வெறியர்கள்' என்றும் ஏசுகின்றனர். எவ்வளவு மகத்தான மாறுதல்!

மாகாணங்களில் அரசாங்க நிர்வாகம் மாகாண மொழிகளிலேயே நடைபெற வேண்டுமென்பது, இந்தியா விடுதலை பெறுவதற்கு முன்பு காங்கிரஸின் அடிப்படைக் கொள்கையாக இருந்து வந்தது. இப்போது மாகாண மொழிக்குரிய இடத்தை ஆங்கிலத்திடமே விட்டு வைப்பதா, அல்லது இந்திக்குக் கொடுப்பதா?—என்ற விவாதம் காங்கிரஸ் தலைவர்களிடையே கடுமையாக நடைபெறுகிறது. மற்றபடி, மாகாண மொழிகளின் உரிமைகள் பற்றி பெருந்தலைவர்கள் யாரும் பேசுவதில்லை.

> "சத்தியத்தையும் அகிம்சையையும் பறிகொடுத்துவிட்டு அதனால் வரும் சுயராஜ்யத்தை நான் எவ்வாறு ஏற்றுக்கொள்ள மாட்டேனே, அதுபோல தாய்மொழியைப் புறக்கணித்துவிட்டுவரும் சுயராஜ்யத்தையும் ஏற்றுக்கொள்ள மாட்டேன்."

இது, காந்திஜி பெயரில் வெளியாகியுள்ள "நமது மொழிப் பிரச்னை" என்ற ஆங்கில நூலின் தமிழ் மொழி பெயர்ப்பின் 49-ம் பக்கத்தில் காணப்படுவது.

ஆம், தாய்மொழிக்கு உரிமை தரப்படாத சுதந்திரம், உண்மைச் சுதந்திரமாக காந்தியடிகளுக்குப் படவில்லை. இதே கருத்தை இன்றையக் காங்கிரஸ் வட்டாரத்திற்குள் வற்புறுத்திப் பேசினல், அப்படிப் பேசுவோர் காங்கிரஸிலிருந்து வெளியேற்றப்படுகின்றனர்.

காங்கிரஸ் கட்சி மீதோ அல்லது பிரதமர் நேரு போன்ற காங்கிரஸ் தலைவர்கள் மீதோ கெட்ட எண்ணம் கற்பிக்க வேண்டுமென்ற நினைப்பில் இந்தக் குறை பாடுகளை நான் எடுத்துக் காட்டவில்லை.

இந்தக் கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிட்டிருப்பது போல எண்ணற்ற வீரத் தியாகிகளின் உயிர்களைப் பணயமாகக் கொடுத்து, அவர்கள் செந்நீரால் எழுதப் பட்ட இந்திய சுதந்திர சாஸனம் அழியாமல் பாதுகாக்கப் படவேண்டும் என்ற ஒரே ஆவலினல்தான் இவ்வளவை யும் கூறினேன்.

விடுதலை விழாவில், குறைகளையெல்லாம் கவனத்திற்குக் கொண்டுவந்து அவற்றைப் போக்கிக் கொள் வதற்குத் திட்டமிட வேண்டியது காங்கிரசின் கடமை யாகும்.

வாழ்க சுதந்திர இந்தியா !

—"தமிழன் குரல்" ஆக. 54.

# சோஷலிஸ்ட் யார் ?

ஒருவர் சோஷலிஸ்ட் ஆவதற்கு சில லட்சியங்களும் லட்சணங்களும் வேண்டும்.

தனது வறுமையில் செம்மை காண்பதும், பிறருடைய வறுமையைக் கண்டு சிந்தை நோவதும் ஒரு சோஷலிஸ்டுக்குத் தேவைப்படும் மனப் பண்புகளாகும்.

தனது தேவைகளுக்குத் தானே உழைப்பதும், பிறர் உழைப்பால் வாழ விரும்பாததும் உண்மை சோஷலிஸ்டின் வாழ்க்கை நெறிகளாகும்.

இந்த மனப் பண்புகளும், வாழ்க்கை நெறிகளும் காந்தீய சோஷலிஸ்டின் இலக்கணங்களாகும். இந்த இலக்கணங்களை உடைய சோஷலிஸ்டுகளின் எண்ணிக்கை பெருகினால் முதலாளித்துவ சமுதாயத்தின் வாழ்நாட்கள் சுருங்கிவிடும்.

'சோஷலிச'மென்பது பொருளாதார ஏற்றத் தாழ்வைப் போக்கும் தத்துவம் மட்டுமல்ல; மனித சமுதாயத்தின் பல்வேறு துறைகளிலுமுள்ள குறைபாடுகளையும், கொடுமைகளையும் போக்கும் தர்மமும் ஆகும்.

அதனாற்றான், சோஷலிச சமுதாயம் எப்படி இருக்குமென்று கற்பனை செய்த கம்பர், 'அன்பு அரும்பி, தருமம் மலர்ந்து, போகக் கனி ஒன்று பழுத்தது போலும்' என்று பாடினார். 'சட்டத்தின் மூலம் பொருளாதார ஏற்றத் தாழ்வைப் போக்கிய பிறகுதான், சமுதாயத்தில் நீதி தழைக்கும் என்று கூறலாம். இது ஓரளவு உண்மைதான். என்றாலும், தம்மை சோஷலிஸ்ட் என்று கூறிக் கொள்வோர் சீர்திருந்துவதற்குக் கூட சட்டம் தேவையா? வரவிருக்கும் சோஷலிச சமுதாயத்தின் மாதிரிப் பிரஜைகளாக இன்றைய சோஷலிஸ்டுகள் வாழ்ந்து காட்ட முடியாதா? முயன்றால் முடியும்.

உள்ளத்தில் பணக்காரராக வேண்டுமென்ற ஆசையை வைத்துக் கொண்டு வெளியில் பணக்காரத் தன்மையைப் பழித்துப் பேசுவதால் பயன் விளையாது. நடைமுறையில் ஜாதி வேற்றுமையைக் கடைப்பிடித்து, அந்த வேற்றுமை வழிப்பட்ட ஏற்றத் தாழ்வுகளைக் கண்டிப்பது பண்பன்று. முதலாளி—தொழிலாளி என்ற வர்க்க வேற்றுமையேயன்றி, மற்ற வேற்றுமைகள் எல்லாமும் மண்மூடிப் போகவேண்டும். அந்த வேற்றுமை யொழித்து வாழ்வோரே சோஷலிஸ்டுகளாக இருக்க முடியும்?

உண்மையிலேயே சோஷலிச சமுதாயத்தை விரும்புவோர், சோஷலிசத்துக்கு விரோதமான சிந்தையிலிருந்தும், செயல்களிலிருந்தும் தங்களை விடுவித்துக் கொள்ள வேண்டும். மேடையேறிக் கொல்லா விரதத்தின் பெருமை பற்றிப் பிரசங்கம் செய்வோர் தாமும் கொல்லா விரதம் பூண்டவராக இருக்க வேண்டுமல்லவா? அப்படி இல்லாவிடில், அவர் செய்யும் கொல்லா விரதப் பிரசாரத்திற்கு மதிப்பேது? 'எம்மோடு வராதவர்கள் எல்லாம் எம்

விரோதிகள்' என்ற மனப்பான்மையும் சோஷலிசத்திற்கு விரோதமானது. இன்று நம்மை வசை பாடுவோரும், நாளை நம்மோடு வரக் கூடியவர்களே என்ற நம்பிக்கையும், அதைச் சாத்தியமாக்குவதற்கான நடை முறையும் கொண்டவர்களே சோஷலிஸ்டுகள்.

ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் பார்க்கின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.

என்ற திருக்குறள் வேறு யாரையும்விட, சோஷலிசத்தில் நம்பிக்கையுடையோர் சிந்திக்கத் தக்கதாகும்.

'செங்கோல்'— 3—4—55.

## வாக்காளரும் தேர்தலும்

இந்திய அரசியல் நிர்ணய மன்றத்தார் வகுத்துத் தந்த குடியரசு அமைப்புக்கான தேர்தல், அண்மையில் நடைபெறவிருக்கிறது. வயது வந்த மக்கள் எல்லோரும் வாக்களிக்கக்கூடிய தேர்தல் இந்தியாவின் வரலாற்றிலேயே இப்போதுதான் முதன் முதலாக நடைபெறப் போகிறது. ஆகவே, புதிய தேர்தலைப் பற்றி ஆர்வம் கொண்டுள்ளோர்கூட, அதன் முடிவு என்னுகுமோ என்ற ஐயம் உடையோராக இருக்கின்றனர்.

வயது வந்த ஒரே காரணத்திற்காக மட்டும் மக்களுக்கு வாக்குரிமை அளித்தது தவறு என்று வாதிப்போரும் உண்டு. கல்வியறிவற்ற மக்கள் வாக்காளருக்குள்ள கடமையை அறிந்து நடப்பார்களா ?—என்பது அவர்கள் கேள்வி.

எழுதப் படிக்கத் தெரியாத மக்களுக்கு தேசபக்தி இருக்காதென்பது அவர்கள் எண்ணம் போலும் ! உண்மையைச் சொல்லப் போனுல், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் கொடுங்கோலிலிருந்து இந்தியாவை விடுவித்து, அதைக் குடியரசு நாடாக்கியதில் எழுதப் படிக்கத்

தெரியாத ஏழை மக்களுக்கே பெரும் பங்கு உண்டு. பொருளில் ஏழையாக இருப்போரெல்லாம், புத்தியிலும் ஏழையாகத்தான் இருப்பார்கள் என்று முடிவு கட்டுவது தேசத்தையே அவமதிப்பதாகும்.

மக்கள் அறிவு பெறுவதற்கான மார்க்கங்கள் இரண்டு. ஒன்று கல்வி ; இன்னொன்று கேள்வி. கல்வி மூலம் அறிவுபெற வசதியற்ற மக்கள், கேள்வி மூலம் ஞானம் பெற வாய்ப்புண்டு. மேலும், இந்தியக் குடியரசு, ரஷ்யாவைப் போன்று ஒரே கட்சி, ஒரே கொள்கை, ஒரே தலைமையைக் கொண்ட சர்வாதிகாரக் குடியரசு அன்று. பல கட்சிகளுக்கும் கொள்கைகளுக்கும் இடந்தரக்கூடிய ஜனநாயகக் குடியரசு. ஆகவே, இந்தியாவில் இன்று ஆளும் கட்சியாகிய காங்கிரசுக்கு எதிர்க் கட்சிகள் தோன்றுவது இயற்கை. எனவே, தேர்தல் காலத்தில் ஒன்றுக்கொன்று மாறுபட்ட கட்சிகள் செய்யும் பிரச்சாரங்களின் மூலமே வாக்காளர்கள் அரசியல் அறிவைப் பெற முடியும். "கற்றிலனாயினும் கேட்க" என்பது வள்ளுவர் இட்ட கட்டளையன்றோ ! கல்வியில் சிறந்த கம்பரும், தாம் காண விரும்பிய லட்சிய உலகில் வாழும் மக்களுக்கு, "வெண்மை இல்லை பல் கேள்வி மேவலால்" என்கிறார். அறிவின் சிகரத்திற்குச் செல்ல ஏட்டுக் கல்வி அவசியமே. என்றாலும், அறியாமை அகலுவதற்குக் கேள்வி ஞானம் ஒன்றே போதுமானதென்பது தமிழ்ப் புலவோரின் கொள்கை.

நடைமுறையிலுள்ள குடியரசு அமைப்பானது குற்றங் குறைகளே இல்லாதது எனக் கூற முடியாது. அகற்றப் படவேண்டிய குறைகளும், புகுத்தப்பட வேண்டிய முற் போக்குக் கொள்கைகளும் நிறைய உண்டென்பதை, புதிய அரசியலைத் தயாரிப்பதில் பெரிதும் பங்கு கொண்ட

டாக்டர் அம்பேத்காரே ஒப்புக் கொண்டுள்ளார். ஆகவே, இந்திய அரசியல் கட்சிகள் பரஸ்பரம் வசை பாடுவதிலும் வம்பளப்பதிலும் கவனம் செலுத்துவதைவிட்டு, புதிய அரசியலிலுள்ள குறைகளைப் போக்கி, கொள்கைகளைப் புகுத்தும் லட்சிய நோக்குடன், தேர்தல் திசையில் கவனம் செலுத்த வேண்டும். புதிய அரசியல் அமைப்பானது திருத்தத்திற்கே இடமில்லாத தீர்ப்பன்று.

எந்த நாட்டிலும் சரி, எந்தக் காலத்திலும் சரி, அரசியல் அமைப்பானது முடிந்த ஒரு முடிவாகக் கருதப் பட்டதே இல்லை. கால மாறுதலுக்கு ஏற்பவும், மக்கள் கருத்து வளர்ச்சிக்கு ஒப்பவும் உலக நாடுகள் பலவற்றிலும் அவ்வப்போது அரசியல் அமைப்புகள் சட்டபூர்வமாகவும், சமாதான முறையிலும் மாற்றியமைக் கப்பட்டு வந்ததை நாம் கண்டிருக்கிறோம். இந்திய அரசியல் அமைப்பும் கால மாறுதலுக்கு ஏற்ப, வளைந்து கொடுக்கும் பான்மையில்தான் வகுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, அதில் லட்சியரீதியாக மாறுதல் காணக் கட்சிகள் வேலை செய்யுமானல் அக்கட்சிகளை மக்கள் மனமார வரவேற்பர் என்பதில் ஐயமில்லை.

வரப்போகும் தேர்தலில் கட்சிகளின் கடமை மகத் தானது. ஒழுக்க நெறியில் உலகுக்கே வழி காட்டியாக இருந்தது இந்திய நாடு. ஆனல், இன்றோ, வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் மக்களிடையே ஒழுக்கம் வெகு வாகக் குறைந்துவரக் காண்கிறோம். ஆகவே, தேர்தலில் போட்டியிடும் கட்சி ஒவ்வொன்றும், இந்திய சமுதாயத்தை ஒழுக்கத்துறையில் உயர்த்துவதையே தங்கள் முதல் கடமையாகக் கொள்ள வேண்டும். கட்சிகள் தத்தம் அபேட்சகரைத் தேர்ந்தெடுக்கும்போது அவரது கல்வி, அறிவு, அரசியல் கொள்கை, நிர்வாகத் திறமை ஆகிய

வற்றைக் கவனிப்பது போலவே, சொந்த வாழ்விலும் பொது வாழ்விலும் அவர் எவ்வளவு தூரம் ஒழுக்க முடையவராக இருந்து வந்திருக்கிறார் என்பதையும் கவனிக்க வேண்டும். அபேட்சகரது ஒழுக்க நெறி ஒன்றையே முக்கியமாகக் கவனிக்க வேண்டும் என்றாலும் மிகையன்று.

இது ஜனநாயக சகாப்தம். இந்தியாவும் ஜனநாயகக் கொள்கை வழி செல்லும் நாடு. ஆகவே, இங்கு அரசியல் கட்சிகள் அனந்தம் தோன்றும். தேர்தல் காலம் நெருங்க நெருங்க கட்சிகளின் தோற்றமும், கொள்கைப் போராட்டமும் அதிகப்படுவது இயற்கை. வாக்காளர்கள் அதைக் கண்டு அலுப்படைவதோ, ஆத்திரம் கொள்வதோ கூடாது. 'ஜனநாயகம்' என்பது ஒரு மரத்தைப் போன்றது என்றால், அரசியல் கட்சிகளை அம்மரத்தோடு பொருந்திய கிளைகளுக்கு ஒப்பிடலாம். கிளைகளற்ற மரம் பசுமை இழந்து பட்டுப்போவது போல, கட்சிகள் இல்லாத நாட்டில், ஜனநாயகம் சிறப்பிழந்து செத்துவிடுவது திண்ணம். கட்சிகள் மாறி மாறி ஆட்சி பீடத்தைக் கைப்பற்றுவது அரசியல் விபத்தன்று ; ஜன நாயக தேவதையின் விளையாட்டேயாகும்.

மாகாணங்களிலும் சரி, மத்திய ஆட்சியிலும் சரி; பாராளு மன்றங்களில் ஆளும் கட்சிக்குப் பலமான எதிர்க் கட்சி அமையும்படி செய்ய வேண்டியது வாக்காளர்களின் கடமையாகும். ஏதோ பெயரளவுக்கு எதிர்க்கட்சி இருந்தால் மட்டும் போதாது. ஆளுவோர் தவறு செய்யும் காலத்தில் அதை எடுத்துக்காட்டி இடித்துக் கூறி வெற்றிபெறும் அளவுக்கு எதிர்க்கட்சி சக்தி பெற்றதாக இருக்க வேண்டும். இன்றுள்ள நிலையில்

இந்தியாவின் ஆளும்கட்சியான காங்கிரசே மக்களிடையில் அதிக செல்வாக்குப் பெற்றிருக்கிறது. காங்கிரசுக்கு எதிர்க்கட்சி என்று சொல்லக்கூடிய அளவுக்கு இந்தியாவில் எந்தக் கட்சியும் இன்னும் பலம் பெறவில்லை. அடுத்த பொதுத் தேர்தலுக்குப் பிறகும் காங்கிரசே ஆளும் கட்சியாக இருக்குமென்பது அரசியல் ஞானமுடைய எவரும் ஒப்புக் கொள்ளக்கூடிய உண்மை. ஆகவே, காங்கிரசின் பொறுப்பும் மகத்தானது. வரப்போகும் தேர்தலில் காங்கிரசுக்கு வெளியேயுள்ள ஆற்றல் படைத்த அரசியல் வாதிகள் பாராளும் மன்றங்களில் இடம் பெறுவதற்கு காங்கிரஸ் அனுமதிக்க வேண்டும். காங்கிரசுக்கு எதிர்க் கட்சியினராயினும் சரி, அவர்களிலும் சட்டத்திற்கும் சமாதானத்திற்கும் மதிப்புக் கொடுக்கக் கூடியவர்கள் உண்டு. அத்தகையவர்கள் பாராளு மன்றங்களில் காங்கிரசுக்கு எதிர்க்கட்சியினராக இருப்பதால் கேடொன்றும் நேராது. புதிய அரசியல் அமைப்புப்படி வகுப்பு வாதத் தொகுதிகள் ரத்து செய்யப்பட்டு விட்டன. இது வரவேற்கத் தக்கதே. ஆனால், இதனால் சிறுபான்மை வகுப்பினர் புறக்கணிக்கப்படும் நிலை ஏற்படக்கூடாது. வகுப்புவாத வெறியாட்டங்களுக்கு வாக்காளர்கள் இரையாக வொட்டாத சூழ்நிலையை ஏற்படுத்தித்தர வேண்டியது ஆளும் கட்சியினரின் அவசரக் கடமையாகும். அரசியல் ஞானமும் நிர்வாக ஆற்றலுமுடைய ஒரு கிறிஸ்துவரோ அல்லது ஒரு முஸ்லிமோ பெருவாரியான இந்து வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்படும் போதுதான் வகுப்புவாதம் அரசியலிலிருந்து மறையும்.

வகுப்புப்பற்றைவிட மிகக் கேவலமானது வகுப்பு வெறி. அந்த வகுப்பு வெறியர்களைத் தேர்தல் முகாமில் நுழைய விடக்கூடாது. சாதீய அமைப்புகளின்

பேராலோ, சாதிகளின் பேராலோ நிற்கும் அபேட்சகர்களை வாக்காளர்கள் தயவு, தாட்சண்யம் இன்றி நிராகரிக்க வேண்டும். அத்தகையவர்களைத் தேர்ந்தெடுப்பது ஜனநாயக வளர்ச்சிக்குத் தடை செய்வதாகும்.

—'முரசு' மே. 1950.

# புரட்சித் திருநாள்

*மே முதல் நாளை, உலகமெங்குமுள்ள பாட்டாளி மக்கள், தங்கள் வர்க்கத்தின் உரிமைத் திருநாளாகக் கொண்டாடுகின்றார்கள். அந்தப் புரட்சித் திருநாளின் பூர்வ வரலாறு வருமாறு:—*

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில், அமெரிக்கப் பாட்டாளி மக்களை அங்குள்ள முதலாளி வர்க்கம் கொடுமையாக நடத்தியது. இதனால் கள்ளமறியா உள்ளம் படைத்த பாட்டாளி வர்க்கத்திடை, முதலாளி வர்க்கத்திற்கெதிராக வஞ்சம் வளரலாயிற்று. முதலாளிகளும் தொழிலாளிகளும் உற்பத்தியைப் பெருக்குவதற்கான தொழிற்சாலையில் 'நண்பர்களா'கச் சந்திப்பதற்குப் பதிலாக, பகைவர்களாகச் சந்திக்கலாயினர்.

உயிர் சுமக்கும் உரிமை தவிர, ஏனைய உரிமைகளனைத்தையும் இழந்துவிட்ட அமெரிக்கத் தொழிலாளர்கள், முதலாளித்துவத்திற்கு எதிராக வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர். இதன் விளைவாக, 1880 முதல் 1890-ம் ஆண்டுவரை பத்தாண்டுகள் வேலை நிறுத்தங்கள் பல விட்டு விட்டு நடந்தன. இதில், 1886-ம் ஆண்டு மே முதல் தேதியன்று அரசாங்கப் படையினருக்கும் தொழிலாளர்களுக்கும் அமெரிக்க வீதிகளிலே கைகலந்த போர் நடைபெற்றது.

அழகிய சிகாகோ நகரின் வீதிகளில் இருதரப்பினரின் ரத்தமும் ஆறெனப் பாய்ந்தது; பிணங்கள் குன்றுகளெனக் குவிந்தன. இந்தக் கலகத்திற்குக் காரணஸ்தர்களெனக் குற்றஞ் சாட்டப்பட்ட பல தொழிலாளர்கள், 'நீதி'யின் பெயரால் தூக்கிலிடப்பட்டனர்! ஆம்; உலகமெங்குமுள்ள பாட்டாளி வர்க்கத்தினரின் உரிமைப் போரைத் துவக்கி வைத்து அதற்கெனக் களபலியும் கொடுத்தனர் அமெரிக்கத் தொழிலாளர்கள். இதுவே, மேதின வரலாற்றின் சுருக்கம்.

*இயற்கை வகுத்தது ஒரு நாளைக்கு இருபத்து நான்கு மணி நேரம். அதில், உறங்கப்புகும் நேரம் தவிர எஞ்சிய நேரம் முழுவதும் உழைத்தே தீர வேண்டுமென்று கட்டளையிட்டது முதலாளி வர்க்கம்.*

*இந்த அநீதிக்குச் சட்டத்தின் மூலம் ஆதரவு தந்தது அதிகார வர்க்கம்.*

*முதலாளி வர்க்கத்தின் கொள்ளைக்கும் ஆட்சியாளரின் கொடுங்கோலுக்கும் அடங்கி வாழ்வதுதான் ஆண்டவனுக்குத் திருப்தியென சாமியின் பெயரால்— சமயத்தின் பெயரால் சகிப்புத் தன்மையைப் போதித்தது புரோகித வர்க்கம்.*

*ஆம்; அனுதி காலந்தொட்டே ஆதிக்க வாதிகளின் கொடுமைகள் எத்தனை யுண்டோ அத்தனைக்கும் அடங்கி வாழ்ந்து வந்ததுதான் பாட்டாளி வர்க்கத்தின் வரலாறு. இந்த மானங்கெட்ட வரலாற்றைத் தீயிலிட்டுப் பொசுக்கி எட்டு மணி நேர வேலை; எட்டு மணி நேரக் களியாட்டம்; எட்டு மணி நேர ஓய்வு எனத் திட்டமிட்டு அந்தத் திட்டத்திற்குச் சாதகமாக ஆட்சியாளர் சட்டம் செய்ய வேண்டுமெனப் போராடி, அந்தப் போராட்டத்தில் பல வீரத் தியாகிகளைப் பலி கொடுத்த நாள்தான்— அவ்வீரர்களின் செந்நீர் அமெரிக்க வீதிகளிலே ஆறெனப் பெருகியோடிய*

நாள்தான்—மே திருநாள். எனவே, மே திருநாள் உண்டு களிக்கும் பண்டிகை நாட்கள் போன்றதன்று ; உடைமையாளர்களின் கொடுமைகளுக்கு எதிராக, "உலகத் தொழிலாளர்களே, ஒன்றுபடுங்கள் !" என்று உழைப்பாளி வர்க்கத்தினருக்கு அமெரிக்கத் தொழிலாளர்கள் அழைப்பு விடுத்த நன்னாளாகும்.

முதலாளி வர்க்கத்தின் கொடுமைகளுக்கு முடிவு கட்டுவதோடு நில்லாது, "சமயமுளபடிக்கெல்லாம் பொய் கூறி அறங்கொன்ற சுமடர்கள் கோத்து வைத்த சாத்திரப் பொய்ம்மைகள் அனைத்தையும் பொசுக்கியே தீருவோம்" எனக் கோடானு கோடிப் பாட்டாளி மக்கள் தங்கள் கைகளை உயர்த்திச் சபதம் செய்தநாள் மே திருநாள்.

ஆம் ; உழைப்பாளி வர்க்கத்தைப் பல கூறுகளாக்கி, ஒன்றுக்கொன்று எதிரிடையாகச் சண்டையிடத் தூண்டிய தத்துவங்களுக்குத் தொழிலாளி வர்க்கம் தலை முழுக்குப் போட்ட நாளுமாகும் மே திருநாள்.

தமிழர், தனி நாட்டினர் ; தனி மொழியினர் ; தனி இனத்தினருமாவர். என்றாலும், தாங்கள் தனி தேசிய இனத்தவர் என்பதற்காக இந்தியாவிலுள்ள பிற தேசிய இனங்களோடும், உலக மக்களோடும் உறவு கொள்ளாமல் ஒதுங்கி வாழ வேண்டுமென்று தமிழ் மக்கள் எந்த நாளும் எண்ணியதேயில்லை. அது மட்டுமன்று ; தமிழினத்தவர் பண்பாடு ஒதுங்கி நிற்பதற்கு மாறாக, உலக மக்களோடு உறவு கொண்டு வாழுமாறே வற்புறுத்துகிறது.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

"உலகிலுள்ள எல்லா ஊர்களும் எனது ஊர்கள் ; எல்லா மக்களும் எனது சுற்றத்தார்" என்ற புறநானூற்றுப்

புலவனின் கொள்கையே, தமிழ் இனத்தவரின் சர்வ தேசிய கோஷம் எனலாம்.

தமிழ் இனத்தின் பண்பென்பது சாதிக்கு ஒரு நீதி சொல்லும் சாத்திரங்களின் போதனை யன்று. "ஒருவன் இருந்துண்பதும், இன்னொருவன் இரந்து திரிவதும் அவனவன் பாவ—புண்ணியங்களின் பலன்" என்று கூறும் பங்கப்பட்ட வாதம் சங்க இலக்கியங்களுக்கு ஒத்ததன்று.

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்

"ஒரு நாட்டின் அமைப்பில் (அரசில்), மக்கள் பிழைக்க வழியின்றிப் பிச்சையெடுத்து அலைய நேருமாயின், அந்த அமைப்பை வகுத்ததற்குக் காரணமானவன் (அரசன்) கெட்டொழிவானாக" என்று, திறமையற்ற ஆட்சிக்குச் சாபம் கொடுக்கிறார் வள்ளுவர். இதுவே தமிழரது அரசியல் கொள்கை.

சங்க கால இலக்கியங்களை நுணுகி ஆராய்வார்க்கு, தமிழ்ப் பண்பென்பது பூர்ஷ்வாக்களின் பண்பன்று. அதற்கு எதிரிடையானதே என்பது எளிதில் புலனாகும். அப்படியே, தமிழ்க் கலைகள் என்பவையும் முதலாளிகளின் சுரண்டற் கருவிகளல்ல; உலகப் பாட்டாளி மக்களின் உரிமைக்கும், அவர் தம் உறவுக்கும் துணை செய்யும் பெருமை மிக்க சாதனங்களாகும்.

ஒருவன், தனது உழைப்பால் பெற்ற பொருள்கள் அனைத்தும் தனக்கே உரித்தெனப் பதுக்கி வைத்து வாழாமல், எல்லோருக்கும் பகுத்துத் தந்து மகிழ வேண்டுமென்பதே தமிழினத்தின் பொருளாதாரக் கொள்கை.

தன்னுயிர்போல மன்னுயிரையும் எண்ணுவதே தமிழ் மக்களின் சமய நெறி.

ஏற்றமும் இழிவும் இல்லாது, மக்கள் எல்லோரும் ஓர் நிறை என வாழும் சமதர்ம சமுதாயமே தமிழரின் லட்சிய உலகம்.

இத்தகைய உயர்ந்த நெறிகளைக் கொண்ட தமிழர் தனி இனத்தவராய், தனி நாட்டவராய் வாழ விரும்புவதால், வளர்ந்து வரும் ஒரே உலகக் கொள்கைக்கோ உழைப்பாளி மக்களின் உரிமைப் போருக்கோ கேடொன்றும் நேராதென்பதே நமது திடமான நம்பிக்கை.

எனவே, மே திருநாளாகிய நன்னாளில், தமிழகத்துப் பாட்டாளி மக்கள் உழைப்பு வழிபட்ட வர்க்க உணர்ச்சியோடு, மொழி வழிப்பட்ட இன உணர்ச்சியையும் ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்; ஏற்றுக் கொள்வார்களென்றும் நம்புகிறேன்.

மே திருநாள், தொழில் வளர்ச்சிக்கு எதிரான நாளன்று; அதற்கு மாறாக, தொழிலாளர்களுக்கு, உழைப்புக்கும் தேவைக்கும் ஏற்ற ஊதியம் கொடுப்பதன் மூலம்தான்—அவர்கள் உடம்பைக் காக்குமளவுக்கு ஓய்வு கொடுப்பதன் மூலம்தான்—தொழில்கள் வளர்ச்சி பெறும்; உற்பத்தி பெருகும் என்ற உண்மைகளை ஊராள்வோருக்கு உணர்த்தி வைக்கும் நாளாகவே கருத வேண்டும். அமெரிக்கப் புரட்சியிலிருந்து, தமிழ் நாட்டுப் பாட்டாளி மக்கள் கற்றுக் கொள்ள வேண்டிய பாடமென்ன? பலாத்காரமன்று; உழைப்பாளி மக்கள் ஒன்றுபட்டால் அவர்களை வெற்றி கொள்ளும் சக்தி இந்த உலகத்தில் இல்லையென்ற உண்மையையேயாகும். எந்த ஒரு இயக்கத்திற்கும் சரி; வெற்றி தரும் கருவி பலாத்கார மன்று. அந்த இயக்கத்தை நடத்தும் மக்களின் கட்டுப்பாடேயாகும். ஒரு இயக்கத்தில் பலாத்காரம் கலப்பதும் கலக்

காததததும், அது நடக்கும் காலம், அதை நடத்தும் நாட்டினரின் பண்பாடு ஆகியவற்றைப் பொறுத்ததேயாகும். மே திருநாளில், அமெரிக்கப் புரட்சியை நினைவுக்குக் கொண்டு வரும்போது, அங்கு நடந்த பலாத்காரத்தை மறந்து, அந்த நாட்டுப் பாட்டாளி மக்கள் கற்றுத் தந்த ஒற்றுமையையே கவனத்தில் கொள்ள வேண்டும்.

மே திருநாள், ஒரு வர்க்கத்தவரை இன்னொரு வர்க்கத்தார் சுரண்டும் கொடுமைக்கு எதிராகக் கொண்டாடும் நாள்மட்டு மன்று ; ஒரு சாதியினரை இன்னொரு சாதியினர் ஏய்த்துப் பிழைப்பதையும் எதிர்க்கும் திருநாள்—ஒரு மொழியினரை இன்னொரு மொழியினர் அடக்கி ஆளும் அநீதியையும் ஆட்சேபிக்கும் திருநாள்.

ஆம் ; மனித சமுதாயத்தில் புகுந்துள்ள கொடுமைகள் எத்தனை யுண்டோ அத்தனையையும் எதிர்த்துப் போரிட ஆற்றல் தரும் நாளாகவே, நாம் மே திருநாளைக் கருதுகிறோம்.

விண்ணையிடிக்கும் கோபுரங்களைக் கொண்ட கோயில்கள் நிறைந்தது தமிழகம். ஆம்; கலை உணர்வை வளர்த்தால் கலக உணர்வு மாயும் என்ற பெருநோக்கால் கட்டி வைத்த கோயில்கள் ;

தமிழர் பட்டாடை யுடுத்தி பண்புடன் வாழ்ந்த காலத்தில்—பொன்னும் மணியும் கொழித்துக் கிடந்த நாளில்—விட்டு வைத்த மானியங்கள் ;

அத்தனையும் இன்று என்ன ஆயின ? அர்ச்சகர்களின் ஆதிக்கத்தில் அடங்கிவிட்டன !

அந்தோ ! கருணை வள்ளலான கடவுளின் கோயில் முன்னே நாம் காணும் காட்சியென்ன? கட்டத்துணியற்ற காரணத்தால், கை கொண்டு மெய் மறைக்கும் கன்னிப் பெண்களின் கவலை தோய்ந்த முகங்கள் !

பாலுக்குப் பதறிடும் பச்சிளங் குழந்தைகளின் பரிதாபக் கூக்குரல் !

கண்ணற்ற கபோதிகள்—காலற்று வீழ்ந்து கிடக்கும் முடவர்கள் போன்ற அங்கயீனர்கள், ஒரு காசுக்காக அலறும் அபயக் குரல்கள் ! இந்த கோரக் காட்சிகளனைத்தும் கோயிலுக்கு வெளியே !

அதே நேரத்தில், அதே கோயிலுக்குள் கடவுளரின் செப்புச் சிலை மீது குடம் குடமாகக் கொட்டுவது ஆவின் பால் ; அவரது திருமேனியை அலங்கரிப்பது பட்டாடை; அவரை வீதிவலம் கொண்டு வருவது வெள்ளி விமானம்; அவரது தனயர்களைச் சுமந்து வருவது தங்கப் பல்லக்கு; அவரது தலையை அலங்கரிப்பது விலைமதிக்கவொண்ணாத வைரமுடி. அவருக்கு வெப்பந்தணிய வீசுவது வெஞ்சாமரை ; அவர் மனங்குளிரச் செய்வது மறையோசை!

ஆம் ; கோயிலுக்கு வெளியே உணவற்றுத் தவிப்போரின் வேதனைக் கோஷம். கோயிலுக்கு உள்ளே உண்டு களிப்படைவோரின் வேதகோஷம் !

இந்தத் தீமைகளையும் திருத்தத் திட்டமிடும் திருநாளாக இருக்கட்டும் மே திருநாள்.

புதிய அரசியல் அமைப்பில், வயது வந்தோருக்கு வாக்குரிமை என்ற கொள்கைப்படி எழுதப் படிக்கத் தெரியாத உழவர்களுக்கும், தொழிலாளர்களுக்கும்கூட ஓட்டுரிமை வழங்கப்பட்டிருக்கிறது. பாட்டாளி மக்கள் இந்த உரிமையை எப்படிப் பயன்படுத்துகிறார்களோ, அதைப் பொறுத்துத்தான் அவர்களுடைய எதிர்கால வாழ்வு அடங்கியிருக்கிறது. நாடாளும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க உரிமை பெற்றுவிட்டது மட்டும் போதாது; நாடாளும் திறமையும் தொழிலாளி வர்க்கத்துக்கு உண்டு என்பதை உலகினருக்கு உணர்த்தியாக வேண்டும்.

மண் குடிசைகளில் வாழும் ஏழை மக்கள் வாக்குரிமை பெற்றது, மாளிகைச் சீமான்களே மந்திரிகளாக்குவதற்கன்று ; தங்களைத் தாங்களே ஆண்டு கொள்ளும் தகுதி பெறுவதற்கேயாகும். ஆகவே, பல கோடி ஏழை மக்களின் ஓட்டுகளைப் பெற்று சில நூறு பணக்காரர்கள் ஆட்சி பீடத்தைக் கைப்பற்றும் நிலையை இனியும் அனுமதிக்கக்கூடாது. அப்படி அனுமதிப்பது, பாட்டாளி மக்கள் தங்களைத் தாங்களே அழித்துக் கொள்வதற்கு ஒப்பாகும். நடைமுறையிலுள்ள குடியரசுச் சட்டப்படி வாக்காளர் தொகையில் உழவர்களும் தொழிலாளர்களுமே அதிகமாக இருப்பர். என்றாலும், அவர்களில் எவரும் அசெம்பிளிக்குத் தேர்ந்தெடுக்கப்பட மாட்டார்கள். ஏனெனில், பொதுத் தொகுதிகளில் போட்டியிட்டு வெற்றி பெறுமளவுக்கு ஒரு தொழிலாளி பணம் படைத்தவராயிருக்க முடியாதல்லவா ? கட்சிகளின் தயவால், இங்குமங்குமாக இரண்டொரு தொகுதிகளில் தொழிலாளர்கள் வெற்றி பெற்றாலும், ஆங்கிலம் அரசுமொழியாக இருக்கும் வரை தம்மைத் தேர்ந்தெடுத்த தொகுதிக்குத் திறமையாகப் பணி புரிய தொழிலாளரால் முடியாது. ஆகவே, புதிய அரசியலைப் பின்வரும் வகையில் மாற்றியமைப்பதைத் தொழிலாளர்கள் தங்கள் கடமையாகக் கொள்ள வேண்டும்.

இந்தியாவை மொழிவாரி நாடுகளாகப் பிரிக்க வேண்டும்.

பிரிக்கப்படும் நாடுகளில், பெருவாரியான மக்கள் பேசும் மொழியையே அரசாங்க மொழியாக அங்கீகரிக்க வேண்டும்.

மாகாண அசெம்பிளிகளுக்கு இப்போதுள்ள தொகுதி (பிரதேச) வாரி தேர்தல் முறையை ரத்துசெய்து, தொழில்வாரிப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வழி காண வேண்டும்.

இந்த மூன்று திட்டங்களும் நிறைவேற்றப்படுமானால் நடைமுறையிலுள்ள குடியரசு, தொழிலரசாக மாறும். மாகாண அரசுகள் அந்நிய மொழிகளில் நடைபெறும் வரை, தொழிலாளி வர்க்கத்தினர் ஆட்சியைக் கைப்பற்றுவதென்பது முடியாத விஷயம். ஆகவே, மொழிவாரி நாடுகள் பிரிக்க, அரசுகள் அமைக்கப் பாடுபடுவதைத் தொழிலாளி வர்க்கத்தினர் தங்கள் அவசரக் கடமையாகக் கொள்ள வேண்டும். இது, தொழிலாள வர்க்கத்திற்குப் புரியும் தொண்டேயாகும்.

தமிழ் இனத்துப் பாட்டாளி மக்களே! உலக நாடுகளை நோக்குங்கள்! சர்வதேச முதலாளி வர்க்கத்தின் தலைமைப் பீடமாக விளங்கும் அமெரிக்காவையே நோக்குங்கள்! அங்கே சுதந்திரமுள்ள தனித்தனி குடியரசுகள் கொண்ட கூட்டரசையே காண்பீர்கள்.

உலகப் பாட்டாளி மக்களுக்கு வழி காட்டியாக, சுரண்டலுக்கு முடிவு கட்டி சோஷலிச ஆட்சி நடத்தும் சோவியத் ரஷ்யாவையும் நோக்குங்கள்! அங்கே, மொழிவாரி சுதந்திரக் குடியரசுகள் மலர்ந்திருப்பதைக் காண்பீர்கள்! அந்தக் குடியரசுகள், விரும்பியபோது பிரியும் உரிமையுடன் மத்திய ஆட்சியில் கலந்து, உலகத்தின் முன் 'ரஷியா ஒரே நாடு' என்ற பெருமையோடு வாழ்வதையும் காண்பீர்கள்!

தமிழ் நாட்டு உழைப்பாளி மக்களே! உங்கள் தாய்த் திருநாடாம் தமிழ் நாட்டையும் நோக்குங்கள்! "உலகத் தொழிலாளர்கள் அத்தனை பேரும் ஒரே வர்க்கத்தினர்" என்ற உணர்ச்சியை இழக்காமலே உங்கள் தாயகத்தின் நிலைமையை உன்னுங்கள்! நீங்கள் காண்பதென்ன? ஆங்கிலேயர் அகன்ற பின்னரும் தமிழகத்தில் தனியரசு—தமிழரசு அமைக்கப்படாத அவல நிலையன்றோ! மொழி

வழி அரசு அமையாதவரை தமிழகத்துப் பாட்டாளி மக்கள் முன்னேற முடியுமா? முடியவே முடியாது.

இடம் விட்டு இடம் பெயர்வது, மாகாணம் விட்டு மாகாணம் செல்வது, மக்கள் நெறி. இதைக்கண்டு துக்கப் படுவதும், தூஷித்துப்பேசுவதும் மாகாணவெறி. ஆனல், குடியேறும் மாகாணத்தைத் தாயகமாகக் கொள்ளாமல் அங்கு குடியிருக்கும் மக்களோடு குலவி வாழாமல், அம் மாகாணத்தின் சொத்தைச் சுரண்டுவதற் கென்றே குடியேறுவதும், கல்விச் சாலைகள், கடவுளர் கோயில்கள் ஆகியவைகளெல்லாம் தங்களுக்கென தனியே நிர்மாணித் துக்கொண்டு மாகாண மக்களிலிருந்து தனித்து வாழுவ தும் ஒழிக்கப்பட்டா லொழிய, ஒரு மாகாணத்துக்கு எதி ராக இன்னெரு மாகாணத்தார் போர்க்கோலங் கொள்வ தைத் தடுக்க முடியாது. ஒரு மாகாணத்தின் வளத்தை இன்னெரு மாகாணத்தார் கட்டுப்பாடாகச் சுரண்டுவதை எதிர்த்து வெற்றி பெறுவதும் வர்க்கப் போராட்டத்தின் ஒரு பகுதியேயாகும். சோஷலிசம் வந்தால் எல்லாம் சரிப் பட்டுவிடும் என்று தத்துவத்தைக் காட்டி தமிழினத்தவ ரின் உரிமையை மறுப்பது தெரிந்தோ, தெரியாமலோ தீமைக்குத் துணைபுரிவதாகும்.

சுரண்டலை எதிர்க்கும் மே திருநாளில்—சுயநலத்தை எதிர்க்கும் புரட்சித் திருநாளில் தமிழகத்தில் உள்ள இடது சாரிக் கட்சியினருக்குத் தமிழினத்தின் சார்பாக சில வற்றைத் தெரிவித்துக் கொள்கிறேம். உழைப்புரிமை காரணமாக தமிழகத்துத் தொழிலாளி உலகப் பாட்டாளி வர்க்கத்தோடு ஒன்றுபட்டாலும், பிறப்பால்—பேசும் மொழியால், வாழும் தாயகத்தால், மொழிவழி வந்த வரலாற்றுல் தமிழகத்தைத் தனிநாடாக்கி, அதில் தன் னரசு செலுத்தும் உரிமை பெற்றிருக்கிருன். அப்படியே

இந்தியாவில் உள்ள பிற இனத்துத் தொழிலாளி மக்களும் தனியரசு கோருவது தவிர்க்க முடியாததாகும். எனவே தமிழகத்து இடதுசாரிக் கட்சிகள் தமிழ் நாட்டுப் பாட்டாளி மக்களைப் புரட்சிப் பாதைக்கு ஒருமுகமாகக் கொண்டு செல்ல வேண்டுமானால், 'சோஷலிசத் தமிழ்க் குடியரசு' கோரிக்கையை அங்கீகரித்ததாக வேண்டும். அங்கீகரித்த பிறகும், அந்தக் கோரிக்கையை வண்டிக்குப் பின்பாரக் கல்போன்று, கட்சியின் வளர்ச்சிக்கான கோஷமாக மட்டுமே கொள்ளாமல் முன்னணிப் பிரச்சினையாகவும் செய்ய வேண்டும்.

மொழிவழி இன உணர்ச்சியை எதிர்த்து முறியடித்து விடலாம் என்று இடதுசாரிக் கட்சிகள் எண்ணுமானால், அது படுதோல்விக்குப் பந்தயம் கட்டியது போலாகும். சாதி, சமய, கட்சி வேற்றுமைகள் அனைத்தையும் புரட்சித் தீயில் போட்டுப் பொசுக்கிப் புதுஉலகம் கண்ட சோவியத் ரஷ்யாவில்கூட, மொழிவழி இன வேற்றுமை அங்கீகரிக்கப்பட்டு ஒவ்வொரு இனத்திற்கும் சமஷ்டியிலிருந்து பிரிந்துபோகும் உரிமையுடன் தனித்தனி குடியரசு நடத்த உரிமை தரப்பட்டுள்ளது என்பதையும் இங்குள்ள இடதுசாரிக் கட்சிகளுக்கு நினைப்பூட்டுகிறோம். பாரதி கூறியது போல் 'ஆகா' வென்றெழுந்த யுகப் புரட்சி போன்ற பொது உடைமைப் புரட்சியாலும்கூட அழிக்க முடியாத மொழிவழிப்பட்ட இன உணர்ச்சியை இந்திய நாட்டில் அழித்துவிடலாம் என நினைப்பது பலிக்க முடியாத பகற்கனவாகும். இந்தியாவில் சுரண்டலை ஒழிக்க வேண்டுமானால் இந்திய முதலாளி வர்க்கத்தின் சுரண்டலுக்கு எதிராகக் கிளம்பும் இயக்கத்தை அது நாட்டின் நலத்தில் நாட்டம் உள்ளவர்களால் நடத்தப்படும்வரை, வர்க்கப் போராட்டத்திற்கு எதிரிடையாக இல்லாதவரை அதை

அங்கீகரிப்பதுதான் இடது சாரியினரின் கடமையாய் இருக்க வேண்டும்.

அதிலும், இந்திய முதலாளித்துவத்திற்கு வடக்கே தான் வயிறு வீங்கி இருக்கிறது. தெற்கே உள்ள முதலாளித்துவத்தைத் திட்டமிட்டு தாக்கினல் தற்காப்புக்குப் போரிடக்கூடத் தகுதியற்ற நிலையிலிருக்கிறது.

தென்னாட்டு முதலாளிகளின் வாழ்வெல்லாம் வடநாட்டு முதலாளிகளின் நல்லெண்ணத்தைப் பொருத்தே இருக்கிறது. இந்த நிலையில், தமிழ்நாடு தனி அரசு காண்ப தென்றால், டாடா—பிர்லா—டால்மியாக்களின் சுரண்டலிலிருந்து விடுதலை பெறுவதென்றே பொருள்.

சுதந்திரத் தமிழகத்தில், சோஷலிசக் குடியரசை அமைப்பதென்றால், தற்காப்புக்குப் போரிடக்கூட சக்தியற்ற தமிழ் நாட்டு முதலாளித்துவத்தை சட்டத்தின் மூலம் முடிவுக்கு கொண்டு வருவதென்றுதான் அர்த்தம்.

எனவே, மே திருநாளில் தமிழகத்துப் பாட்டாளி மக்கள் ‘முதலாளித்துவம் ஒழிக’ என்று கோஷமிட்டால் மட்டும் போதாது. தமிழகத்தில் சுதந்திர சோஷலிசக் குடியரசு அமைய வேண்டுமென்றும் ஆரவாரம் செய்ய வேண்டும்.

இந்தியாவில் ஒரு மாகாணத்தை இன்னொரு மாகாணம் சுரண்டும் நிலைமையை ஒழிக்க எல்லா இடது சாரிக் கட்சிகளும் ஒன்றுபட்டு திட்டமிட்டு வேலை செய்யாத வரை, இந்தியப் பாட்டாளி மக்களை முதலாளித்துவ எதிர்ப்பு முகாமுக்குள் வெற்றிகரமாகக் கொண்டு வருவது முடியாத காரியம். இன உரிமைக் கோரிக்கைக்கு இடது சாரிக் கட்சிகள் ஆதரவளிக்காவிட்டால் முதலாளித்துவ வரிசையில் பின்னணியிலுள்ள மாகாணங்களின் முதலாளிகள் அதைத் தங்களுக்கு புதிய போர்வையாகப் பயன்

படுத்திக் கொண்டு தங்கள் சுரண்டல் வேலையைத் தொடர்ந்து நடத்துவார்கள் என்பதை இடது சாரி களுக்கு நினைவூட்டுகிறோம்.

மற்ற இடதுசாரிக் கட்சிகளின் நிலைமை எதுவானாலும் தமிழரசுக் கழகத்தின் நிலைமை தெளிவாக இருக்கின்றது. ஆங்கிலேயர்கள் அகன்ற பின்பும் தமிழினத்தார் அரசுரிமை பெறவில்லை என்ற செய்தியை தேசியம் என்ற திரையைக் கிழித்து உலகப் பாட்டாளி மக்களின் பார்வைக்குக் கொண்டு வருகிறோம்.

பூகோளத்தின் ஒருமையைக் காட்டி, மொழி வழி இனங்களின் உரிமை பறிக்கப்படுகின்றது என்பதை உலகத் தொழிலாளி வர்க்கத்திற்குத் தெள்ளத் தெளிய உணர்த்துகிறோம்.

பாட்டாளி மக்களின் உரிமைப் போரிலே உயிர்ப் பலியான உத்தமத் தியாகிகள் அத்தனை பேருக்கும் அவர்கள் எந்த நாட்டினராயினும், எந்த இனத்தவ ராயினும் அவர்களுக்கு நமது வீர வணக்கத்தைச் செலுத்துகிறோம்.

தமிழினத்தார் உரிமையைப் பெற்ற பின்னர் கடமை யயைச் செய்வதில் மனித வர்க்கத்தோடு கை கோத்து நிற்பார்கள் என்று உலகத் தொழிலாளர்களுக்கு உறுதி கூறுகிறோம்.

**வாழ்க பாட்டாளி வர்க்கம்!**

**வருக சோஷலிசத் தமிழரசு!**

# பாட்டாளித் தமிழா கேள்!

தமிழர் என்றால் உழைப்பாளிகள் என்று பொருள் கூறினார் ஆராச்சியாளர் கிரியர்சன். பிற நாடுகளைப் போல தமிழ் நாட்டிலும் பண்ணை எஜமானர்கள் உண்டு; பட்டம் பெற்ற படிப்பாளிகளும் உண்டு. ஆனால், தமிழ்நாடு என்றவுடனே உலகத்தாரின் கவனத்தைக் கவருவது, தமிழினத்தின் உழைப்பாளி மக்களே யன்றி, உடைமையாளர்கள் அல்லர். காரணம், தமிழகத்தின் தொழில் துறையில்—மோட்டார் உற்பத்தியில் ஒரு ஹென்றி போர்டு இல்லை. கப்பல் தொழிலில் ஒரு வால்சந்த் ஹீராசந்த் இல்லை. பஞ்சாலைத் தொழிலில் ஒரு பிர்லா இல்லை. விமானத் தொழிலில் ஒரு டாட்டா இல்லை. இப்படித் தொழில் துறையில் எந்தப் பகுதியில் பார்த்தாலும், இல்லை, இல்லை, இல்லை என்பதுதான்.

ஆகவே, தமிழினம் என்றால் உழைப்பாளி இனம் என்று கிரியர்சன் கூறியதில் குறையொன்றுமில்லை. இப்படி நாம் கூறுவது சுரண்டுகின்ற வர்க்கத்தைத் திரை போட்டு மறைக்க அல்ல. முதலாளி வர்க்கத்துக்கு முடிவு கட்ட இருக்கும் நேரத்தில், இங்கு முதலாளித்

துவம் அரும்பெருக்கிறது. அதன் முடிவு என்னுரும் என்பது எல்லோரும் அறிந்ததே. வேரோடு விழுதுகள் விட்டிருக்கும் ஐரோப்பிய முதலாளித்துவமே உயிருக்கு மன்ருடுகின்றது. இந்த நேரத்தில் அரும்பெடுத்து வரும் தமிழ் நாட்டு முதலாளித்துவத்தின் ஆயுளுக்குப் பஞ்சாங்கம் வேறு பார்க்க வேண்டுமா?

ஆகவே, தமிழர் என்ருல் பாட்டாளி மக்கள் என்று அழுத்தம் திருத்தமாகப் பொருள் கூறுகின்றனர். ஆட்சேபணைக்கு அஞ்சாமலும் கூறுகின்றேன். தமிழ் நாட்டுப் பாட்டாளி சுரண்டப்படுகின்ருன். இதை மறுக்க விரும்பவில்லை; மறைக்கவும் காரணமில்லை. ஆனல் யாரால் சுரண்டப்படுகின்ருன்? தமிழ் நாட்டு முதலாளித் துவத்தாலும் சுரண்டப்படுகின்ருன். ஆனல், அது இருபது சதவிகிதத்திற்கு மேல் இல்லை. இந்திய முதலாளித்துவத்தாலும் சுரண்டப்படுகிருன். அதன் சதவிகிதம் நாற்பதுக்குக் குறையாமலிருக்கும். அதற்கும் மேலாக ஐரோப்பிய-அமெரிக்க முதலாளித்துவத்தாலும் சுரண்டப்படுகின்ருன். அதன் சதவிகிதம் 40-க்கு மேலாக வும் இருக்கும். சரியாகச் சொன்னுல், உலக முதலாளி வர்க்கம் அனைத்தாலுமே சுரண்டப்படும் அப்பாவி மக்கள் தமிழ்ப் பாட்டாளி மக்கள்தான்.

நானிலமெங்கும் மே தின விழா நடைபெறுகின்றது. பாட்டாளித் தமிழனும் அங்கு பங்கு கொள்கிருன். 'உலகத் தொழிலாளிகளே, ஒன்றுபடுங்கள்' என்று நெஞ்சு நோவக் கூவுகிருன். ஆனல், உலகத் தொழிலாளிகளின் துன்பத்திலே, தன்னுடைய துன்பம் தனிமையானது என்பதை அவன் சிந்தித்தானு? அல்லது அவனைச் சிந்திக்க வைத்தார்களா? இரண்டுமில்லை. அந்த நிலை இன்றுமில்லை; இனி ஏற்படுமென்ற நம்பிக்கையும்

இல்லை. வேங்கடத்துக்கு வடக்கேயுள்ள—ஏன்?— இமயத்துக்கும் அப்பாலுள்ள மொழிவழி தேசிய இனத்துப் பாட்டாளி மகன் ஒவ்வொருவனும், தன் இன உணர்ச்சியை இழக்காமலே செங்கொடியைக் கையிலேந்துகிறான். உலகப் பாட்டாளி மக்களோடு உறவு கொண்டாலும் தனது உரிமை, உயர்வு, சிறப்பு எல்லாம் மொழிவழி உணர்ச்சியால்தான் பாதுகாக்கப்படும் என்று நம்புகின்றான். ஆனால், தமிழ் நாட்டுத் தொழிலாளி மகன் மட்டும் இதற்கு விதிவிலக்காக வளர்க்கப்படுகிறான்.

## சாத்வீகமா, பலாத்காரமா ?

'தானம்' என்ற சொல் தமிழ் நாட்டிற்குப் புதிய தன்று. எதிலும், எப்போதும் தானம் வழங்குவதை மனித தர்மமாக எண்ணி வந்திருக்கின்றனர் தமிழர். பொரு ளனைத்தும் ஒருசிலரிடமே குவிந்துவிடாமலிருக்கத் தானம் வழங்குமாறு தனவந்தர்களைத் தூண்டினர் புலவர்கள்.

திருமணம், சிரார்த்தம் போன்ற இல்லச் சடங்கு களில், உணவையும் உடையையும், பொருளையும் தானமாக வழங்கல் முக்கிய தருமங்களாகக் கருதப்பட்டன. ஆம்; தரித்திரம் வளர்ந்து விடாமல் தடுப்பதற்குப் பண்டைக் காலத்தில் பயன்பட்ட கருவிக்குப் பெயர்தான் 'தானம்!'

பண்டைத் தமிழகத்தில், அசையும் பொருள்களே தானமாக வழங்கப் பட்டன. அசையாப் பொருளான நிலம் தானமாக வழங்கப்படவில்லை. காரணம், அந்நாளில் நிலத்தின் மீது மன்னனைத் தவிர தனி மனிதர் யாருக்கும் உரிமை இருந்ததில்லை. மன்னனும் பதவி இழந்து தனி மனிதனுகி விட்டால் அவனுக்கும் ஒரு அங்குல நிலத்தின் மீது கூட உரிமை கிடையாது. ஆம்; நிலம் அனைத்தும்

தேசியச் சொத்தாக, அதாவது தேசத்தின் பொது வுடைமையாக இருந்தது.

ஆகவே, 'பூமிதானம்' தரும் வழக்கம் பண்டைத் தமிழகத்தில் இல்லை.

பெண்களுக்குச் சொத்துரிமை வழங்க இந்நாளில் சட்டம் இயற்ற முற்படுகிறார்கள். அதற்கு எவ்வளவோ எதிர்ப்பு. ஆனால், பண்டைத் தமிழகத்தில் ஆண்களைப் போலவே, பெண்களுக்கும் பெற்றோருடைய சொத்தில் பங்கு பெற உரிமை இருந்தது. ஆம்; அசையும் பொருள் களில்தான் பங்கு; அசையாப் பொருளான நிலத்தில் பங்கில்லை. இப்பொழுதும் 'சீர்' என்ற பெயரில், திருமணமான பெண்ணுக்குப் பெற்றோர் விலையுயர்ந்த பொருள்களைக் கொடுப்பது வழக்கமாக இருந்து வருகிறது.

பண்டை நாளில் அரசர்கள், புலவர்களுக்கும் பணியாளர்களுக்கும் நிலங்கள் வழங்கியதாக இலக்கியங் களில் படிக்கிறோம். அப்படி அரசரிடம் விளை நிலங்களைப் பெற்றவர்களில் சிலர் 'நிலக்கிழார்' என்ற பெயரில் அழைக்கப் பட்டிருக்கின்றனர். ஆனால், அந்த நிலக் கிழார்கள் இன்றுள்ள மிராசுதார்கள் போன்றவர்கள் அல்லர். அந்த நிலக் கிழார்களுக்கு நிலத்தில் பண்டங்களை உற்பத்தி செய்வதற்குத்தான் உரிமை. இன்றைய மிராசு தார்களோ தங்கள் கைவசமுள்ள நிலத்தைப் பிறருக்கு விற்பதற்கும் உரிமை பெற்றிருக்கின்றனர். அந்நாளில் நிலம், வீடுபோன்ற அசையும் பொருள்களை, விலைக்கு விற்பது வாங்குவது போன்ற வழக்கம் இருந்ததாகத் தெரியவில்லை.

ஆடு, மாடு, கலப்பை முதலிய கருவிகளைச் சொந்தமாக வைத்திருப்பவர்களுக்கு, இன்று மிராசுதார்களுக்கு இருப்பது போன்ற பெருமதிப்பு இருந்திருக்கின்றது.

உற்பத்தி செய்வதற்கான கருவிகள் வைத்தில்லாதவர்கள் சாதாரண உழைப்பாளிகளாகக் கருதப்பட்டனர்.

முன்னாளில், 'இது இவருடைய நிலம்', 'அது அவருடைய நிலம்' என்று சொல்லும் அளவுக்கு தனி மனிதர்களின் உரிமைக்கு எல்லை கோலவில்லை. இது ஒன்றே அந்நாளில் விளை நிலம் தனிமனிதர்களின் சொந்தச் சொத்தாக இல்லை என்பதை விளக்கும். அரசர்களும், விளையும் பண்டத்தில் ஆறில் ஒரு பங்கையே வரியாக வசூலித்தனர். விளையாத அல்லது விளைவிக்காத நிலத்திற்கு வரி கிடையாது. காரணம், விளை நிலம் தனி மனிதனுக்குச் சொந்தமாக இல்லாமலிருந்ததுதான். இன்று விளை நிலம் பல கூறுகளாகப் பங்கு போடப்பட்டு ஒவ்வொரு சிறு கூறும் ஒவ்வொரு மனிதனுக்கு உரிமையாக்கப்பட்டு விட்டதால், விளையாத நிலத்துக்கும் வரி வசூலிக்கப் படுகிறது. இதை 'நிலவரி' என்பதை விட 'உரிமை வரி' என்று கூறலாம்.

'மிராசுதாரர்கள்' என்பவர்கள், சமூகத்துக்குத் தேவையில்லாதவர்கள். ஆகவே, 'நிலச் சீர்திருத்தம்' என்று சொல்வதை விட, 'நில உரிமை ஒழிப்பு' என்ற பெயரில் சட்டம் கொண்டு வந்து பழங்காலத்தைப் போல விளை நிலம் அனைத்தையும் தேசத்தின் பொதுச் சொத்தாகச் செய்து விடலாம். வேண்டுமானால், ஒரு எல்லைக்குட்பட்டு நிலத்தில் பயிரிடும் குத்தகை உரிமையை வைத்துக் கொள்ளலாம். இதுதான் பழைய காலத்து முறை.

பூமிதானம் பெறுவதனால் மட்டுமே இந்த மிராசு முறையை ஒழித்துவிட முடியாது. என்றாலும், அதன் கொடுமையை மக்களுக்கு உணர்த்தவும், அதை ஒழித்துக்

கட்டுவதற்கான சூழ்நிலையை உருவாக்கவும் பூமிதான இயக்கம் பெரிதும் பயன்படலாம்.

தேவைக்கு அதிகமாக நிலம் வைத்திருப்பதும், உழுது பயிர் செய்யாதவர்களும் நிலத்தை உரிமையாக்கிக் கொள்வதும் சமூகத்துக்குச் செய்யும் துரோகங்கள் என்ற எண்ணத்தை மக்களிடையே பரப்ப வேண்டும். முன்னுளில் பொருள் படைத்த செல்வந்தர்களைக் 'கருவிலே திருவுற்ற வர்கள்' என மக்கள் கூறிவந்தனர். அதாவது, 'பிறக்கும் பொழுதே லட்சுமி கடாட்சத்தைப் பெற்றவர்கள்' என்று கூறுவார்கள். பூர்வ ஜென்மத்தில் செய்த புண்ணியத் தால்தான் இந்த ஜென்மத்தில் செல்வந்தர்களாகப் பிறக்க முடிகிறது என்றும் மக்கள் நம்பினுர்கள். இதெல்லாம் இடைக் காலத்தில் தோன்றிய மூட நம்பிக்கைகளே.

இப்போது காலம் மாறிவிட்டது. பெருஞ் செல்வம் படைத்தவர்களை வெறுக்கும் மனப்பான்மை மக்களிடையே வளர்ந்து வருகிறது. இந்த வெறுப்பு விரோதமாக வளர்ந்து விட்டால், பொருளாதாரப் போராட்டம் பலாத் காரத் தன்மையை அடைந்து விடும். அப்படி நேருவதைத் தவிர்க்க வேண்டுமாஞல், தனி மனிதனின் சொத் துரிமைக்கு விரைவில் வரம்பு கட்ட வேண்டும். அந்த வரம்பு நமது நாட்டின் ஏழ்மை நிலைமைக்கு ஏற்றவாறு இருக்க வேண்டியதும் அவசியம்.

மக்களிடையே வளர்ந்து வரும் புரட்சி உணர்ச்சியை பூமிதான இயக்கம் அழித்து விடுமென்று இடது சாரி அரசியல் வாதிகள் அஞ்சுகின்றனர். நிலச்சுவான்தார் களில் சிலரும் அதுபோன்றே எண்ணுகின்றனர். இந்த இரு சாராரின் எண்ணமும் தவறு என்பதை பூமிதான இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் நிரூபிக்க வேண்டும்.

'புரட்சி' என்பதற்குத் தமிழில் மாறுதல் என்று தான் பொருள். ஆகவே 'பொருளாதாரப் புரட்சி' என்ருல் இன்றிருக்கும் பொருளாதார அமைப்பில் மாறுதல் என்றே பொருள். அந்த மாறுதல் சாத்வீகத்தின் மூலமும் ஏற்படலாம்; பலாத்காரத்தின் மூலமும் நிகழலாம். ஆனல், சாத்வீகத்தின் மூலம் ஏற்பட வேண்டும் என்பது தான் காந்தீய அரசியல்வாதிகளின் எண்ணம். ஆனல் சாத்வீகமா, பலாத்காரமா? என்பது நில உரிமை ஒழிப்பு விஷயத்தில் அரசாங்கத்தினர் நடந்து கொள்ளும் நேர்மையைப் பொருத்திருக்கிறது. கால மாறுதலை அறிந்து நிலச்சுவான்தார்கள் நிலத்தின் மீது தங்களுக்குள்ள உரிமையைத் தாராளமாக விட்டுக் கொடுக்க முன் வரவேண்டும். அரசினரும் நில உரிமையை ஒழிக்கவோ அல்லது அதிகப் பட்ச உரிமைக்கு வரம்பு கட்டவோ விரைவில் சட்டம் இயற்ற வேண்டும். இந்த இரண்டும் நிகழ்ந்து சாத்வீக முறையிலேயே சமூகப் பொருளாதார, மாறுதல் ஏற்பட முடியும்—ஏற்படவும் வேண்டும்.

—'தமிழன் குரல்' மே '55.

# " எல்லோரும் கேளுங்கள் !"

இந்தியா அடிமையிலிருந்து விடுதலை பெற்று விட்டது. ஆனால், அறியாமையிலிருந்து இன்னும் விடுதலை பெறவில்லை. மக்களில் நூற்றுக்குப் பத்துப் பேரே எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் என்பது ஆட்சியாளரின் கணக்கு. அந்தப் பத்துப் பேரிலும், நுண்ணறிவாளர் எத்தனை பேர் என்பது சிந்திக்க வேண்டிய விஷயம்.

கடந்த காலத்தில் கல்வியைப்பற்றிய விஷயத்திலும், கற்றறிந்த சில மேதாவிகள்கூட மூட நம்பிக்கையில் மூழ்கிக் கிடந்தனர். " அடுப்பூதும் மங்கைக்குப் படிப் பெதற்கு ?" என்று ஆண் மக்களில் பலர் கேட்டதுண்டு.

" ஒருவன் கற்றறிந்த புத்திமானாயிருப்பதும், இன்னொருவன் கல்லாத மூடனாயிருப்பதும் அவனவன் பாவ, புண்ணியத்தின் பலன் " என்றனர் பழங்காலப் பேர்வழிகள் சிலர். ஆனால், இந்தத் தவறான எண்ணங்களிலிருந்தெல்லாம் இன்றைய தமிழகம் விடுதலை பெற்று வருகிறது. என்றாலும், மற்றொரு மூட நம்பிக்கை மக்களின் அறிவு வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாக இருந்து வருகிறது. அதாவது " படிப்பு " என்றவுடன் ஏட்டுப்

படிப்புத்தான் எல்லோரது கவனத்தையும் கவர்ந்து வருகிறது. இது காரணமாகவே, ஏட்டுப் படிப்பு இல்லாதோ ரெல்லாம், கல்லாதாரெனக் கருதப்படு கின்றனர். இது சந்திரனில் படிந்துள்ள களங்கம்போன்று அறிவாளிகளிடையே இருந்துவரும் அறியாமையாகும். அறிவு பெறுவதற்கான சிறந்த சாதனம் ஏட்டுக் கல்வியே என்பதை எவரும் மறுப்பதற்கில்லை. ஆனால், ஏட்டுக் கல்வி பெறமுடியாத நிலையில் உள்ளவர்கள், கேள்வி மூலம் அறியாமையைப் போக்கிக்கொள்ள முடியும். ஆம்; அறிவுத் திறமையைப் பெறுவதற்குக் கேள்வி ஞானமும் சிறந்த சாதனமாகும். அதனால்தான், "கற்றிலனாயினும் கேட்க!" எனக் கட்டளையிட்டார் வள்ளுவர் ; மற்றும் திருக்குறளில், 'கல்வி' என்ற அதிகாரத்தை அடுத்து 'கேள்வி' என்ற அதிகாரம் இடம் பெற்றிருப்பதால், கல்வியைப் போன்றே கேள்வியாலும் அறியாமையைப் போக்கி, அறிவைப் பெருக்க முடியும் என்பதும் புலனா கிறது.

> கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
> தோட்கப் படாத செவி

என்ற குறளில், "**கேள்வி ஞானத்தைப் பெறாத மக்கள் காது படைத்தும் செவிடர்களே**" என்று கூறுகிறார் வள்ளுவர்.

கவியரசர் கம்பரும் இராம காதையில் (நகரப் படலத் தில்), "**வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்**" என்றார். அதாவது, கேள்வி ஞானம் பெறுவதற்கு அயோத்தி மக்களுக்கு நிறைய வாய்ப்பு இருப்பதால் அவர்களிடையே அறியாமை இல்லை என்கிறார்.

> "கல்லாருமில்லை கல்விமுற்ற வல்லாருமில்லை"

என்றும் கூறுகிறார். கம்பரது கருத்தையும், வள்ளுவரின் கட்டளையையும் பின்பற்றித் தமிழகமெங்கும் கேள்வி

ஞானத்தைப் பெருக்குவோமாயின் நூற்றுக்கு நூறு மக்களை அறிவுடையோராக ஆக்க இயலும். ஆனால், ஏட்டின் மூலம் கற்பதுதான் கல்வி, வானளாவும் கட்டிடத்தில் கற்பதுதான் கௌரவம், தாய்மொழியையும் தாய் இனப் பண்பையும் புறக்கணித்து, அயல் மொழியையும் அம் மொழி வழிப்பட்ட பண்பையும் கற்பதுதான் நாகரிகம் என்ற தவறான எண்ணங்கள் முதலில் மறைய வேண்டும்.

மாகாண அரசினரும் சரி, மத்திய அரசினரும் சரி; பணத் தொல்லையால் அல்லற் படுவதைப் பார்த்து வருகிறோம். இந்த நிலையில், "எல்லோரும் படியுங்கள்" என்ற முழக்கத்தின் மூலம் கட்டாயக் கல்வி பரப்புவது நல்ல தொண்டாயினும், விரைவில் வெற்றி காணும் வழியன்று. "எல்லோரும் கேளுங்கள்!" என்ற கோஷத்தை எழுப்பி மக்கள் அனைவரும் கேள்வி ஞானத்தைப் பெறத் திட்டமிட்டுப் பணியாற்ற வேண்டும்.

தமிழ் மக்களுக்கு கேள்வி ஞானம் பெற எத்தனையோ வசதிகளும் வாய்ப்புகளும் இருக்கின்றன. ஏட்டுக் கல்வி கற்றோரின் எண்ணிக்கை நூற்றுக்குப் பத்தாகவுள்ள இந்தக் காலத்திலும், தமிழ் நிலத்து மக்கள் வேறு எந் நிலத்து மக்களையும்விட அறிவில் மிக்கவராகவே திகழ்கின்றனர். காரணம், தமிழகத்தில் கேள்வி ஞானம் பெறுவதற்கான சாதனம் இயற்றமிழாக அல்லாமல் இசைத் தமிழாக இருப்பதே யாகும். இந்தப் பெரு வாய்ப்பு வேறு எந்த நாட்டு மக்களுக்கும் இருப்பதாக எண்ணுவதற்கில்லை.

புகழேந்திப் புலவர் இயற்றிய அல்லி அரசாணி மாலை, பவழக்கொடி மாலை, புலந்திரன் தூது போன்ற நூல்களெல்லாம் பெண்ணினத்தின் அறிவை வளர்க்கும் சின்னஞ் சிறு கதைகள் அன்றோ? புகழேந்திப் புலவரின்

சிறு கதைகளை யெல்லாம், அவர்கள் தாங்களாகவே படித்துக் கற்றார்களா? இல்லை; அப்படிக் கற்றவர்கள் மிகச் சிலரே யாவர். பிறர் படிக்கக் கேட்டுக் கற்ற பெண் மக்களே அதிகம். ஓய்ந்த நேரங்களிலெல்லாம் படித்த பெண்ணொருத்தி புகழேந்தியின் காவியத்தைப் பாடுவாள்; படிக்காத பெண்கள் பலர் அவளைச் சுற்றி அமர்ந்து செவி கொடுத்துக் கேட்பார்கள். இந்தக் காட்சியை இன்றைக்கும் தமிழகத்துக் கிராமங்களில் காணலாம். புகழேந்தியின் கற்பனைக் கதைகள் மட்டுமல்ல: மதுரை வீரன், தேசிங்குராசன் போன்ற தமிழ் வீரர்களின் உண்மை வரலாறுகளையும், பாரதம்—ராமாயணம் போன்ற கற்பனை கலந்த காவியங்களையும் இதே முறையில்தான் ஆண்களும் பெண்களும் கற்றுக் களிப்படைகின்றனர்.

கல்வியைப் பற்றி அறிஞர்களிடையே தவறான கருத்து இருப்பது போலவே, கல்வி துவங்கும் பருவத்தைப் பற்றியும் தவறான கருத்து நிலவி வருகிறது. ஐந்தாண்டுகளுக்குப் பிறகு இல்லங் கடந்து பள்ளிக்குச் செல்வதிலிருந்துதான் படிப்புத் துவங்குவதாகக் கருதுகின்றனர். இது சரியன்று. ஏட்டுக் கல்வி துவங்கு முன்னரே நம் நாட்டில் கேள்விக் கல்வி துவங்கிவிடுகிறது. தொட்டிலில் வளரும் குழந்தைக்கு, தாலாட்டுப் பாட்டின் மூலம் அன்னையர் போதிக்கும் எண்ணங்களுக்குத்தான் அளவுண்டோ?

தரையில் தவழும் பருவத்தில் தாயிடம் கேட்கும் நிலாப் பாடல், வானநூலின் ஆரம்பப் பாடமன்றோ?

குந்தி விளையாடும் பிள்ளைக்கு, "சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு", "கை வீசம்மா கை வீசு" என்று கற்பிக்கப் படுவதெல்லாம் ஆரோக்கிய சாஸ்திரத்தின் ஆரம்பப் பயிற்சியே யல்லவா?

ஓடியாடும் பருவத்தில், அன்னையர் சொல்லும் கதைக ளுக்கும் கணக்கில்லை. அந்தக் கதைகளெல்லாம், இன்று நாம் பணம் செலவழித்துப் படிக்கும் சிறு கதைகளைவிட, எவ்வளவோ சிறப்பானவை யாகும். அன்னையர் சொல்லும் கதைகளிலே தாய்க்குலத்தின் அன்பும், தமிழி னத்தின் பண்பும் கலந்திருக்கின்றன. ஆகவே, அன்னை யரிடம் கேட்கும் கதைகளினால் குழந்தையின் அறிவு வளர்வது மட்டுமன்று; உள்ளத்தில் அன்பும், பண்பும் வளரவும் முடிகிறது. ஆம்; நம் ஒவ்வொருவருக்கும் இல்லந்தான் ஆரம்பப்பள்ளி. பெற்றெடுத்த அன்னை தான் ஆரம்ப ஆசிரியை. அன்பும் பண்பும்தான் அவள் துவக்கி வைக்கும் பாடங்கள். இதைப் பல்கலைக் கழகப் பட்டதாரிகளும், கல்வித்துறை அறிஞர்களும் கருத்தில் வைக்க வேண்டும்.

கடந்த காலத்தில் பெரும்பாலும் மக்கள் பெற்று வந்த கேள்வியறிவு சமய அறிவாகவே இருந்து வந்தது. சமயஞானம் என்பது தமிழகத்தில் இறக்குமதியான சரக் கன்று. தமிழினத்தவருடைய எண்ணங்களின் எதிரொ லியே யாகும். வேதத்தைப் படிக்கவும், படித்தவர் சொல்லக் கேட்கவும் வேதியருக்கு மட்டுமே உரிமையுண்டு என்று ஒரு சாரார் நினைத்திருந்த காலத்திலும் வேதாந்த ஞானத்தை வீடுதோறும், வீதி தோறும் வலியச் சென்று வழங்கிய பெருமை தமிழகத்துப் பண்டாரங்களின் தனியுரிமை. தமிழகத்தில் ஒவ்வொரு ஆணும் பெண்ணும் பேசும் சாதாரணமான பேச்சுகளில் கூட அறிவு செறிந்த கற்பனைகளும், ஆத்ம ஞானக் கருத் துக்களும் வெளிப்படுவதைக் காணலாம். இந்தத் திறமை அவர்களுக்கு எப்படிக் கிடைத்தது? கேள்வி ஞானத்தின் மூலமேயாகும்.

நந்தவனத்திலோர் ஆண்டி—அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டு வந்தான் ஒரு தோண்டி அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி

இந்தப் பாடல், நாம் அடிக்கடி கேட்டுவரும் பண்டாரப் பாட்டுக்களில் ஒன்று. உலகை நந்தவனமாகவும், ஆத்மாவை ஆண்டியாகவும், படைப்புச் சக்தியைக் குயவனாகவும், உடலை அவன் தந்த தோண்டியாகவும் கற்பனை செய்து, நிலையற்ற உடலைக்கொண்டு, நிலையான பொருளை அடையும் மார்க்கத்தைப் போதிக்கிறது இப்பாடல். இம்மாதிரி எத்தனை எத்தனையோ ஆத்ம ஞானப் பாடல்களை வீதிகளிலே நித்தம் நித்தம் கேட்டு வருகிறோம். இவையனைத்தும் சமயத்துறையில் நாம் பெற்றுவரும் கேள்வி ஞானமன்றோ? சமயத்துறையில்தான் கேள்வி ஞானத்தைப் பெறும் வசதிகள் அனைத்தையும் பயன்படுத்தினார் நம் முன்னோர். பண்டை நாளில், ஆலயங்களெல்லாம் சமயக் கல்லூரிகளாக இருந்தன. புலவர்கள், புராணிகர்கள், பாகவதர்கள் ஆகியோரெல்லாம் அக்கல்லூரிகளின் பேராசிரியர்களாக இருந்து சமய ஞானத்தைப் போதித்தனர். இன்று ஆலயங்களில் மூலைக்கு மூலை நாம் காணும் அழகான மண்டபங்களெல்லாம் ஒரு காலத்தில் கேள்வி ஞானத்தைப் போதிக்கும் மன்றங்களாகத் திகழ்ந்தவை யாகும். சமயத் துறைக்குப் பயன்பட்ட அதே மண்டபங்களை இன்று சமூகத் துறைக்குப் பயன்படுத்தவும் முடியும். புராணிகர் கடைப்பிடித்த நடைமுறையைக் கொண்டே இன்றைய உலகத்துக்குத் தேவையான புத்தம் புதிய கருத்துக்களைப் போதிக்கலாம். இதில் பிழையொன்றுமில்லை.

பழைய பிரசார முறைகளும், இசைக் கருவிகளும் மக்கள் மனத்தைக் கவரும் சக்தி பெற்றவை. அவற்றை

யெல்லாம் கேள்வி ஞானத்தைப் பரப்புதற்கும் பயன்படுத்தினர் நம் முன்னேர். பூசாரி வசமுள்ள உடுக்கை, பம்பை, சிலம்பு ஆகிய கருவிகளைவிடக் கேள்வி அறிவுக்குத் திறம்படப் பயன்படும் கருவிகள் வேறுண்டோ? உடுக்கை அதிர, சிலம்பு ஒலிக்க, பம்பை முழங்கப் பூசாரி மதுரை வீரனின் கதையைக் கூறும்போது, பாமர மக்கள் மெய்ம் மறந்து கேட்பதைப் பட்டி தொட்டிகள் தோறும் இன்றும் காணலாம். வில்லுப் பாட்டில், சுதந்திரப்போர் வரலாறு, கட்டபொம்மன் வரலாறு ஆகியவற்றை நடத்திவருவதைக் காண்கிறேம். இதே முறையில் பூசாரிக் கருவிகளைக் கொண்டு கிராம மக்களிடையே விவசாயத்தின் மேன்மையையும், தொழிலின் பெருமையயும் கதைகளின் மூலம் போதிக்கலாம். இந்தக் கருவிகள் மூலமே கப்பலோட்டிய தமிழன், வீரபாண்டியக் கட்டபொம்மன் ஆகியோர் நடத்திய வீரப்போரை விளக்குவதன் மூலம் இந்திய நாட்டின் விடுதலை இயக்க வரலாற்றைக் கற்பிக்கலாம்.

கேள்வி அறிவைப் பெருக்கப் பயன்படும் மற்றொரு சாதனம் தெருக் கூத்தாகும். பண்டைக் காலத்தில் பாமர மக்கள் நாடகக் கலையின் மேன்மையைத் தெருக் கூத்துக்கள் மூலமாக வன்றி, வேறு வழியில் அறிய வசதி ஏது? தெருக் கூத்தாளர்களின் நடிப்பும், அவர்கள் நடத்தும் நாடகங்களின் அமைப்பும், அந்த நாடகங்களில் போதிக்கப்பட்ட கருத்தும் இன்றைய நாகரிக உலகுக்குப் பொருந்தாதனவாக இருக்கலாம். ஆனல், பாமர மக்களின் கலைஞானத்தைப் பெருக்கத் தெருக் கூத்துத் தான் ஆரம்ப நிலையாகப் பயன்பட்டது என்பதை மறக்கக் கூடாது. அது மட்டுமன்று; மதுரை வீரன், வீரபாண்டியக் கட்டபொம்மன் போன்ற தமிழ் வீரர்களின் வரலாறுகளை மறையவிடாமல் காத்த பெருமையும் தெருக்

கூத்தாடிகளுக்கே உண்டு. ஆகவே, தெருக்கூத்து முறையைப் பயன்படுத்தியும் எட்டுக் கல்வி கற்க வசதியற்ற மக்களிடையே கேள்வி அறிவைப் பரப்பலாம். ஆனால், தெருக்கூத்து என்று சொல்லும்போது "அகோ தெப்படி யென்றால்......... மகாராஜா சபைக்கு வரும் விதங் காண்க" என்று கூறும் கட்டியக்காரன் வசனத்தைக் கருத்தில் வைத்துச் சொல்லவில்லை. குறைந்த கட்டணங்கள் வைத்தோ, கட்டணங்கள் இல்லாமலோ, திறந்த வெளி நாடகங்கள் நடத்த வேண்டும் என்றே கூறுகிறேன்.

பொதுவாக, நாடகங்கள் என்பன கிராமப்புறத் தெருக் கூத்துக்களின் மறுமலர்ச்சியே யன்றி வேறல்ல. திறந்தவெளி நாடகங்கள் ஊர்கள் தோறும் நடை பெறுவதற்குத் திட்டமிட்டுச் செயலாற்ற வேண்டும். இந்த நாடக மேடைகளில் நகைச்சுவையரசு என். எஸ். கிருஷ்ணன் தயாரித்து நடத்தி வரும் "ஐம்பதும் அறுபதும்" போன்ற புத்தம் புதிய நாடகங்கள் இடம் பெறவேண்டும். பழைய தெருக் கூத்துப் பாணியைப் புதிய கருத்துக்களுக்குப் பயன்படுத்த முடியும் என்பதற்கு "ஐம்பதும் அறுபதும்" எடுத்துக் காட்டாகும்.

கேள்வி ஞானத்தைப் பெருக்கும் பொறுப்பை அரசாங்கமோ, அரசாங்க அதிகாரிகளோ நேரிடையாக ஏற்பதால் போதிய பலன் கிட்டாது. மக்களிடையே செல்வாக்குப் பெற்றுள்ள உத்தியோகப் பற்றற்றவர் களிடம் இந்தப் பொறுப்பை ஒப்படைத்து, அரசாங்கமும் அதிகாரிகளும் எல்லா வகையிலும் உதவி புரிய வேண்டும்.

நகராட்சி, நாட்டாட்சி மன்றங்களும் இந்தத் துறையில் கவனம் செலுத்தலாம். சென்னை நகராண்மைக் கழகத்தார்

பாண்டு வாத்தியக் குழுவினரை அமர்த்தி, நகரப் பூங்காக் களிலும், கடற்கரையோரப் பகுதிகளிலும் வாசிக்கச் செய்வதன் மூலம் மக்களின் இசை ஞானத்தை வளர்க் கின்றனர். அது போலவே, கல்வி—சுகாதாரம் சிக்கன வாழ்வு ஆகியவற்றில் மக்கள் அறிவு பெறுவதற்காக இசைக் கருவிகள் மூலம, காலட்சேபம், நாடகங்கள் முதலியன நடத்தலாம்.

" எல்லோரும் கேளுங்கள் !" என்ற இயக்கம் வெற்றி யடையத் தமிழ் எழுத்தாளர்கள் பெரும் பணியாற்ற வேண்டும். எழுத்தாளர்களின் எழுதுகோல் மக்களின் கேள்வி ஞானத்தைப் பெருக்குவதற்கான புத்தம் புதிய கதைகளை, கவிதைகளை ஆயிரம் ஆயிரமாக எழுதிக் குவிக்க வேண்டும். அப்படி எழுதப்படும் கதைகளிலும் கவிதைகளிலும் மக்களின் பாராட்டைப் பெற்றவைகளுக்கு அரசியலார் பரிசு தரவேண்டும்.

" எல்லோரும் கேளுங்கள் !" என்ற இயக்கம் பாமரர் களுக்காகவே நடத்தப்படுவது என்ற உண்மையை மறந்துவிடக் கூடாது. எனவே, இந்த இயக்கத்தில் ஈடுபடுவோர் படித்துப் பட்டம் பெற்றோரா யிருப்பினும் பாமரத் தன்மையைப் பழிப்பவராயிருக்கக் கூடாது. பண்டிதர்களாயினும் பாமரர்களோடு நெருங்கிப் பழகு வதன் மூலம்தான் அவர்களுக்குத் தொண்டுபுரிய முடியும்.

" எல்லோரும் கேளுங்கள் !" என்ற இயக்கத்தால் அறியாமை அகலும்; அறிவு வளரும். பாரதியார் கூறியது போல், " வெள்ளம் போல் கலைப் பெருக்கும் கவிப் பெருக்கும் மேவுமாயின் பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருட ரெல்லாம் விழி பெற்றுப் பதவி கொள்வார் ". என்பது திண்ணம்.

ஆகவே, "எல்லோரும் கேளுங்கள்!" என்ற முழக்கத்தோடு, "காதுபடைத்தும் செவிடர்களாய் வாழாதீர்" என்று வள்ளுவர் செய்த வேண்டுகோளும் நாடெங்கும் பரவ வேண்டும். "அறிவு பெருகட்டும்: அறியாமை ஒழியட்டும்" என்ற வாக்கியங்கள் தமிழகத்தின் மூலை முடுக்குகள் தோறும் ஒலிக்க வேண்டும். ஆட்சியாளர்கள் செய்வார்களா? அறிவியல் நிபுணர்கள் சிந்திப்பார்களா?

## கட்டபொம்மன் பரம்பரை

தமிழகம், அறிஞர்களைத் தந்ததுபோலவே, ஆற்றல் படைத்த வீரர்களையும் கொடுத்திருக்கிறது. மண்ணுசையும் பொறுமையும் கொண்டதன் விளைவாக, பறம்புமலைப் பாரியைப் பகைத்தனர், சேர-சோழ-பாண்டியர்கள். பறம்பு மலைப் பாரி, ஒரு சிற்றரசன். அவனது பகைவர்களோ படை பலம் படைத்த பேரரசர்கள். அப்படியிருந்தும், வாள் வலியும் தோள்வலியும் இழந்த நேரத்திலும் மன வலியை இழக்காது போராடி உயிர் நீத்தான் பாரி வேந்தன்.

அடிமைத்தனம் இன்னதென்று அறியாத நம் தமிழகத்தை அடிமைப்படுத்தி ஆள முயன்றான் ஆர்க்காடு நவாப். அவனை ஒரு அங்கமாகக் கொண்ட இஸ்லாமியப் பேரரசு, இந்தியா வெங்கணும் பரவியிருந்தது. அந்தப் பேரரசின் பிரதிநிதி என்ற ஆணவத்தால் செஞ்சிப்பதியின் சிற்றரசனை தேசிங்கு ராஜனை, தனக்குக் கப்பம் செலுத்தி கைகட்டி நிற்க வேண்டுமென்று கட்டளையிட்டான் ஆர்க்காட்டு நவாப். செஞ்சிவேந்தன் அஞ்சவில்லை. கப்பங் கட்டி நாடாள்வதைவிட, கடும்போர் புரிந்து சாவதையே

பெரிதாக எண்ணினான். தனது எண்ணத்தின்படியே, சுதந்தரத்தைக் காக்கப் போராடி அப்போரில் உயிர் நீத்தான் வீரன் தேசிங்கு.

இஸ்லாமியப் பேரரசு அஸ்தமித்த பின்னர், இங்கிலாந்துப் பேரரசு இந்தியாவில் காலூன்றத் துவங்கியது. என்றென்றும் தென்னாட்டை ஆள முடியுமென்று எண்ணிக் கொண்டிருந்தான் ஆர்க்காட்டு நவாப். அந்த எண்ணத்திற்கு மாறாக கிழக்கிந்தியக் கம்பெனியாரிடம் தான்பட்ட கடனுக்காக தென்னாட்டு அரசுரிமையை விலை கூறிவிட்டான் நவாப். ஆனால், செஞ்சிப்பதியானைப் பெற்றெடுத்த தமிழினத்தின் வீரம் செத்துப் போகவில்லை. இஸ்லாமியப் பேரரசை ஏற்காத தமிழினத்தார், இங்கிலீஷ் பேரரசை மட்டும் எதிர்க்காமல் விடுவரோ ? திருநெல்வேலிச் சீமையில் பாஞ்சாலங்குறிச்சி என்னும் சிற்றூரையாண்ட வீரபாண்டியக் கட்டபொம்மன் என்பான், வெள்ளையரை எதிர்த்துப்போரிட்டான். பாரிவேந்தனின் கொடைத் தன்மையும், செஞ்சிப்பதியானின் அஞ்சா நெஞ்சமும் ஒருங்கே படைத்தவன் கட்டபொம்மன். அவன், புலவர்களுக் கெல்லாம் பொருளீந்து காத்த புரவலன் ; தஞ்சமடைந்தோரை, ' அஞ்சேல் ' எனக்கூறி ஆதரித்த அறவோன் ; தனது குடிமக்களுக்குத் தந்தையாய், தாயாய், குருவாய், தெய்வமாய் நின்று காத்த செங்கோலன். ஆம், குடிமக்களை உயிராகவும், தன்னை உடலாகவும் எண்ணி ஓம்பினான் வீரபாண்டியன்.

வீரபாண்டியனின் தலைநகராக இருந்ததும், தான் அழிந்ததின் மூலம் தமிழகத்திற்கு அழியாப் புகழ் தந்ததுமான பாஞ்சாலங்குறிச்சியை ஒட்டினாற்போல் உள்ளது ஒட்டப்பிடாரம் என்னும் ஒரு சிற்றூர். அவ்வூரில்தான் வீரபாண்டியன் துவக்கி வைத்த சுதந்தரப் போரைத்

தொடர்ந்து நடத்திய கப்பலோட்டிய தமிழர் வ. உ. சி. பிறந்தார். வீரபாண்டியன் நாடாண்ட குறுநில மன்னன்; கப்பலோட்டிய தமிழரோ, அடிமைக் குடிமகன். அவருக்கு ஆளும் உரிமையுண்டு; திறமையுமுண்டு. ஆயினும், இந்தியா முழுவதிலும் ஆங்கிலேயர் ஆதிக்கம் செலுத்திய காலத்தில் பிறந்தவர். அதனால் அடிமைக் குடிமகனாகவே மதிக்கப்பட்டார். ஆனால், சிதம்பரனார், அடிமைத்தனத்தை அங்கீகரிக்கவில்லை. அடிமை கொண்ட அன்னியரை எதிர்த்துப் போர் புரிந்தார்.

கட்டபொம்மனும், கப்பலோட்டிய தமிழரும் சுதந்திர ஆர்வத்தால் உந்தப்பட்டவர்கள். வீரபாண்டியன், தன் கைவசமிருந்த சுதந்தரத்தை அன்னியர் பறிக்காமல் பாதுகாக்கப் போர் புரிந்தான். அவ்வீரனின் வழித் தோன்றலான சிதம்பரனார், அன்னியர்கள் பறித்து விட்ட சுதந்தரத்தை மீண்டும் அடைவதற்காகப் போராடினார்.

செஞ்சி வேந்தன் இஸ்லாமிய சாம்ராஜ்யத்தை எதிர்த்துப் போராடினாலும், இஸ்லாமிய மதத்தவரை அவன் பகைக்கவில்லை. மகமத்கான் என்ற ஒரு இஸ்லாமியனை தனது படைத் தலைவனாகக் கொண்டிருந்தான் இந்துவான தேசிங்கு. செஞ்சிப் பதியைத் தனது சொந்த நாடாகக் கருதினான் தேசிங்கு. அதன் சுதந்தரத்துக் காகவே உயிர் விட்டான். அதுபோலவே, இஸ்லாமியனான மகமத்கானும் செஞ்சியைத் தனது சொந்த நாடாக எண்ணினான். ஆர்க்காட்டு நவாப் தனது சமயத்தவனாயினும், அவனது சாம்ராஜ்ய வெறியை எதிர்த்துப் போரிடத் தயங்கவில்லை. நாட்டுப் பற்று வேறு; மதப் பற்று வேறு. மதப்பற்றைவிட நாட்டுப்பற்றே உன்னதமானது; உயிரினும் சிறந்தது.

செஞ்சி வேந்தனைப் போன்ற பண்புடையவர்கள் கட்ட பொம்மனும் கப்பலோட்டிய தமிழரும். வீரபாண்டியன் ஆங்கில சாம்ராஜ்யத்தை எதிர்த்துப் போராடினான். என்றாலும், அவன் வெள்ளை நிறத்தவருக்கு எதிராக வெறி கொள்ளவில்லை. டேவிசன் என்ற ஆங்கிலேயரைத் தனது ஆருயிர்த் துணைவராகக் கொண்டிருந்தான் வீர பாண்டியன். வீரபாண்டியனின் தம்பியான ஊமைத் துரையும் இந்த நெறிக்கு விலக்கானவன் அல்லன். வீர பாண்டியன் மாண்ட பிறகு தான் நடத்திய ஆயுதப் புரட்சியில் தனது வாள் முனைக்கு ஆற்றமாட்டாது அலறி யழுத ஆங்கிலேயர் பலருக்கு அபயமளித்தான்.

ஒரு சமயம், பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக்கு உள்ளே இருந்தவண்ணம் புரட்சிவீரர்களும், கோட்டைக்கு வெளியே இருந்த வண்ணம் ஆங்கிலேயரும் ஒருவரை யொருவர் சுட்டுக் கொன்று கொண்டார்கள். மிகப் பயங்கரமான யுத்தம்! ஊமைத்துரை படையினரின் சுதந்தர உணர்வு உச்ச நிலையை எய்துவிட்ட நேரம் அது. அந்தச் சமயத்தில் வெள்ளைக் கொடி பிடித்து இறந்து விட்ட ஆங்கிலேயர்களுக்கு கிறிஸ்துவ முறைப்படி இறுதிச் சடங்கு நடத்த அவகாசம் கோரினர் ஆங்கிலத் தளபதிகள். கிறிஸ்தவ மதம், ஊமைத்துரைக்குப் புறம்பானதாயினும், பிறரது மத உணர்ச்சிக்கு மதிப்புத் தருவதுதான் மனித உணர்ச்சி என எண்ணினான் ஊமைத் துரை. போரைத் தற்காலிகமாக நிறுத்தி எதிரிகளுக்கு அவகாசம் கொடுப்பது அவர்கள் கையைப் பலப்படுத்தி விடும் என்று அவனுடைய ஆலோசனையாளர்கள் எச்சரித் தனர். அந்த எச்சரிக்கையை அவன் ஏற்கவில்லை. வெள்ளையர்கள் கோரிய வண்ணம் பல மணிநேரம் போரை நிறுத்தினான். இறந்துவிட்ட வெள்ளையர்களின் பிணங்

களைத் தூக்கி அடக்கம் செய்யும் பணியிலும் தனது வீரர்களை ஈடுபடுத்தினான். மறைந்தவர்களின் ஆன்மா சாந்தியடைய பாதிரிமார்கள் செய்யும் பிரார்த்தனை பழுதுபடா வண்ணம் அமைதி நிலவச் செய்தான். ஆம்; அன்பு என்ற பண்பு அறவோருக்கு மட்டுமே உரித்தானதன்று; மறச் செயல் புரியும் மாவீரருக்கும் உரித்தானதே.

கட்டபொம்மன் சகோதரர்களிடம் கண்ட இந்த நெறியை அவர்களுக்குப் பின் தோன்றிய கப்பலோட்டிய தமிழரிடமும் காண முடிந்தது. கப்பலோட்டிய தமிழன் சிறைப்படக் காரணமா யிருந்தவன் ஆஷ் என்னும் வெள்ளையன். அவருடைய கப்பல் கம்பெனியை நஷ்டத் திற்குள்ளாக்கி நாசமடையச் செய்தவர்கள், பிரிட்டிஷ் ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி வெள்ளையர்களே. வ. உ. சி-க்கு எதிராக நடந்த அடக்குமுறைக் கொடுமைகள் அனைத்துக்கும் ஆதரவு காட்டினர் ஹார்விமில் வெள்ளை முதலாளிகள். சிதம்பரனாருக்கு இரண்டு ஜன்ம தண்டனை விதித்தான் பிரிட்டிஷ் நீதிபதி பின்ஹே. சிதம் பரனாருக்கு நேர்ந்த இத்தனை கொடுமைகளுக்கும் முதற் காரணமாயிருந்தது ஆங்கிலப் பேரரசு. ஆனால், வ. உ. சிதம்பரனார் வெள்ளை ஏகாதிபத்தியத்தை எதிர்த்தார்; வெள்ளையரின் சுரண்டலை எதிர்த்தார்; வெள்ளை நிறத் தவர் என்பதற்காக அவர் எவரையும் எதிர்க்கவில்லை. அதற்கு மாறாக, வெள்ளையர் பலரை தமது அன்புக்குரிய நண்பர்களாகக் கொண்டிருந்தார். நீதிபதி வாலஸ் என்பவர் மீது தாம் கொண்டிருந்த அன்புக்கு அறிகுறியாக, தமது மகனுக்கு வாலீசுவரன் என்று பெயர் தந்தார். ஆம்; வாலசை வாலீசுவரராக்கி விட்டது அவருடைய அன்பும் தமிழ்ப் பண்பும்.

கட்டபொம்மன், தான் தூக்குமேடையில் நிற்குங்கால் "போர் முனையில் பகைவன் வாளால் மாளக் கொடுத்து வைக்க வில்லையே" என மனம் வருந்திக் கூறிக் கண்ணீர் சிந்தினன். கப்பலோட்டிய தமிழர் மரணப் படுக்கையில் இருக்கையில், "சுந்தரத்தைக் காணக் கொடுத்து வைக்காமல் சாகிறேனே" என இதயம் விம்மி ஏங்கி அழுதார். "ஒருவனின் வீரத் தன்மையை அளப்பதற்கு அவன் எப்படி வாழ்கிறான் என்பது சான்றல்ல. எப்படி இறக்கிறான் என்பதுதான் சரியான சான்று" என்றார் மேனாட்டு அறிஞர் ஒருவர். அதுபோல உயிர்விடும் நேரத்திலும் வீர உணர்ச்சியை வெளிப்படுத்திய மாவீரர் களாவர் கட்டபொம்மனும் கப்பலோட்டிய தமிழரும். பிற்காலச் சந்ததியார்களாகிய நாம் அப்பெரு வீரர்களை மறவாது போற்றுவோமாக! பகைவனை வெறுக்காமல் அவனது உள்ளத்தில் படிந்த பகைமையை வெறுப்போமாக! ஆதிக்கம் செலுத்துவோனை எதிர்த்துப் போரிடும் போது, அவனைப் பெற்ற சாதியை அழிக்க நினைக்கா திருப்போமாக!

—'செங்கோல்'—*12-10-'52.*

## பொம்மன் புகழுடன் போட்டி !

தமிழ் இனத்தவரிடம் பல நல்ல குணங்கள் இருக்கின்றன. அது போல, சில குறைபாடுகளும் இல்லாமலில்லை. அந்தக் குறைபாடுகளில் ஒன்று தமிழர்களுக்குள்ளேயே சாதி வழிப் பிரிந்து நின்று போராடுவதும் சமயவழிப் பிணக்குக் கொண்டு சண்டையிடுவதுமாகும். அதற்காக உண்மையைப் பொய் என்று சாதிக்கவும் சிலர் தயாராகி விடுகின்றனர். இந்தக் குறைகள் ஒழிந்து வெளியுலகத்தின் முன்னே தமிழர் பெருமை பெற வேண்டும் என்ற எண்ணம் எல்லோரிடத்திலும் தோன்றும் நாள் எந்நாளோ !

வீரபாண்டியக் கட்டபொம்மன் புகழ் ஐந்தாண்டுகளுக்கு முன்பு வரை மாசு அடைந்து மங்கி மறைந்து கிடந்தது. ஆம், பத்தரை மாற்றுத் தங்கம் பித்தளைக்கும் குறைவாக மதிப்பிடப்படுவது போல !

வீரபாண்டியனைக் கொள்ளைக்காரனாகவும் கொலைகாரனாகவும் அறிமுகப்படுத்தினர் ஆங்கிலேயரான எழுத்தாளர்கள்.

சுயசாதிப் பற்றுதல் காரணமாக, வீரபாண்டியனை முருகக் கடவுளின் அருள் பெற்ற பக்தனாக, கண்ணற்ற

வர்களுக்குக் கண் கொடுக்கும் தெய்வமாக அறிமுகப் படுத்தினர் சில தமிழறிஞர்கள்.

'பாளையக்காரர்கள் போராட்டம்' என்ற இருளடர்ந்த முள் படர்ந்த காட்டுக்குள்ளே வீரபாண்டியனின் சுய சரிதத்தை, தனிப்பெரும் தியாகத்தை மறைத்து வைத்தனர் சில சரித்திர ஆசிரியர்கள்.

பாமர மக்களோ காடன், மாடன், மதுரைவீரன் போன்ற சிறு தெய்வங்களில் ஒன்ருக எண்ணி வீரபாண்டியனுக்கு வழிபாடு நிகழ்த்தினர். இவை வேண்டுமென்றே நிகழ்த்தப் பெற்ற குறைபாடுகளோ, குற்றங்களோ அல்ல. அந்தந்தச் சந்தர்ப்ப சூழ்நிலைகளுக் கேற்ப நிகழ்ந்தவை என்றே சொல்ல வேண்டும். இந்தக் குறைபாடுகளைப் போக்கி, பாஞ்சாலங்குறிச்சிப் புரட்சி தான் இந்திய விடுதலைப் போருக்கு ஒத்திகையாக நடந்த முதல் யுத்தம் என்பதை உலகுக்கு அறிவித்தது தமிழரசுக் கழகம். பாஞ்சாலங்குறிச்சி மன்னன் வீரபாண்டியன் தான் அந்த ஒத்திகைப் போரில் களபலியான முதல் தியாகி என்பதையும் உலகம் உணர்ந்தது.

இப்படி ஒரு தெளிவான கண்ணேட்டம் ஏற்பட்ட பிறகுதான் பாஞ்சாலங்குறிச்சிப் புரட்சியைப் பற்றிய உண்மைச் செய்திகளை, வீரபாண்டியனின் உயரிய தியாகத்தை பாமரர் முதல் பாராள்வோர் ஈருக எல் லோரும் அறிந்தனர். அதன் விளைவாக பட்டி தொட்டிகள் தோறும் கட்டபொம்மனுக்கு விழா நடக்கின்றது. பள்ளி களிலும் கல்லூரிகளிலும்கூடக் கட்டபொம்மன் புகழ் பேசப்படுகின்றது.

இந்த நிலை கண்டு மகிழ்ச்சியடைய முடியாத சிலர், கட்டபொம்மனின் புகழுக்கு மாசு கற்பிக்க முன் வந்திருக் கின்றனர். அவர்கள் சரித்திர வழிப்பட்ட உண்மைகளைச்

சான்று காட்டி எனது சிந்தனையைத் தூண்டவில்லை. சாதி, மத, கட்சி உணர்ச்சிகளால் என்னை நிந்தித்துப் பேசுகின்றனர்.

ஆகவே, என்னை நிந்திப்பவர்களின் சிந்தனைக்குச் சில விஷயங்களை இந்தக் கட்டுரையின் மூலம் காணிக்கையாக்குகின்றேன்.

"வீரபாண்டிய கட்டபொம்மன் மண்ணுண்ட மன்னன். ஆதலால், அவன் தனது அரசுரிமையைக் காப்பாற்றிக் கொள்ளத்தான் ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடினான். அது சுயநலமே யொழிய சுத்தமான தேசபக்தியல்ல" என்று குறை கூறுகின்றனர் சிலர்.

இது, ஆராய்ச்சிக்கு நிற்காத அர்த்தமற்ற வாதம். இந்தியாவில் ஆங்கிலேயர் கால் வைத்த காலத்தில் மக்களுடைய அரசியல் உரிமைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு இன்று போலக் கட்சி வழிப்பட்ட அரசியல் தலைவர்களிடமில்லை. அரியாசனத்தில் அமர்ந்திருந்த அரசர்களிடமே இருந்தது. ஆம்; அந்நியரின் படையெடுப்பிலிருந்து நாட்டைப் பாதுகாக்கும் பொறுப்பு மன்னரிடம்தான் இருந்தது. மன்னர்தானே மக்களின் ஏகப் பிரதிநிதி. "உட்பகை புறப்பகைகளி லிருந்து நாட்டைக் காக்கும் பொறுப்பு மன்னனுடையது" என்று தான் நமது இலக்கியங்கள் எல்லாம் கூறுகின்றன. ஆகவே, 20-ம் நூற்றாண்டு ஜனநாயக அரசியலைக் கவனத்தில் வைத்து, 18-ம் நூற்றாண்டு அரசியல் நிலையைக் குறை கூறுவது அரசியல் நெறியோ, ஆராய்ச்சியோ அல்ல.

வீரபாண்டியன், கேவலம் தனது அரச பதவியைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடியிருந்தால், அவனுக்குத் தூக்கு மேடை ஏறுவ

தற்குத் துணிவு பிறந்திருக்காது. ஆங்கிலேயர் கேட்ட அற்ப சொற்பக் கப்பத்தைக் கட்டிவிட்டு அரச பதவியில் இருந்திருப்பான். அப்படிச் செய்யாததற்குக் காரணம் அவனுடைய நெஞ்சத்தில் நிறைந்திருந்த சுதந்திர உணர்ச்சிதான்.

கட்டபொம்மன் தனது அதிகாரப் பதவிக்காகவோ அந்தஸ்துக்காகவோ அல்லாமல், மக்களுக்காக மக்கள் சார்பில் சுதந்திரப் போரைத் துவக்கினுன்; தொடர்ந்து நடத்தினுன். அதனுற்றுன், அவன் துவக்கி வைத்த போரை, அவன் மாண்டு மறைந்த பிறகும் மக்கள் தொடர்ந்து நடத்தினர்.

ஆகவே, வீரபாண்டியனைப் பாஞ்சாலங்குறிச்சி மன்னனுக மட்டுமல்லாமல், தமிழகத்தின் சுதந்திரத்திற் காகப் போராடிய வீரனுகவும் எண்ணி, பாஞ்சாலங் குறிச்சிப் போராட்டத்தை ஆராய வேண்டும்.

"வீரபாண்டியன் ஒரு ஆந்திரன். அவனுக்கு விழா நடத்துவதா தமிழரசுக் கழகத்தின் வேலை ?" என்று வினு எழுப்புகின்றனர் சில நண்பர்கள்.

தமிழ்நாடு, பல்வேறு மொழியினரை தன்னகத்துக் கொண்டிருக்கிறது. பரதேசி என்று வந்த பிறதேசத் தாரை யெல்லாம் பரிவுடனே வரவேற்று தங்களுடைய செல்வத்தில் பங்கும் தந்த பெருமை தமிழருக்கே உண்டு. தமிழகத்தின் தலைவாசலுக்குத் தாள் பூட்டுக் கிடையாது.

தமிழ் நாட்டில் குடிபுகுந்த பிற நாட்டார் எல்லாம் நாளடைவில் தமிழைக் கற்றுத் தமிழரோடு தமிழராகக் கலந்துவிட்டதையே சரித்திர ஏடுகளில் காண்கிறோம். ஆகவே, "தமிழர் யார் ?" என்ற கேள்விக்குச் சரித்திரப் புத்தகத்தைப் பார்த்துப் பதில் கொடுத்துவிட முடியாது.

வரலாற்ரேடு, இன்றைய மக்கள் வாழும் வகையையும் கவனித்துத்தான் பதிலளிக்க வேண்டும்.

இந்தக் கண்ணேட்டப்படி பார்த்தால், வீரபாண்டியன் சுத்தத் தமிழன்தான். 700 ஆண்டுகளுக்கு முன்பு அவனுடைய மூதாதையர் பெல்லாரி ஜில்லாவிலிருந்து புறப்பட்டுத் தெற்கு நோக்கி யாத்திரை செய்து திருநெல்வேலி ஜில்லாவில் குடி புகுந்தனர். ஆனல், அவர்களின் சந்ததியார் ஆந்திர இனத்திற்குரிய தனித் தன்மைகளை இழந்து, அந்த இனத்தின் மொழியான தெலுங்கையும் மறந்து, தமிழையே தாய்மொழியாகக் கொண்டு, தமிழரோடு தமிழராகக் கலந்து விட்டனர். வீரபாண்டியனின் சாதியார், சந்ததியார் இன்றுங்கூட வீட்டில் தமிழ்தான் பேசுகின்றனர். தங்களைத் தமிழர்களாகவே எண்ணுகின்றனர்.

கட்டபொம்மன், தமிழ்த் தெய்வமான செந்தில் முருகனையே சிந்தையில் வைத்து வழிபட்டான். அவன் தமிழ்ப் புலவர்களைப் போற்றும் புரவலனுக விளங்கினுன். அவனுடைய தலைமை அமைச்சர் தானுபதிப் பிள்ளை ஒரு தமிழர் ; படைத் தலைவன் வெள்ளையத் தேவன் ஒரு தமிழன் ; இறுதியாகத் தமிழினத்தின் உரிமைக்காகவே போராடி, தமிழ் மண்ணுக்கே தனதுடலை அர்ப்பணித்தான், அம் மாவீரன்.

தமிழகத்தில் தமிழராகப் பிறந்திருந்தும் தமிழினத்தை அடிமைப் படுத்திய ஆங்கிலேயர்களுக்கு ஆதரவு காட்டியவர்களைவிட, வீரபாண்டியன் சுத்தத் தமிழன்; சுதந்திர உணர்ச்சி கொண்ட தமிழன்.

வீரபாண்டியக் கட்டபொம்மன் தமிழகத்தில் பிறக்காமல், தமிழனுக இல்லாமல் வேறெரு இனத்தவனுக இருப்பினும், அவனுக்கு விழாக் கொண்டாடுவதில் குற்ற

மில்லை. ஏனெனில், அவன் சுதந்திர வீரன்; விடுதலை வேள்வியில் உயிரை அர்ப்பணித்த வீரத் தியாகி. காந்தியடிகளுக்கு விழாக் கொண்டாடுகிறோம்; அவர் தமிழர் என்பதற்காகவா? இல்லையே! கம்யூனிஸ்ட் கட்சித் தமிழர்கள் காரல் மார்க்ஸைப் போற்றிப் புகழ்கின்றனர்; அவர் தமிழரா? இல்லையே!

அறிவும், பண்பும், தியாகமும், தேசபக்த ஆர்வமும் எங்கு—யாரிடமிருந்தாலும் அவர்களையெல்லாம் தமிழர் போற்றத்தான் வேண்டும். அவர்கள் தமிழர்களாகவும் இருந்து விட்டால் இரட்டை மகிழ்ச்சி!

இன்னும் சிலர், "இந்திய விடுதலைப் போரைத் துவக்கி வைத்த முதல் வீரன் கட்டபொம்மன் அல்லன்" எனக் கட்சி பேசுகின்றனர். விடுதலைப் போரைத் துவக்கி வைத்த முதல் வீரன் 'செம்புலிங்க நாடார்' என்கிறார் ஒரு தம்பி லிங்கம். 'அவனுமில்லை; கான் சாயபு என்ற இஸ்லாமியன் இந்திய விடுதலைப் போரைத் துவக்கி வைத்தவன்' என்கிறார் இன்னொரு இஸ்லாமியத் தோழர்.

இவர்களோடு போட்டியிட்டுக் கொண்டு, "இந்திய விடுதலைப் போரின் முதல் தளபதி தளவாய் வேலுத் தம்பிதான்" என்று மலையாளிகள் வட்டாரத்திலிருந்து ஒரு குரல் கிளம்புகிறது.

இன்னும், மத்திய பாரதத்திலும் யாரோ இரு தேச பக்தர்களின் பெயர்கள், வீரபாண்டியக் கட்டபொம்மனின் புகழோடு போட்டியிடுகின்றன.

இந்தப் போட்டியைக் கண்டு நான் ஒரு வகையில் பூரிப் படைகின்றேன். தேசபக்தியில், தியாகத்தில் முதலிடம் பிடிப்பதற்குப் போட்டி ஏற்படுமானால், பூரிப் படையத்தானே வேண்டும்! ஆனால், போட்டியிலே பொய்யும் பொறாமையும் கலந்துவிடக் கூடாது.

"பாஞ்சாலங்குறிச்சி" என்ற சிற்றரசின் சார்பாக நடைபெற்ற சுதந்தரப் போராட்டத்தைப் பின்னணியாகக் கொண்டுதான் தமிழரசுக் கழகத்தார் வீரபாண்டிய னுக்குப் புகழ் பாடுகின்றனர். அந்தப் பாஞ்சாலங் குறிச்சியின் சுதந்திரப் போராட்டம்தான், பாரத நாட்டின் சுதந்திரப் போராட்டத்துக்கு வித்தாக அமைகின்றது. ஆம்; பாஞ்சைப் புரட்சிதான் தென்னாட்டுப் பாளையக்காரர் களின் போராட்டமாக விரிவடைகிறது. அதை ஒத்திகை யாகக் கொண்டு, பின்னர் உலகறிய நடைபெற்றதுதான் இந்தியாவின் விடுதலைப் போராட்டம். இதைச் சரித்திர ஏடுகளிலிருந்தும், பிற சான்றுகளிலிருந்தும் ஆண்டு, மாதம், தேதியோடு உறுதிப்படுத்த முடியும்.

பாளையக்காரர்களின் புரட்சியிலே வீரபாண்டியக் கட்டபொம்மனைப் போலவே நெற்கட்டுஞ் செவ்வல் பாளையக்காரர் பூலித்தேவர், சிவகங்கை பாளையத்துக்குரிய மருது சகோதரர்கள் ஆகிய மாவீரர்களும் தியாகிகளாவர். ஆயினும், வேறு பல காரணங்களால், பாளையக்காரர்கள் புரட்சியிலே பாஞ்சாலங்குறிச்சிப் புரட்சி சிறப்பிடம் பெறு கிறது. அந்தப் புரட்சியின் பயங்கரமான ஒரு கட்டத்தில் தலைமை தாங்கிய கட்டபொம்மன் புகழ் நமது கவனத்தைக் கொள்ளை கொள்கிறது. முக்கியமாக, பாஞ்சாலங்குறிச்சிப் புரட்சி 1755 ல் துவங்கி 1801-ம் ஆண்டுவரை இடை விடாமல் தொடர்ந்து நடைபெற்று வந்திருக்கிறது. ஆம்; பாஞ்சைப் புரட்சி நடந்த காலம் 46-ஆண்டுகளாகும். தென்னாட்டுப் பாளையக்காரர்களின் உரிமைப் போரின் துவக்கமும் முடிவும் பாஞ்சைப் புரட்சிதான். மற்றொரு வகையிலும் பாஞ்சைப் புரட்சி மற்ற பாளையக்காரர்கள் நடத்திய போராட்டத்தைவிட வரலாற்று ஏடுகளில் சிறப் பிடம் பெறுகிறது.

அதாவது, ஆங்கிலக் கம்பெனியார் தென்னாட்டில் கப்பம் வசூலிக்கும் அதிகாரம் பெறுவதற்கு முன்பே, மொகலாய சாம்ராஜ்யத்தின் சின்னமாக விளங்கிய கர்னாடக நவாப்புக்கும் கப்பம் கட்ட மறுத்துப் போர் முனையில் நின்றது பாஞ்சாலங்குறிச்சிப் பாளையம்.

18-ம் நூற்றாண்டின் முற்பகுதியில், தமிழகம் ஏகாதிபத்திய வெறியர்களின் வேட்டைக் காடாக விளங்கியது. முன்னரே புகுந்துவிட்ட மொகலாய வல்லரசின் ஆதிக்கம் ஒரு புறம்; அப்பொழுது தான் புகுந்து கொண்டிருந்த ஆங்கில—பிரெஞ்சு நாடோடிகளின் சூழ்ச்சி ஒரு புறம்; இவற்றால் தமிழகம் முழுவதுமே அராஜகப் படுகுழியில் ஆழ்ந்து கிடந்தது.

சேர, சோழ, பாண்டிய வல்லரசுகள் மீண்டும் தலையெடுக்க முடியாதபடி நாசமாகி விட்டதால், அந்த அரசுகளின் சின்னங்களாக நூற்றுக் கணக்கான சிற்றரசுகளே தமிழகமெங்கணும் நிலவி இருந்தன. இந்தச் சூழ்நிலையை கவனத்தில் வைத்துப் பாஞ்சாலங்குறிச்சியின் உரிமைப் போரை ஆராய வேண்டும்.

பாஞ்சாலங்குறிச்சியின் உரிமைப் போரில் வீரபாண்டியக் கட்டபொம்மன் தலைமை தாங்கிய காலம் 1792—98 ஆகும். அதற்கு 37 ஆண்டுகளுக்கு முன்பே போர் துவங்கிவிட்டது. அந்தக் காலத்தில் பாஞ்சாலங்குறிச்சியின் மன்னராக இருந்தவர் **பொல்லாப் பாண்டிய கட்டபொம்மு நாயக்கர்** ஆவார்.

முதலில் முகலாய சாம்ராஜ்யத்தின் ஆதிக்கத்தை எதிர்த்துத்தான் பாஞ்சாலங்குறிச்சிப் போர் ஆரம்பமானது. அந்த சாம்ராஜ்யத்தின் கீழ் சிற்றரசாக விளங்கிய ஆற்காட்டு நவாப்புக்குக் கப்பம் செலுத்த மறுத்தார் பொல்லாப் பாண்டியர். அந்நாளில், மொகலாய சாம்

ராஜ்யத்தை அந்நிய வல்லரசாகவே எண்ணினர் தமிழ் மக்கள். அதனால், அன்னிய அரசுக்குக் கப்பம் செலுத்தி வாழ்வது அவமானமென்று எண்ணினர் பாஞ்சாலங் குறிச்சி அரசர்.

ஆகவே, அப்போது ஆற்காட்டு நவாபாக இருந்த முகமதலி என்பவர் தமது தமயன் **மாபூஜ்கான்** தலைமையில் 1755-ல் பாஞ்சாலங்குறிச்சிமீது படையெடுப்பு நடத்தினர். அரசியல். ஆதிக்கம் பெறும் உள் நோக்கத்துடன் ஆற்காட்டு நவாபுக்கு உதவி செய்வதுபோல் நடத்தி வந்த கிழக்கிந்தியக் கம்பெனியாரும் இந்தப் படையெடுப்பில் கலந்து கொண்டனர். ஐரோப்பிய வீரர்கள் 200 பேரையும், இரண்டு பீரங்கிகளையும் நவாபுக்கு உதவியதோடு கர்னல் **ஹீரான்** என்ற ஆங்கிலேயனையும் படைத் தலைவனாக அனுப்பினர்.

ஆனல், ஆற்காட்டு நவாபின் படையும், ஆங்கிலேயர் படையும் பாஞ்சாலங்குறிச்சியைத் தாக்குவதற்குத் தைரிய மின்றித் திரும்பிவிட்டன. பொல்லாப் பாண்டியரின் ராஜதந்திர நடவடிக்கையும் இதற்கு மற்றோர் காரண மாகும். இந்தப் படையெடுப்பின் போது தமிழ் நாட்டு முஸ்லிமான கான்சாகிப் என்னும் யூசுப்கான், மாபூஜ் கானின்கீழ் படைத் தலைவனாக இருந்தான் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இதற்குப் பின்னும், வீர பாண்டியக் கட்டபொம்மன் காலத்துக்கு முன்னுமாக மற்றொரு படையெடுப்பு நிகழ்ந்தது. பறங்கியரின் பேய்வாய் பீரங்கிகள் பாஞ்சாலங் குறிச்சியைப் பலமாகத் தாக்கின. என்றாலும், அப்போதும் பாஞ்சைப்பதியைக் கைப்பற்ற முடியாமல் பகைவரின் படைகள் பின்வாங்கின.

இப்படி, 1755-ல் தொடங்கித்தொடர்ந்து நடைபெற்று வந்த பாஞ்சாலங்குறிச்சியின் சுதந்திரப் போர், வீர

பாண்டியக் கட்டபொம்மன் காலத்தில் தென்னுடுமுழுவது மாகப் பரவி, " பாளையக்காரர்கள் போர் " என்று பெயர் பெற்றது. ஆனல், அது பாளையக்காரர்கள் போர் மட்டு மல்ல ; தென்பாண்டித் தமிழ் மக்கள் நடத்திய உரிமைப் போருமாகும்.

வீரபாண்டியக் கட்டபொம்மன் காலத்துக்கு முன் வரை பாஞ்சாலங்குறிச்சியின் உரிமைப் போர், ஆற்காட்டு நவாபின் ஆதிக்கத்தை எதிர்ப்பதாகத்தான் இருந்தது. 1792-ல் தென்னுட்டுப் பாளையக்காரரிடம் வரி வசூலிக்கும் உரிமையை ஆற்காட்டு நவாபிடமிருந்து ஆங்கிலேயர் கைப்பற்றி விட்டதால், 1792-க்குப் பிறகு வீரபாண்டியக் கட்டபொம்மன் தலைமையில் நடந்த பாஞ்சாலங்குறிச்சிப் போர் ஆங்கில ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதாகவே இருந்தது. அதனுற்ருன், பாஞ்சாலங்குறிச்சிப் போரில், கட்டபொம்மன், அவனுடைய முன்னோர்களை விட முக்கி யத்துவம் பெற்றுவிட்டான்.

தென்னுட்டுப் பாளையக்காரர்கள் போராட்டத்தில் வீரபாண்டியனுக்கு முன்னும் பின்னும் பல பாளையக் காரர்கள் ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடியிருக் கின்றனர். ஆனல், வீரபாண்டியக் கட்டபொம்மன் தலைமையில் நடந்த போராட்டத்திற்குத்தான் ஆங்கில சரித்திர ஆசிரியர்களும் முக்கியத்துவம் கொடுத்திருக் கின்றனர். தமிழரசுக் கழகத்தார் வீரபாண்டியக் கட்ட பொம்மனைப் புகழ்வது, சாதி உணர்ச்சியாலோ அல்லது மத உணர்ச்சியாலோ அல்ல ; தேசபக்தியால்தான். அம் மாவீரன் தமிழ் நாட்டவனுக, தமிழகத்தின் உரிமைக்குப் போராடியவனுக இருப்பது இரண்டாவது காரணமாகும்.

கட்டபொம்மனுடைய புகழுக்குக்களங்கம் கற்பிப்பதை விட்டு அவன் மூலம் தமிழினத்தின் புகழை அகில

உலகத்திலும் பரப்ப ஒவ்வொரு தமிழனும் பாடுபட வேண்டும்.

தமிழகத்தார் கட்டபொம்மனைப் போற்றத் துவங்கிய பிறகு போட்டி உணர்ச்சி காரணமாகக் கேரளமக்களும் தளவாய் வேலுத் தம்பிக்கு விழா நடத்தத் துவங்கியிருக்கின்றனர். திருவனந்தபுரம் செக்ரட்டேரியட்டின் முன்பு அவனுடைய சிலையை வைக்கவும் முன்வந்திருக்கின்றனர். கேரளம் மட்டுமல்லாமல், வட இந்தியாவும் கட்டபொம்மனின் புகழோடு போட்டியிடுகின்றது. ஆம்; தமிழ்நாடு கட்டபொம்மனுக்கு விழா நடத்தத் துவங்கிய பிறகு, வடநாட்டிலும் சிப்பாய்ப் புரட்சியின்போது ஆங்கிலேயர்களால் கொல்லப்பட்ட தலைவர்களுக்கு ஆண்டுதோறும் விழா நடத்தப்படுகின்றது.

வீரர்களுடைய—புலவர்களுடைய புகழோடு போட்டியிடுவது நல்லதுதான். ஆனால், அந்தப் போட்டியில் பொறாமை கலந்து விடக் கூடாது. அதிலும், தமிழன் ஒருவனுடைய புகழுக்குத் தமிழரே களங்கம் கற்பிக்க முயல்வது நல்லதல்ல.

வாழ்க கட்டபொம்மன் புகழ்!

—'செங்கோல்' *6—11—'55*

## வ. உ. சி. யின் கனவு

நவம்பர் 18-ம் நாள், வீரர் வ. உ. சிதம்பரனாரின் நினைவு நாளாகும். ஏகாதிபத்திய எதிர்ப்புக்கு வித்திட்ட சிதம்பரனாரின் திருநாளை, ஏகாதிபத்தியத்தை வெளியேற்றி வெற்றி கண்ட தமிழ் மக்கள், முன்னிலும் பன்மடங்கு சிறப்பாகக் கொண்டாடக் கடமைப் பட்டிருக்கின்றனர்.

சிதம்பரனார் நாத்திகரல்லர்; ஆத்திகர். ஆனால், அவர் கண்ட சமயம், மக்கள் சமுதாயம். அவர் போற்றிய வேதம், திருக்குறள். அவர் கடைப்பிடித்த சமய நெறி, எம்மதத்தையும் சம்மதமாகக் கொள்ளும் சன்மார்க்க நெறி.

வ. உ. சி. க்கு கடவுள் நம்பிக்கை யுண்டு; ஆனால், தேசத்தையே தெய்வமாகக் கொண்டு வழிபட்டார் அப் பெரியார். உயிர் விடுந்தருவாயில் திருவாசகம் பாடச் சொல்லிக் கேட்பர் சைவ சமயத்தவர். அப்படியே, பிரபந்தம் ஓதக் கேட்பர் வைணவர்கள். ஆனால், சிதம்பரனார், பாரதியாரின் நாட்டுப்பாடலைப் பாடச் சொல்லிக் கேட்டுக் கொண்டே உயிர் நீத்தார். அவர், தமது ஆவி பிரியும்போதும் கோடானு கோடி ஏழைமக்கள்

வறுமையால் வாடும் நிலையை நினைந்து கண்ணீர் விட்டுக் கதறியழுதார்.

வ. உ. சி, சாதி வேற்றுமைகளைச் சகித்துக் கொள்ளாதவர். அந்தணர் என்றும் அல்லாதார் என்றும் பிரிந்து நின்று பிணக்குக் கொள்வதை அவர் விரும்பினாரில்லை. தேசபக்தியின் பெயரால் பிராமணர் செல்வாக்கு காங்கிரசில் அதிகரித்துவருவதை அவர் கண்டித்ததுண்டு. ஆனால், அதே நேரத்தில் பிராமணரல்லாத (ஜஸ்டிஸ்) கட்சியினரின் தேசத் துரோகச் செயல்களையும் அவர் கண்டிக்கத் தயங்கவில்லை. இதனால் தேசபக்த பிராமணர் சிலர், வ. உ. சி, யை வகுப்புவாதி என்று வசைபாடினர். பிராமணரல்லாதாரில் பலர், அவரை பார்ப்பனருக்குத் துணை புரிபவர் என்று பழி தூற்றினர்.

> " பிராமண அபிமானி என்று பிராமணரல்லாத சிறுவர் சிலராலும், 'வஞ்சக சொரூபி' என்று பிராமணர் ஒருவராலும் அநியாயமாகப் பழிக்கப் பெறுபவன் நான் "

என்று, 1927-ல் சேலம் ஜில்லா அரசியல் மாநாட்டில் தலைமை தாங்கிப் பேசுகையில் வ. உ. சி. வாய்விட்டுக் கூறி வருந்தினார். அவரது நடுநிலைமை உள்ளத்தை அறிந்து கொள்ள முடியாத வகுப்புவாத—தேசத்துரோகக் கூட்டத்தினர், சிதம்பரனார் மீது பழி கூறி அவரது அரசியல் வாழ்வையே பாழ்படுத்தினர்.

காந்தியடிகளிடம் அவருக்கு வேறு எவரையும்விட அளவு கடந்த மதிப்பு உண்டு. அடிகளாரின் ஒழுக்க வாழ்வு அவரது உள்ளத்தைக் கவர்ந்தது. என்றாலும் காந்தீயத்தின் ஆணிவேர்களான அகிம்சை, ஒத்துழையாமை என்ற தத்துவங்கள் வ. உ. சி. க்குப் பிடிக்கவில்லை. சிதம்பரனார், திலகரின் மெய்த் தொண்டர். அவரையே

அன்னை, குரு, தெய்வம் ஆகிய எல்லாமாகக் கொண்டவர். எனவே, திலகரின் கொள்கைக்கு எதிராகக் கிளம்பிய காந்தீயத்தை அவர் ஏற்க மறுத்தது இயற்கையே. ஆனால், காந்தீயத்தின் மேலிருந்த வெறுப்பு, காங்கிரஸ் வெறுப்பாக இறுதிவரை மாறவே இல்லை. அவர் ஆயுள் வரை காங்கிரஸ் மகாசபை ஒன்றையே தமது அரசியல் கட்சியாகக் கொண்டு அதன் வளர்ச்சிக்குத் துணை செய்து வந்தார்.

தமது கொள்கையை அடியோடு கண்டித்த நிலையிலும், வ. உ. சி. மீது காந்தியடிகள் அன்பு செலுத்தி வந்தார். காந்தியடிகள் வ. உ. சி. யின் உள்ளத்தை அறிந்த உத்தமர். அடிகளார் தென்னாப்பிரிக்காவிலிருந்த காலந் தொட்டுப் பிள்ளையவர்கள் உயிர் நீத்த காலம்வரை இருவரும் ஒருவர்மீது ஒருவர் இடையறாத அன்பு செலுத்தி வந்தனர்.

வ. உ. சி. அரசியல் தலைவர் என்பதை மட்டுமே தமிழகம் அறியும். ஆனால், அவர் சிறந்த கலைஞர் என்பதை அறிந்தோர் மிகச் சிலரேயாவர். "அரசியலுக்கும் கலைக்கும் என்ன சம்பந்தம் ?" என்று கேட்கும் தலைவர்கள் பலரை நாம் பார்த்து வருகிறோம். பெரும்பாலான அரசியல்வாதிகளுக்குக் கலையுணர்வு இருப்பதில்லை. அப்படியே, பல கலைஞர்களுக்கும் அரசியல் உள்ளம் அமைவதில்லை. கலையுணர்வற்ற அரசியல் வாழ்வில் கலக உணர்வே நிறைந்திருக்கும். அரசியல் ஞானமற்ற கலைவாழ்வு, உலகியலுக்கு ஒதுக்கிடமாகும். இதை அரசியல்வாதிகளும், கலைஞர்களும் உணர்ந்து கொள்ளும் நாளே தமிழகத்துக்கு நன்னாளாகும்.

வீரச் சிதம்பரனார், வெறும் அரசியல்வாதி மட்டுமல்ல; சிறந்த கலைஞருங்கூட. பேச்சுக்கலை, அவரது உடன்

பிறப்பு. இலக்கியக்கலை, வ. உ. சி. யின் இணைபிரியாத் தோழன். காவியக்கலை, சிதம்பரனாரின் அல்லலைத் துடைக்கும் இல்லக் கிழத்தி. நாடகக் கலை, அவரது உள்ளத்தைக் கவரும் செல்லக் குழந்தை. வீரக்கலை, அவருக்கு மரபு வழிவந்த மதிப்பற்ற சொத்து. ஆம், கலைப் பண்புகளையே குடும்பமெனக் கொண்டு வாழ்வு நடாத்திய கலைஞராவர் வ. உ. சி.

சிதம்பரனார், பொருளாதாரத் துறையிலே பல்வேறு 'இஸங்'கள் காட்டும் பாதையெதிலும் சென்றவரல்லர். இந்தியாவின் அக்கால நிலையில் அதை எதிர்பார்க்கவும் முடியாது. என்றாலும் பாட்டாளி வர்க்கத்தின் போராட்டத்திற்குப் பாதை போட்டுத் தந்தவர் வ. உ. சி. இந்தியாவிலேயே முதன் முதல் நடந்த அரசியல் கலப்புடைய வேலைநிறுத்தம், தூத்துக்குடியில் வ. உ. சி. நடத்திய 'ஹார்வி மில்' தொழிலாளர் வேலை நிறுத்தமேயாகும்.

இந்தியாவில் முதன் முதலாகத் துவக்கப்பட்ட சென்னைத் தொழிலாளர் சங்கத்திலும் அதிக அளவுக்குப் பங்கு கொண்டிருந்தார் வ. உ. சி. பெரம்பூர் ரயில்வே தொழிலாளர் சங்கத்தின் துணைத் தலைவராயிருந்து பாட்டாளி வர்க்கத்தின் முன்னேற்றத்திற்கு அவர் பட்ட பாடு கொஞ்சமன்று.

இன்றைய தேசியவாதிகளில் மிகப் பெரும்பாலோர் தாய்மொழிப் பற்று அற்றவர்களாகவே காணப்படுகின்றனர். தலைவர்களுங்கூட இதற்கு விதி விலக்கல்ல. ஆனால், தேசிய இயக்கத்தின் ஆரம்பகால வரலாறு இதற்கு முற்றிலும் மாறுபட்டதாகும். துன்பமொன்றே தங்களைத் தொடர்ந்து வந்த காலத்திலும் பழங்காலத் தேசபக்தர்கள் மாண்புமிக்க தமிழை மறந்தார்களில்லை.

ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரில் ஈடுபட்டு அல்லலுற்ற வ. வே. சு. ஐயர் தமிழிலே நல்ல புலமை வாய்ந்தவர். கம்ப ராமாணத்துக்கு அவர் எழுதியுள்ள ஆராய்ச்சியுரை, ஒவ்வொரு தமிழனும் பெருமை கொள்ளத் தக்கதாகும். கம்பரது புலமைத் திறமையை வாயார வாழ்த்துபவர் வ. வே. சு. ஐயர். அதே நேரத்தில், அதில் காணப்படும் குற்றங் குறைகளையும் அறிவுக் கண் கொண்டு ஆராய்ந்து ஆபாசமற்ற முறையில் வெளிப்படுத்திய பெருமை வ. வே. சு. ஐயருக்கு உண்டு.

கவியரசர் பாரதியார் அரசியல் மேடையில் தமிழுக்கு சிறப்புத் தேடித்தந்த முதல் புலவராவார். தமிழின் துணை கொண்டு ஏகாதிபத்திய எதிர்ப்புக்குப் படை திரட்டிய பெருமை பாரதியாரின் தனியுரிமை. 'கம்பர்—வள்ளுவர்—இளங்கோ இம் மூவருக்கும் இணையான புலவர் இவ்வுலகத்தில் இல்லை', 'உலக மொழிகளிலே தமிழ் ஒன்றே உயர்ந்த மொழி' என்றெல்லாம் பெருமை பேசியவர் பாரதி. இவ்வாறு பிற்காலத்தில் வ. வே. சு. ஐயரும், பாரதியாரும் தேசியத் துறையிலே தமிழுக்குப் பெருமை தேடித்தரக் காரணமாயிருந்தவர் சிதம்பரனார் என்றால் மிகையன்று.

சிறை வாழ்க்கையே கொடுமையானது. அதிலும் செக்கிழுக்கும் வாழ்க்கை மிகமிகக் கொடுமையான தென்பதை மக்கள் அறிவர். ஆனால், சிதம்பரனார் சிறைப்பட்டு செக்கிழுத்த நேரத்திலும் தமிழை மறந்தாரில்லை. மெய்யறம் போன்ற புது நூல்கள் பலவற்றை இயற்றினார். ஜேம்ஸ் ஆலன் ஆங்கிலத்தில் எழுதிய ஆத்மீக நூல்கள் பலவற்றைத் தமிழில் மொழி பெயர்த்தார். சிறையில் தன்னோடு வாழ்ந்து வந்த கிரிமினல் கைதிகளுக்கும் தமிழ் இலக்கியங்களைக் கற்றுத் தந்தார்.

" இலக்கணத்தைத் தீயிலிட்டுக் கொளுத்துங்கள் !" என்று பேசும் " பேராசிரியர்கள் " பெருகிவரும் காலம் இது! வ. உ. சிதம்பரனாரோ, இலக்கியத்தையும் இலக்கணத்தையும் தமது இருகண்களெனக் கொண்டவர். " தொல்காப்பியம் " என்ற இலக்கண நூலுக்குப் புத்துரை இயற்றினார் அப்புலவர் பெருமான்.

" தொல்காப்பியம் ", " திருக்குறள் " ஆகிய இரு தமிழ்நூற்களைக் கற்றுணராத எவரும் தமிழரல்லர் என்று அவர் அடிக்கடி கூறுவதுண்டு. தமிழால் ஏடெழுதிப் பொருள் சேர்ப்பர் பலர்; தமிழை வளர்ப்பதாகத் தலை மயங்கிப் பேசிப் புகழ் சேர்ப்பர் சிலர். தமிழை கட்சிச் சண்டைக்குக் கருவியாகக் கொள்வோருமுண்டு. ஆனால், வ. உ. சிதம்பரனார், தமிழைக் கொண்டு வயிறு வளர்த்தாரில்லை. தமிழை வளப்பதாகவும் தற்பெருமை கொள்ளவில்லை. " தமிழ் என் அறிவை வளர்க்கிறது; தமிழ் எனக்கு வாழ்வளிக்கிறது " என்று அவர் கூறாத மேடை இல்லை.

சிதம்பரனார் அரசியல் தலைவர், அறிவுமிக்க புலவர், ஆத்மஞானி, போராட்டவாதி, கருணையுள்ளம் படைத்த வள்ளல்— இப்படி எத்தனையோ அடைமொழிகளை அவரது பெயருடன் சேர்த்து போற்றிப் புகழலாம். ஆனால், இவை எல்லாவற்றையும் விடக் "கப்பலோட்டிய தமிழன்" என்ற பெயரே வீரச் சிதம்பரனாருக்குச் சிறப்பளிப்பதாகும். ஏனெனில், அது ஒன்றே அவர் செயற்கரிய செய்ததைக் குறிக்கிறது.

சிதம்பரனாருக்கு முன்னே பல நூற்றாண்டுகள், தமிழர் எவரும் தூர தேசங்களுக்குக் கப்பல் விடத் துணிந்ததில்லை. அதிலும், " சுதேசியம் வாழ்க " என்று கூறுவதே 'ராஜத் துரோக' மாயிருந்த காலத்தில்,

சொந்தமாகக் கம்பெனி நிறுவிக் கப்பல்களை வாங்கி, ஏகாதிபத்தியக் கம்பெனியுடன் போட்டி யிடுவதென்பது எளிதல்ல.

வெள்ளையர்களை — இல்லை, ஏகாதிபத்திய வெறியர்களை இந்தியாவிலிருந்து வெளியேற்ற விரும்பினர். அதன் பலன் இரண்டு ஜன்ம தண்டனை! ஆனால் வீரச் சிதம்பரம் பட்ட துன்பம் வீண் போகவில்லை. ஆகஸ்ட் பதினைந்தில் வெள்ளையர் ஆட்சி வெளியேறக் கண்டோம்.

வீரர் வ. உ. சி., வெள்ளையரை வெளியேற்றிச் சுயாட்சி பெறுவதோடு, அவர்தம் சுரண்டலையும் ஒழிக்கக் கருதியே கப்பலோட்டினர். அதன் விளைவாக, வந்தவருக் கெல்லாம் இல்லையென்னாது தந்த வள்ளல் சிதம்பரம் வறியவரானர்; மாற்றானுக்கெதிராகக் கப்பலோட்டிய மறத் தமிழர் சிதம்பரம், சென்னை பெரம்பூரில் மண்ணெண்ணெய் விற்றுப் பிழைத்தார்; ஆங்கிலேயரின் கொள்ளையை அகற்றப் பாடுபட்ட சிதம்பரம், சிந்தாதிரிப் பேட்டையில் அரிசிக் கடை வைத்துக் காலந் தள்ளினர்.

இவ்வளவெல்லாம் பாடுபட்ட அந்த வீரத் திருமகன் கனவு கண்டபடி வெள்ளையரின் சுரண்டல் ஒழியவில்லை. தங்கச் சுரங்கங்கள், தேயிலைத் தோட்டங்கள், பஞ்சாலைகள், துறைமுக வாணிபங்கள் ஆகிய அனைத்திலும் ஆங்கிலேயர் ஆதிக்கம் இன்றளவும் அப்படியே இருந்து வருகின்றது. எனவே, வீரர் வ. உ. சிதம்பரனரின் நினைவு நாளில் அவர் ஒழிக்க விரும்பிய ஆங்கிலேயர் சுரண்டலை ஒழித்தே தீருவோமென்று உறுதி கொள்வோமாக!

மறத்தமிழர் வ. உ. சி., இந்திய உபகண்டம் முழுவதையுமே ஏகாதிபத்தியத்தின் பிடியிலிருந்து விடுவிக்கப் பாடுபட்டார். விடுதலை பெற்ற சுதந்திர இந்தியாவில் அவரது தாயகமான தமிழகம் சுயாட்சியுடை

யதாக இருக்க வேண்டுமென்றே விரும்பினர். இதை அவர் இயற்றிய தனிப்பாடல் திரட்டில், "கோனாட்சி நீக்கிக் குடியாட்சி ஏற்படுத்தி நானாட்சி செய்வேன்" என்று நாட்டறியக் கூறினர். ஆம், வ. உ. சிதம்பரனார் அரசுரிமை வேண்டியது அகில இந்தியாவுக்கும்தான். ஆனால் ஆள விரும்பியது தமிழகத்தையே. ஏனெனில், அதுதான் அவரது உரிமைத் தாயகம்.

வ. உ. சி. கண்ட இந்தக் கனவும் இன்னும் நனவாக வில்லை. ஆனால் அது நனவாகும் காலம் நெருங்கி வருகிறது. தமிழரசுக் கழகம், வ. உ. சிதம்பரனாரின் கனவை நனவாக்கும் அமைப்பு; வ. உ. சி. யின் வரலாறு, தமிழரசுப் படையினர் செல்ல வேண்டிய திசைக்காட்டும் கலங்கரை விளக்கு,

**வாழ்க சிதம்பரனார் புகழ் !**

'முரசு' *14-11-48.*

# செக்கிழுத்த படலம்

இந்தியாவிற்குச் சுயஆட்சி என்றால், தமிழகத்திற்குத் தனியாட்சி வேண்டுமென்ற குரல் எங்கும் ஒலிக்கிறது. இந்திய மண்ணிலிருந்து வெளிநாட்டுச் சுரண்டல் வெளியேறியே தீரவேண்டும். அதே போல, தமிழ் மாகாணத்திலிருந்தும் பிற மாகாணச் சுரண்டல்காரர்கள் வெளியேற வேண்டும் என்று விண் அதிரக் கூவுகின்றான் தமிழன். மொழிப்பற்றும், தமிழின உணர்ச்சியும் மிகுந்த காரணத்தால்தான் இவ்வாண்டு சிதம்பரனார் வாழ்க என்ற வாழ்த்தொலி திக்கெட்டும் ஒலிக்கின்றது. தமிழ்க் கண்கொண்ட தேசியவாதி, வீர சிதம்பரனாருக்கே முதல் வணக்கத்தைச் செலுத்துவானென்பதில் ஐயமுண்டோ?

பாரதியார் பாடலால் சக்திபெற்ற தேச வீரர் எண்ணற்றோர். ஆனால் பாரதியாரின் பாடலுக்கே சக்தி கொடுத்தவர் நம் சிதம்பரனார். எனவே பாரதியாரின் கவிதைக்குத் தலைவணங்குவோன் எவனும் சிதம்பரனாரின் வீரத்திற்கும் சிரம் வணங்கியே தீரவேண்டும்.

“ஏகாதிபத்திய எதிர்ப்புணர்ச்சி சிதம்பரம் பிள்ளையின் எலும்பைப் பற்றிக்கொண்டதே” என்று அவரைத்

தண்டித்த ஆங்கில நீதிபதி அலறினன்; இரண்டு ஆயுள் தண்டனையும் விதித்தான். "அடிமைப்பட்டு அடங்கி வாழ்ந்த ஆண்மையற்ற மக்களை கூட்டம்கூட்டி, ஏழ்மைப் பட்டு இரக்கும் தொழில் இழிவென்று ஏசினய்; ஓட்டம் நாங்கள் எடுக்கவென்றே கப்பல் ஓட்டினய். விட்டேனு பார்! சுட்டு வீழ்த்திப் புத்திபுகட்டுவேன்" என்று மிரட்டினன் கலெக்டர் விஞ்ச்துரை.

அசைந்து கொடுக்கவில்லை ஆண்சிங்கம். "கோனுட்சி நீக்கிக் குடியாட்சி ஏற்படுத்தி நானுட்சி செய்வேன்" என்று நாடறியப் பறைசாற்றினர் சிதம்பரனர்.

மதுரையிலே சொக்கநாதப் பெருமான் மனித உருவிலே வந்து மண் சுமந்தாராம், அறம்தழைக்க! இது மெய் என்பார்கள் பக்தர்கள்; பொய் என்பார்கள் புராண எதிர்ப்பாளர்கள். ஆனல், சுதந்தரத் தேவதை மனித வடிவில் வந்து தேச விடுதலைக்காகச் செக்கிழுத்த சரித்திரம் ஒன்றுண்டானல், அது சிதம்பரனரின் திருச் சரிதம்தான் என்பதை மறுக்க முடியாது.

அன்றைய நாட்களில் சிறைவாசம் என்பது இன்றுள் ளதுபோலல்ல. இன்று பணக்காரர்களுக்கு 'ஏ' வகுப்பும், பட்டதாரிகளுக்கு 'பி' வகுப்பும், அதற்கும் மேற்பட்டு பாதுகாப்புக் கைதி என்று ஒரு தனி வகுப்பும் வந்து விட்டது. மனைவிக்கு நோய் என்று மனுப்போட்டால் விடுதலை! இன்னும் எத்தனையோ வித சௌகரியங்கள். அன்று பணமும் பட்டமும் பாராளும் அறிவும் ஒருங்கே படைத்த சிதம்பரனருக்கு, செக்கிழுப்பதும், கல்லுடைப் பதும் தேசபக்திக்குக் கிடைத்த சன்மானங்கள்.

சிதம்பரனரின் மனைவியாரும் மன்னர்பிரானுக்கு மனுப்போட்டதுண்டு. எதற்காக? மணாளனை விடுதலை செய்வதற்காக அல்ல. பத்துநாள் பரோலில் வந்து

பார்த்துவிட்டுப்போக அல்ல. "என் நாயகனைச் சிறையில் செக்கிழுக்கவும், கல்லுடைக்கவும் செய்திருக்கிறார்கள் சிறை அதிகாரிகள். நீதியற்ற இந்தக் காரியத்தை உடனே நிறுத்தச் செய்யுங்கள். அல்லது அவருக்களித்த தண்டனை முறைப்படி அந்தமான் தீவுக்கு அனுப்பி வையுங்கள்" என்பதுதான் சிதம்பரனாருக்கு வாய்த்த சீமாட்டி செய்து கொண்ட மனு. "தேரா மன்னா செப்புவ துடையோய்" என்ற கண்ணகியின் வீரத்தையன்றோ இது நினைப்பூட்டுகிறது.

சிதம்பரனார், தீண்டாமையொழிப்பில் தீவிரமானவர். பேச்சில் மட்டுமல்ல, செயலிலுங்கூட. அவர் காட்டிய செயல் எத்தகையது? சேரிக்குச் சென்று எண்ணெய், சிகைக்காய் கொடுப்பதல்ல. தின்பண்டங்கள் வழங்குவ தல்ல. ஆலயத்திற்கு அழைத்துச் சென்று ஆண்ட வனைக் காட்டுவதல்ல. சொர்க்கத்திற்குப் போகச் சூத்திரம் சொல்லித் தருவதல்ல. சிகைக்காய் தலை அழுக்கைப் போக்கலாம்; தரித்திரத்தைப் போக்காது. தின்பண்டத்தால் வாய் இனிக்கும்; வாழ்க்கை இனிக் காது. சாமியைக் கண்டவுடனே சாதம் வந்துவிடா தல்லவா ?

அவர் செய்த காரியத்தைப் பாருங்கள். சுவாமி சகஜானந்தம் என்ற ஹரிஜன நண்பரை, பிள்ளையவர்கள், இன்னுயிர்த் துணைவராகக்கொண்டு, இல்லத்தில் வைத்து தொல்காப்பிய நூலை ஐயமற அறிவித்தார். வள்ளுவர் குறளை வகையுடன் ஓதுவித்தார். பிள்ளையெனக்கொண்டு பேரன்புடன் வளர்த்துவந்தார். இன்று அதே சகஜா னந்தம்தான் அசெம்பிளியில் அங்கம் வகிக்கிறார். இந்தப் பதவி வகிக்கும் சக்தி அவருக்கு எப்படி வந்தது? ஆங்கிலக் கல்வியாலா? அது, அதிகம் கிடையாது.

சிதம்பரனார் புகட்டிய தமிழ்க் கல்விதான் காரணம். அவர் அளித்த ஆத்மீகக் கல்விதான் அறிவுடையாரெல்லாம் சகஜானந்தரைக் கண்டால் அஞ்சலி செய்யும் துறவி யாக்கி யிருக்கிறது. சகஜானந்தரைக் கேளுங்கள். சிதம்பரனார் என்ற பெயரைக் கேட்டதும் குருவே என்று கும்பிடுவார் ; தந்தையே என்று தலை வணங்குவார்.

தமிழர்களே ! சிறப்பாக, தேசபக்தர்களே !! உங்களை ஒன்று வேண்டுகிறேன். சிதம்பரனாரின் திருநாளில் அவர் அழிக்க விரும்பிய ஏகாதிபத்தியத்தை அழித்தே தீருவோம் என்று உருதிகொள்ளுங்கள். அவர் காண விரும்பிய இந்திய சுதந்திரத்தை நாம் கண்டே தீருவ தென்று கையுயர்த்திச் சொல்லுங்கள். இந்தியாவை இந்தியரே ஆளவேண்டும் என்ற எண்ணத்தோடு தமிழ கத்தைத் தமிழர்களே ஆளவேண்டுமென்றும் இணைத்துக் கொள்ளுங்கள். இந்த எண்ணம் ஈடேற இடர்ப்பாடு நேருமாயின், அது எங்கிருந்து எவரால் நேர்ந்தாலும் சரி எதிர்த்தே தீருவோம் என்று எழுச்சிகொண்டு கிளர்ச்சி செய்யுங்கள்.

வாழ்க சிதம்பரனார் நாமம் !

*—1946.*

## வள்ளுவர் வழிவந்த வ. உ. சி.

திருவள்ளுவர், ஒரு புலவர் மட்டுமல்லர்; புது உலகச் சிற்பியுமாவார். வருங்காலத் தமிழகம் எந்த வகையில் அமைய வேண்டுமென்பதற்குத் திருக்குறள் ஒரு சரியான எடுத்துக் காட்டு. தமிழ் சோஷலிசக் குடியரசு அமைக்க விரும்பும் ஒவ்வொரு தமிழரும் திருக்குறளில் வரும் பொருட்பாலை நன்கு ஆராய வேண்டும். குடி தழுவிக் கோலோச்சும் அரசே வள்ளுவர் காணும் அரசு. அதைத் தான் மக்கள் ஆட்சி என்று இன்றைய அரசியல் வாதிகள் கூறுகின்றனர்.

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் வாழ்வே வள்ளுவர் கூறும் வாழ்க்கை நெறி. அதைத்தான் இன்றைய அரசியல் நடையில் சோஷலிசம் என்று சொல்லுகின்றனர் பொருளாதாரப் பண்டிதர்கள்.

இன்னும் வ்வள்ளுவர் வகுத்த அரசியலின் ஒவ்வொரு வரியும் வருங்காலத் தமிழகத்தின் அரசியல் அமைப்புக்கும் வழிகாட்டியாக இருக்கும் என்பது எனது துணிவு.

திருக்குறளை உலக மறையென வாழ்த்துகிறோம். ஆனல், அதன் வழியில் வாழ்க்கையை நடத்துகிறோ

மில்லை. திருக்குறள் வழி வாழ்ந்த பெரியார் பலருண்டு, அவரில் தலை சிறந்தவர் வ. உ. சிதம்பரனார். சிதம்பரனார் வாழ்க்கையின் ஒவ்வொரு அணுவிலும் திருக்குறள் மணம் வீசக் காணலாம்.

> நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
> இல்லாண்மை ஆக்கிக் கொளல்

என்ற குறளைச் சிதம்பரனார் செப்பாத மேடையில்லை. "தனது தாய்நாட்டை நேசிப்பதே ஆண்மை. இஃதொழிந்த மற்றெல்லாம் பழுதுபட்ட ஆண்மையே" என்று புத்துரை கூறினார் அப்பெரியார். சுதேசிக் கப்பல் கம்பெனியைக் காட்டிக் கொடுத்தால் பல லட்சம் சன்மானம் தருவதாகப் பரதேசிக் கம்பெனியின் தூதர்கள் அவரை அணுகிக் கூறியபோது,

> ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
> சான்றோர் பழிக்கும் வினை

என்ற குறளை எடுத்துக்காட்டி அவர்களை விரட்டிவிட்டார்.

> எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு

என்ற குறளுக்கேற்பத் தாம் சிறைப்பட்ட காலை தமது குடும்பத்திற்குப் பொருள் உதவிய திரு. வேதியப்ப பிள்ளையின் நினைவாகத் தன் மகளுக்கு வேதவல்லி என்றும் பறிமுதலான வக்கீல் சன்னதைத் திருப்பித் தந்த தற்காக நீதிபதி வாலஸ் என்பவர்க்குத் தாம் காட்டும் நன்றிக்கறிகுறியாகத் தம் மகனுக்கு வாலீஸ்வரன் என்றும் பெயர் சூட்டிய பெருந்தன்மையைத் தமிழகம் மறக்கப் போமா!

இன்னும் இதுபோன்ற எடுத்துக்காட்டுகள் பல அவரது வாழ்க்கையில் உண்டு. திருவள்ளுவர் காட்டிய

*வழியில் தமிழர் வாழுங்காலமே திருக்குறள் வாழுங்கால மென்பதை ஒவ்வொரு தமிழரும் உணருவாராக!*

*" தமிழர் யார் ?" என்று எங்கும் கேட்கப்படுகின்றது. இதை பிறப்பைக் கொண்டு மட்டும் நிர்ணயம் செய்துவிட முடியாது. வாழ்க்கையைக் கொண்டே முடிவு செய்ய வேண்டும். நான் சொல்லுகிறேன்;* **திருக்குறள் வழி வாழ்க்கை நடத்துகிறவனே தமிழன்.** *தமிழர் அந்தப் பெரு வாழ்வைப் பெறுவாராக!*

வாழ்க வள்ளுவர் நாமம்! வாழ்க வ. உ. சி!

*—1947.*

## “ எஸ். எஸ். சிதம்பரம் ”

கடலிலே கலம் செலுத்தி வாழ்ந்தது பண்டைத் தமிழர் வரலாறு. பிற்காலத்தில் கன்னித் தமிழகம் அந்நியருக்கு அடிமைப்பட்டதால், தமிழகத்தின் கப்பற் றெழில் வந்தவருக்கெல்லாம் சொந்தமாயிற்று. தமிழன் கடல் தாவு கலையை மறக்கலானன். இந்த அவல நிலையி லிருந்து தமிழகத்தை மீட்கத் தோன்றினர் வ. உ. சிதம்பரனர். திரைகடலோடியும் திரவியம் தேடும் தொழிலை மீண்டும் தமிழகத்தில் நிலைநாட்டத் திட்டமிட்டார்.

கப்பலோட்டுவாயோ—அடிமை
கடலைத் தாண்டுவாயோ ?

என்று தன்னைப் பார்த்து ஏளனம் பேசிய கலெக்டர் விஞ்சின் கண்ணெதிரே கப்பலோட்டிக் காட்டினர் வ. உ. சி. அவர் ஓட்டிய கப்பல்களின் பெயர், ‘லாவோ’, ‘காலியா’ என்பனவாகும். வ. உ. சிதம்பரனர் பிரபு அல்ல; ஆனலும் பிச்சைக்காரருமல்ல. போதிய பொருள் படைத்த குடும் பத்தில் பிறந்தவர். ஆனல், தமது செல்வத்தையெல்லாம் கப்பல் தொழிலில் சிதறடித்து விட்டார்.

அவருடைய கப்பல் கம்பெனியைக் கவிழ்க்க, பிரிட்டிஷ் கப்பல் கம்பெனியார் பெரு முயற்சி செய்தனர். அதிகார வர்க்கத்தின் ஆதரவால் வெள்ளைக் கம்பெனியின் முயற்சி வெற்றி பெற்றது. சிதம்பரனார் இரண்டு ஜன்ம தண்டனை பெற்று சிறை புகுந்தார். மாலுமியற்ற சுதேசிக் கப்பல்கள் அடக்குமுறையில் சிக்கி அழிந்தொழிந்தன. ஆனால், எந்தப் பாதையில் சிதம்பரனார் கப்பல் விடத் துணிந்தாரோ, அதே பாதையில் 40 ஆண்டுகளுக்குப் பிறகு சிதம்பரத்தின் பெயரால் தமிழரின் கப்பல் தடுப்பாரின்றிச் செல்லுகிறது.

அன்று கப்பலோட்டியதற்காக சிதம்பரனாருக்குக் கடுந் தண்டனை விதித்தனர் ஆட்சியாளர். இன்றோ, இந்தியாவின் கவர்னர் ஜெனரல் "சிதம்பரம்" என்ற பெயர் தாங்கிய கப்பலைக் கடலிலே மிதக்கவிட்டு வ. உ. சி. யின் புகழை வாயாரப் பேசினார். ஆம், சிதம்பரனார் கண்ட கனவு பலித்தது. ஆனால், அந்தக் காட்சியைக் கண்ணாரக் காண, கப்பலோட்டிய தமிழன் கொடுத்து வைக்கவில்லை.

சிதம்பரனாரின் புகழ் மறைந்து விடுமோ என்று யான் அஞ்சிய காலமும் ஒன்றுண்டு. காரணம் சிதம்பரனார் மறைந்து நான்கு ஆண்டுகள் வரை நாட்டில் அவருக்கு எத்தகைய ஞாபகார்த்த விழாக்களும் நடைபெறாததே யாகும். ஏன்? அவர் இறந்த செய்தி கேட்டு, தூத்துக்குடியைத்தவிர வேறு எங்கும் மக்கள் துக்கம் கொண்டாடவில்லை. சிதம்பரனாருக்குச் சிலையெடுத்து வணங்குவது பற்றித் தேசபக்தர்கள் சிந்திக்கவில்லை. காரணம் வஞ்சமல்ல; வ. உ. சி. யின் வரலாறு அறியாததே யாகும்.

சிதம்பரனார் 1936-ம் ஆண்டுவரை வாழ்ந்திருந்தார். என்றாலும், அவர் நடத்திய அரசியல் புரட்சி—ஏகாதி

பத்தியக் கப்பலுக்கு எதிர்க் கப்பலோட்டிய செயல்-1906-ல் துவங்கி 1908-க்குள் முடிந்துவிட்டது. 1908-ல் சிறை புகுந்து 1912-ல் விடுதலையானர். அதற்குள் நாட்டின் அரசியல் நிலைமை மாறிவிட்டதால் தலைமையும் மாறியது.

விடுதலை பெற்ற வ. உ. சி. முன்போல அரசியலில் தலைமை தாங்க வழியில்லை. என்றாலும் அவர் தொழிலாளர் இயக்கங்களில் பங்கு கொள்ளலானர். அதற்குள் காந்தீய சகாப்தம் தோன்றி விட்டது. வ. உ. சி. க்கு காந்தீயத்தில் நம்பிக்கை இல்லை. எனவே, 1920-ம் ஆண்டில் அவ்வீரர் அரசியலிலிருந்தே விலகிக் கொண்டு விட்டார். அது முதற் கொண்டு, 1936-ல், இறக்கும் வரை—அதாவது 17 ஆண்டுகள்—அப் பெரியார் பொதுநலப் பணிகளில் ஈடுபடாதிருந்தார். ஆகவே, 1920-க்குப் பிறகு அரசியலில் ஈடுபட்ட எவரும் வ. உ. சி. யின் வீரப் புரட்சியை—கப்ப லோட்டிய விழுமிய செயலை-அறிந்து கொள்ள வழியில்லை.

ஆம், வ. உ. சி. வாழ்ந்த காலத்திலேயே காங்கிரஸ் காரர் மட்டுமின்றி, வேறு அரசியல் கட்சியினர் பலரும்கூட அவரை மறந்து விட்டனர். மற்றும் சிதம்பரனர் பல ஆண்டுகள் தொடர்ந்து மேடைகளில் தோன்றுதிருந்த காரணத்தால் அவரது வீரத் திருவுருவத்தைக்கூட மிகப் பெரும்பாலான அரசியல் வாதிகளும் பொதுமக்களும் பார்த்து மகிழ வாய்ப்பில்லை. இவைதான் மக்கள் வ. உ. சி. யை மறந்ததற்கான காரணங்கள்.

சிதம்பரனரின் வீரப் புரட்சியை நாட்டில் பரப்ப வேண்டுமென்று நெடுங்காலமாக எண்ணி வந்தேன். 1939-ம் ஆண்டு நான் சென்னை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் செயலாளனகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். சிதம்பரனரைப்பற்றி என் சிந்தையிலிருந்த திட்டத்தைச்

செயலாற்ற இந்தப் பதவியைப் பயன்படுத்தினேன். சென்னை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் பெயரால், இராயப்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் 1939ம் ஆண்டு டிசம்பர் மாதம் சிதம்பரனாருக்குச் சிலை நாட்டு விழாவை நடத்தினேன்.

இதைச் செய்து முடிப்பதற்குள் எனக்கு நேர்ந்த இடுக்கண்கள் எண்ணில. சென்னை ஜில்லா கமிட்டி எனது கோரிக்கையை ஏற்றுக் கொண்டதென்றாலும், அதைச் செய்து முடிக்க அதனிடம் பணம் இல்லை. எனவே, நகரிலுள்ள பணக்காரர்களை நாடினேன். அவர்களில் பலர் சிதம்பரனாரை அறியாதிருந்த காரணத்தால் அலட்சியம் காட்டினர்; சிதம்பரனாரை அறிந்திருந்த சிலரும் அவரது அரசியல் கொள்கையில் வேற்றுமை கண்டதால் என்னை வெறுங்கையோடு விரட்டினர்.

பணம் படைத்தோரின் நன்றிகெட்ட போக்கு எனக்கு எரிச்சலைத் தந்தது. என்றாலும், எடுத்த காரியத்தை எப்படியும் முடித்தே தீருவதென்ற முடிவுக்கு வந்தேன். எனது எண்ணம் ஈடேற ஏழை மக்களிடம் செல்வதைத் தவிர வேறு வழியில்லை. அம்பட்டன் வாராவதியருகிலுள்ள கட்டைதொட்டிக் கடைக்காரர்களிடம் சென்று கடைக்கு ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் வீதம் கையேந்திப் பெற்றேன். டிராம்வே தொழிலாளர் சங்கம், இராயபுரம் அலுமினியம் தொழிலாளர் சங்கம் போன்ற பல்வேறு தொழிற் சங்கங்களும் ஓரளவு பண உதவி புரிந்தன. சிலை செய்யுந் தொழிலில் சிறப்புப் பெற்ற திரு. பக்கிரிசாமி பிள்ளை குறைந்த விலைக்கு வ. உ. சி. யின் முக உருவச் சிலையைச் செய்து கொடுத்தார். திரு. எஸ். சத்தியமூர்த்தியின் தலைமையில், டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், சிதம்பரனாரின் சிலையைத் திறந்து வைத்து, "வ. உ. சி. தான் எனது

அரசியல் குருநாதர்" என்று கூறி அப்பெருமானை வாயார வாழ்த்தினர்.

வெறும் சிலை எடுத்து வைத்ததோடு என் சிந்தை குளிரவில்லை. வாய் படைத்தவரெல்லாம் சிதம்பரனாரின் புகழை வாழ்த்தும்படியான வாய்ப்பை ஏற்படுத்தவேண்டு மென்பதே எனது உள்ளக் கிடக்கை. எனவே, சிதம்பர னாரின் புகழை இசையால் இயற்றித் தருமாறு நாமக்கல் கவிஞரைக் கேட்டுக் கொண்டேன். வ. உ. சி. யின்பால் பேரன்பு கொண்ட அப்பெரியார் சிதம்பரனாரின் வரலாற்றை உள்ளடக்கி, விருத்தப் பாக்கள் ஆறும், கீர்த்தனை ஒன்றும் இயற்றித் தந்தார். சுத்தானந்த பாரதியாரும் ஆதித் தலைவர் சிதம்பரனாரின் புரட்சியை விளக்கி அழகிய கும்மிப் பாட லொன்றை இயற்றி அனுப்பினர். செந்தமிழ் நாட்டின் சிறப்பு வாய்ந்த நடிகரான ஆரியகான கே.எஸ். அனந்த நாராயணய்யரைக் கொண்டு கிடைத்த மேடைகளிலெல்லாம் அவற்றைப் பாடச் செய்தேன்.

சென்னையில் நடந்த சிலையெடுப்பு விழா தேசீய வட்டாரத்தைக் கண் விழிக்கச் செய்தது. விழாவை யொட்டித் தேசியப் பத்திரிகைகள் பல வ. உ. சி. யின் சேவையைப் பாராட்டி எழுதின. சிதம்பரனாரை மறந்த மக்களுக்கு அவருடைய பெயரை நினைவூட்டு மளவுக்குத் தான் சிலை எடுப்பு விழா பயன்பட்டது. மற்றபடி அவரது வரலாற்றை அறிந்து வ. உ. சி. யை மக்கள் வழிபடும் வீரத் தெய்வமாகச் செய்ய வசதி இல்லை. ஏனெனில் அந்நாள்வரை அவரது வரலாறு நூல் வடிவில் வெளி வரவில்லை. எனவே, சிதம்பரனாருக்குச் சிலை எடுத்ததோடு நிற்காமல், அவரது புரட்சி வரலாற்றைப் புத்தக வடிவில் வெளியிடுவதையும் எனது கடமையாகக் கொண்டேன்.

ஆனால் அப்போதைக்கு முப்பது ஆண்டுகளுக்கு முன்பு நடந்த தூத்துக்குடிப் புரட்சியைப் பற்றிய விவரங்கள் கிடைப்பது அரிதாக இருந்தது.

கோவில்பட்டி க. வ. கந்தசாமி என்ற நண்பர், சிதம்பரனார் இயற்றிய 'தனிப் பாடல் திரட்டு'—'எனது அரசியல் பெருஞ்சொல்' முதலிய நூல்களையும் வேறு சில செய்யுட்களையும் வருந்தித் தேடி எனக்கு விருந்தாக வைத்தார். அந்நூல்களிலிருந்து பல சுவையான கருத்துக்கள் கிடைத்தன. மற்றும் சிதம்பரனார் துவக்கிய கப்பல் கம்பெனியின் அமைப்பு, கப்பல்களின் பெயர், அவற்றை வாங்கிய விதம், வெள்ளைக் கம்பெனியுடன் சுதேசிக் கம்பெனியார் நடத்திய போராட்டம், வ. உ. சி. மீது நடைபெற்ற ராஜநிந்தனை வழக்கு ஆகியவைபற்றிய விவரங்களை 1906-முதல் 1908-வரை வெளிவந்த 'சுதேச மித்திரன்' தினப் பத்திரிகையிலிருந்து சேகரித்துக் கொண்டேன். அதற்குப் பின்னரே **கப்பலோட்டிய தமிழன்** என்ற பெயரில் சிதம்பரனாரின், வரலாற்றை வெளியிட்டேன். இந்நூல் வெளிவருவதற்கு முன்னர் வ. உ, சி. யை "தேசபக்தர் சிதம்பரம் பிள்ளை" என்றே அழைப்பது வழக்கம். இன்றோ, 'கப்பலோட்டிய தமிழன்' என்பதே அவருக்குச் சிறப்புப் பெயராகிவிட்டது.

சிதம்பரனாரின் வரலாற்றை வெளியிட்டு விட்டாலும், மக்கள் வழிபடுவதற்கு அவரது திருவுருவப்படம் தேவை என்பதை உணர்ந்தேன். எனது விருப்பத்திற்கிணங்க தமிழ்ப் பண்ணையாளர்கள், வ. உ. சி. யின் அழகிய முக உருவப் படத்தை அச்சிட்டு வெளியாக்கினர். அதன் விளைவாக, 'ஆசை முகம் மறந்து போச்சே' என்ற கவலை நீங்கிக் களிப்படைந்தேன். அது முதற்கொண்டுதான்

தமிழகமெங்கும் வ. உ. சிதம்பரனாருக்கு நினைவு நாள் கொண்டாடும் வழக்கம் நிலைபெற்று விட்டது.

வ. உ. சி. யின் அரசியல், சமூகக் கொள்கைகளுக்கு மாறுபட்டவர்கள்—மறந்துங் கூடத் தேசியப் பாதைக்குத் திரும்புவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டவர்கள் கூட அவரது படத்திற்குப் பூமாலை சூட்டி, புகழ் மாலை பாடத் துவங்கி விட்டனர்! ஆம், தமிழரிடம் மதிப்புப் பெற வேண்டுமானால், எந்தக் கட்சியும் வீரச் சிதம்பரனாருக்குத் தலைவணங்கியாகவேண்டுமென்ற அளவுக்கு வ. உ. சி. யின் புகழ் வளர்ந்து விட்டது.

இன்று சிதம்பரனாரின் புகழ் அவரது தாயகத்தின் வடக்கெல்லையாகிய வேங்கடத்தோடு மட்டும் நிற்கவில்லை. இமயம் வரைக்கும் எதிரொலி செய்கிறது. உதவிப் பிரதமர் சர்தார் பட்டேல் அவரைப் பாராட்டுகிறார். கவர்னர் ஜெனரல் ராஜாஜி, "சிதம்பரனார்" என்ற கப்பலை மிதக்க விட்டு, "சிதம்பரனார், அதோ என் கண் எதிரே நிற்கிறார் ?" என்று வ. உ. சி. யின் உருவத்தைக் கற்பனை செய்து கைகூப்பித் தொழுகிறார்.

பத்திரிகை உலகமும் இதற்கு விதி விலக்கல்ல. தூத்துக்குடியில் நடைபெற்ற "எஸ். எஸ். சிதம்பரம்" வெள்ளோட்ட விழாவை யொட்டி, 'இந்து' பத்திரிகை யுள்பட இந்தியா எங்கணுமுள்ள எல்லா ஆங்கிலப் பத்திரிகைகளிலும் வ. உ. சி. யின் வரலாற்றுச் சுருக்கம் வெளியாகியிருக்கிறது. ஆம் ; சிலை எடுப்பு விழாவுக்குப் பிறகு வளர்ந்து வந்த சிதம்பரனாரின் புகழ், இன்று 'எஸ். எஸ். சிதம்பரமா'கக் காட்சியளிக்கிறது.

சிதம்பரனார் கப்பல் விட்டது அடிமை இந்தியாவில். எனவே அடக்குமுறைக் கொடுமைக்கு ஆற்றாது மக்கள் விட்ட கண்ணீரிலே மிதந்தது 'காலியா' என்ற கப்பல்.

இன்று தூத்துக்குடி வணிகர்கள் கப்பல்விடத் துணிந்தது சுதந்தர இந்தியாவில். ஆகவே, 'எஸ். எஸ். சிதம்பரம்' அன்று தூத்துக்குடியில் கூடியிருந்த ஐம்பதினுயிரம் மக்கள் விடுத்த ஆனந்தக் கண்ணீரிலே மிதந்ததெனலாம்.

தென்பாண்டி வணிகர்கள் தாங்கள் வாங்கிய முதல் வர்த்தகக் கப்பலுக்கு தென்னிந்தியாவின் ஆதி தேசீய வீரரான சிதம்பரனாரின் பெயரை வைத்ததற்கு நன்றி கூறுகிறோம். ஆனால், கப்பல் வாங்கியோர் தமிழர்; அதை மிதக்க விட்டவர் தமிழர். இதில் தேசீயம் மணக்க வில்லை; தமிழர் என்ற இன உணர்ச்சிக் கடலில் தான் "சிதம்பரம்" என்ற கப்பல் மிதக்கிறது; இது போதாது.

தூத்துக்குடியில் கவர்னர் ஜெனரல் ராஜாஜி மிதக்க விட்ட கப்பல், தேசீயவாதிக்குக் களிப்பூட்டும் சின்னந் தான். என்றாலும் கடமை அதோடு தீர்ந்துவிடவில்லை. சிதம்பரனார் குமரி முதல் இமயம் வரை பரவிக் கிடக்கும் பரதகண்டம் முழுவதற்கும் விடுதலை தேடப் பாடுபட்டவர். வடநாட்டுத் திலகரே அவ்வீரர் வழிபடும் தலைவரா யிருந்தார். எனவே, 'தினமணி' சுட்டிக் காட்டியிருப்பது போல், இந்திய அரசாங்கத்திற்குச் சொந்தமான ஒரு கப்பலுக்குச் சிதம்பரனாரின் பெயரிட்டு, அக்கப்பல் உலகெங்கும் பவனிவரும் காலம்தான் சிதம்பரனார் ஆவி மகிழும் காலம்.

—'தமிழ் முரசு' மார்ச், 1949.

# சீர்திருத்தச் செம்மல் காந்தி

உலகில் தோன்றிய சீர்திருத்த வாதிகள் கணக்கிலர். ஐரோப்பாவின் நோயாளியெனப் பழிக்கப்பட்ட துருக்கிக்குப் புத்துயிர் அளித்தார் கமால் அத்தாதுர்க்.

அமெரிக்க நாட்டு அடிமை இனங்களுக்கு விடுதலை தந்தார் பிரசிடெண்ட் லிங்கன்.

இந்தியாவில் தோன்றிய சீர்திருத்த வாதிகளும் எண்ணிலர். பெண்ணினத்தைச் சீரழித்து வந்த உடன் கட்டை ஏறும் கொடுமையை ஒழித்தார் ராஜாராம் மோகனர்.

மதவெறி பிடித்தலையும் மூடர்களுக்கு எதிராக எம்மதமும் சம்மதமெனக் கொள்ளும் சன்மார்க்க மதத்தைத் தோற்றுவித்தார் ராமலிங்க வள்ளலார்.

இப்படி, வாழையடி வாழையாக, உலகம் சீர்திருத்த வாதிகள் பலரைப் பெற்று வந்திருக்கிறது. இந்தச் சீர்திருத்த வாதிகளின் வரிசையிலே மிகச் சிறப்புற்று விளங்கியவர் காந்தியடிகளேயாவார். அடிகளார்க்கு முன் தோன்றிய சீர்திருத்த வாதிகள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் தான் சிறப்புற்று விளங்

கினர். சமயத்துறையில் மட்டுமே சீர்திருத்தம் கண்டனர் சிலர். அரசியல் துறையிலேயே பணியாற்றினர் மற்றும் சிலர். சமூகத் துறையில் தொண்டு புரிந்தனர் பின்னும் சிலர். கல்வித் துறையில் மட்டுமே முனைந்திருந்தனர் வேறு சிலர். ஆனால் காந்தியடிகளோ, இந்தத் துறை, அந்தத்துறை என்றில்லாமல் அரசியல், சமயம், சமூகம், கல்வி, ஆகிய எல்லாத் துறைகளிலும் ஏக காலத்தில் ஈடுபட்டுப் பணியாற்றினர். வடக்கே மதவெறி பிடித்த மக்களின் மத்தியில் மகாத்மா தோன்றினர். ஆகவே, சமயத் துறையில் அடிகளாரின் தொண்டு, தென்னாட்டைவிட வடநாட்டுக்கே அதிகமாகத் தேவைப் பட்டது. இந்துக்களை ஏசிப் பேசுபவன்தான் இஸ்லாமிய ரட்சகன் என்று முஸ்லிம்கள் எண்ணுவதும், முஸ்லிம் களுக்கு எதிராக இந்துக்களுக்கு வெறியூட்டுபவன்தான் இந்துஸ்தானத்தின் தலைவன் என்று இந்துக்கள் எண்ணு வதும் வடக்கே வழக்கமாகிவிட்டது. இன்று, நேற்றல்ல ; எத்தனையோ நூற்றாண்டுகளாக இந்த வழக்கம் நிலைத்துவிட்டது. இந்த மூடநம்பிக்கைக்கு முடிவு கட்டும் பொறுப்பைக் காந்தியடிகள் தன்னந் தனியராக மேற் கொண்டார். இந்து—முஸ்லிம் ஏக் ஹோ' (இந்து—முஸ்லிம்களே ஒன்றுபடுங்கள்) என்று அடிகள் கோஷித்த மந்திரம், இந்து—முஸ்லிம் ஆகிய இருதரப்பினருக்கும் பகைமை என்னும் காட்டாற்றைக் கடக்கும் பாலமாக அமைந்தது. காந்தியடிகளின் கருத்துக்கு மாறாக இந்தியா இரு கூறுகளாகப் பிரிக்கப்பட்டது. ஏன்? அடிகளாரையும் கொலை புரிந்தனர் மதவெறியர்கள். ஆனால், 'இந்து—முஸ்லிம் ஏக்ஹோ' என்ற மந்திரத்தின் சக்தி அழிக்கப் படவில்லை. அடிகளின் ஆவி பிரிந்த மறுகணத்திலேயே இந்தியாவில் மதவேற்றுமை மறைந்தது. ஆம்; மரணத் திலும் வெற்றி கண்டார் மகாத்மா.

சமயச் சழக்கர்கள் திட்டமிட்டுச் செய்து வைத்த சதிதான் தீண்டாமை. மனிதனை மனிதன் பார்த்தாலும் பாவம், தொட்டாலும் தோஷம் என்னும் மடத்தனத்தின் உச்சியிலேறி விளையாடினர் மதப்பித்தர்கள். இந்தக் கொடுமையிலிருந்து ஆறுகோடி மக்களை விடுவிப்பதற்கு, 'எல்லோரும் ஓர் குலம்' எனக் குரல் கொடுத்தார், காந்தியடிகள். தீண்டாத மக்களைப் பாவப் பிறவிகள் என்றனர் பழிக்கஞ்சாப் பாதகர்கள். இதை மறுத்து, அவர்கள்தான் கடவுளின் புதல்வர்கள் (ஹரிஜனங்கள்) என வாதாடினர் காந்தியடிகள். காந்தியடிகளுக்கு முன்னேயும் தீண்டாமையைப் போக்கப் பலர் முயன்றதுண்டு. அவர்களில் சிறப்பு வாய்ந்தவர் ராமாநுஜர். ஆனால் ராமானுஜர் தமது காலத்திலேயே வெற்றியடையக் கொடுத்து வைக்கவில்லை. அவரது வாழ்வு கோர முடிவை எய்தியது. ஆனால், ராமாநுஜர் காண முடியாத வெற்றியைக் காந்தியடிகள் தமது காலத்திலேயே கண்டார்.

சமூகத்தின் எந்தத் துறையிலும் தீண்டாமைக்கு இடமில்லை என்று தீர்ப்பளித்துவிட்டனர், அரசியல் நிர்ணய மன்றத்தார். அமெரிக்கப் பிரசிடெண்ட் லிங்கன் கூட அரசாங்க பீடத்தில் ஏறிய பிறகுதான் அடிமை இனங்களுக்கு விடுதலை தந்தார். ஆனால், அதிகார வர்க்கத்துக்கு எதிராக இருந்த நிலையிலேயே தீண்டாத மக்களுக்கு உரிமை தேடித் தந்தார் காந்தியடிகள். தமது ஆசிரமத்தில் வளர்ந்த ஹரிஜனப் பெண்ணொருத்தியை அந்தணருக்கு மணம் செய்துவைத்தார், அடிகளார். நாலு வருணத்திற்கும் மேல் வருணத்தவரான அந்தணர் பஞ்சமப் பெண்ணை மணப்பதென்பது நெஞ்சாலும் நினைக்க முடியாத காரியம். இந்த அற்புதத்தைச் செய்யும் சக்தி

அடிகளார்க்கு இருந்தது. இத்தகைய கலப்புத் திரு மணங்கள் ஆசிரமத்தில் மட்டுமல்லாமல், அசிரமத்துக்கு வெளியேயும் நடந்தவை கணக்கிலடங்கா.

அடிகளார் மூடநம்பிக்கையை அங்கீகரிக்கவில்லே. வரதட்சிணே என்ற பெயரால் பணக்கொள்ளே யடிக்கும் செயலே, காந்தியடிகள் சமயம் வாய்த்த போதெல்லாம் கண்டித்திருக்கிருர். தேவதாசி முறையை எதிர்த்து அடிகளார் ஆற்றிய சொற்பொழிவுகள் அளவில. தமது பத்திரிகையில் எழுதிய கட்டுரைகளும் பலப்பல. சீர் திருத்த உபதேசங்கள் எல்லாம் ஊருக்கே ஒழிய, தனக் கல்ல என எண்ணும் சீர்திருத்தவாதிகள் எத்தனேயோ பேர் உண்டு. ஆனுல் காந்தியடிகளோ அந்தப் பொய்யர் களின் போக்குக்குப் புறம்பானவர். வடநாட்டு வைசிய குலத்தைச் சேர்ந்த தமது மகன், தென்னுட்டு அந்தணப் பெண்ணே மணப்பதற்கு ஆதரவு தந்தார் அடிகளார். தேவதாஸ்—லட்சுமியின் திருமணச் செய்தியை அறியா தார் யார்? இது கலப்புத் திருமணம். ஒரு வகையில் அல்ல; மாகாணக் கலப்பு, வருணக் கலப்பு, சாதிக் கலப்பு, மொழிக்கலப்பு ஆகிய பல்வேறு வகைகளில் கலப்புடையது.

காந்தியடிகள்—அல்லா, இயேசு, ராமன், சிவன், புத்தன், அருகன் எனப் பல்வேறு தெய்வங்களே வழிபடும் வெவ்வேறு மதத்தினரிடமும் அன்பு செலுத்துபவர். என்ருலும், ஆண்டவன் ஒருவரே என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை வாய்ந்தவர். நாமம் பலவாயினும், அங்கு இங்கு எனுதபடி எங்கும் நடமாடும் தெய்வம் ஒன்றுதான் என்ற உண்மை தெரிந்தவர். தமது பிரார்த்தனே மேடையில் பைபிளேப் படிக்கச் சொல்லிக் கேட்பார். ராம நாமத்தைப் பாராயணம் செய்வார்,

துராஃனை ஓதி அல்லாவைக் கும்பிடுவார். ஆம்; நம்பிக்கையில் மட்டும் ஏக தெய்வவாதியல்ல ; நடைமுறையிலும் அப்படித்தான்.

காந்தியடிகள், சின்னங்களை வெறுத்த சீர்திருத்த வாதியாவார். இளமை முதல் தாம் தரித்து வந்த பூணூலை இடைக் காலத்தில் அறுத்தெறிந்தார் அடிகளார். நெற்றியில் நாமம் போடும் வழக்கத்தையும் வெறுத்தொதுக்கினர். அர்ச்சகருக்குத் தட்சிணை கொடுக்கும் வழக்கத்தை காந்தியடிகள் அங்கீகரித்தாரில்லை. 'சத்திய சோதனை' என்ற அவரது வரலாற்றை ஆராய்ந்தால் இவற்றிற்கான சான்றுகள் நிறைய உண்டு.

தமிழகத்தில் சீர்திருத்தப் 'புரட்சி'யாளர்கள் புற்றீசல்கள் போலப் புறப்பட்டு வருகின்றனர். இவர்கள் சமூகத்தில் படிந்த சீர்கேடுகளைக் கூறுவதில் புரட்சிக்காரர்களே யொழிய, அவற்றைப் போக்குவதில் புரட்சிக்காரர்களல்லர். சீர்கேடுகளைச் சித்தரிப்பவன் சீர்திருத்த வாதியல்லன்; சீர்கேடுகளைப் போக்கி சமூகத்தைச் சீர்திருத்துபவனே சீர்திருத்தவாதி. காந்தியடிகள் ஒவ்வொன்றிலும் தம்மைச் சீர்திருத்திக் கொண்ட பிறகே, பிறரைச் சீர்திருத்த முயன்றார். தாம் நம்புகின்ற ஒன்றைத் தான் பிறரையும் நம்பும்படி தூண்டினர். உடை, உணவு, உள்ளம் ஆகிய எல்லாவற்றிலும் தம்மைத் திருத்திக் கொண்ட பிறகே உலகத்தைத் திருத்தும் பணியிலீடு பட்டார். சீர்திருத்த மென்பது சொல்லிக் காட்டுவது மட்டுமன்று. சொல்லியபடி செய்து காட்டுவதுமாகும். இதற்கு அடிகளாரின் வரலாறே எடுத்துக் காட்டாகும்.

காந்தியடிகள், அரசியல் துறையில் செய்த சீர்திருத்தங்கள் அளவில. வீரம் என்பதன் பொருள் 'கொலை' என்று முடிந்துவிட்ட நிலையிலே—மனித வர்க்கத்தைக்

கொன்று குவிப்பதுதான் மண்ணுள்வோரின் நெறி என்று நிச்சயிக்கப்பட்டு விட்ட காலத்திலே — காந்தியடிகள் தோன்றினர். அரசியல் எந்தக் காலத்தில் தோன்றியதோ, அப்போது முதலே அது பலாத்காரத்தோடு பிரிக்க முடியாதபடி பின்னிக் கிடக்கிறது. நமது இலக்கியங்கள், இதிகாசங்கள் எதிலும் ஆயுதமற்ற ஓர் அரசியல் போராட்டத்தை நாம் காண முடியவில்லை. போராட்டமின்றி மனித சமுதாயம் வாழ முடியும் என்ற செய்தியைக்கூட இலக்கியங்களும், இதிகாசங்களும் நமது சிந்தனைக்குக் கொண்டு வரவில்லை. கவிதைகளிலாகட்டும் கதைகளிலாகட்டும், நெஞ்சையள்ளும் காவியங்களிலாகட்டும், நாம் காண்பதென்ன? போராட்டம், போராட்டம், போராட்டம் !

அண்ணன் தம்பிகளுக்கு ஐந்தடி நிலங்கூடக் கொடுக்க மறுத்ததின் விளைவுதான் பாரதப் போர்!

'தங்க மதில் சூழ்ந்த இலங்கையை இழந்தாலும் இழப்பேனேயன்றி, என் கைவசப்பட்ட மங்கையை விடுவிக்க மாட்டேன்' என்ற பிடிவாதத்தின் விளைவுதான் ராம—ராவண யுத்தம்!

கடவுளர்களே மண்ணுலகில் மனிதர்களாக அவதரித்து மக்களைக் கொன்று குவிக்கும் போர்களுக்குத் தலைமை தாங்கியதாக இலக்கியங்கள் கூறுகின்றன.

ஆம்; அறத்திற்கு மாறுபட்ட மறம்தான் அரசியலின் அச்சாணி என்றாகிவிட்ட நிலையில் காந்தியடிகள் தோன்றினர். மனித வர்க்கம் போரின்றி வாழமுடியும் என்ற புதுமையான செய்தியை அவர் மூலம்தான் உலகம் முதன் முதலாக அறிந்தது. அநீதியை எதிர்க்கப் போர் அவசியமானாலும்கூட அதற்கு ஆயுதம் அவசியமில்லை; அன்புவழி ஒன்றே போதும் என்பதைச் சொல்லாலும்

செயலாலும் உணர்த்தினர் காந்தியடிகள். ஆயுதப் போரைவிட அறப்போரின் வலிமையே அதிகமென்பதை பிரிட்டிஷ் பேரரசுக்கு எதிராகத் தாம் நடத்திய பெரும் போரில் உணர்த்திவிட்டார். காந்தியடிகள் போரை விரும்பாதவர். என்றாலும், போர் நேர்ந்துவிட்டால் புறமுதுகிடாமல் முன்னேறும் மாவீரராவார்.

அண்ணல் காந்தி லட்சியத்தில் வளைந்து கொடுக்காத போராட்டவாதி. ஆனால், அவசியமேற்பட்டபோது நடைமுறையில் வளைந்து கொடுத்து லட்சியத்தில் வெற்றி காணும் ராஜதந்திரி. காந்தியடிகள் காலம் வரை மேல்நாட்டு அரசியல் முறைதான் கீழ்நாட்டு அரசியலுக்கு வழிகாட்டியாக இருந்தது. ஆனால், அடிகளார் நடத்திய அறப்போரின் முடிவால் மேல்நாட்டுக்கு வழிகாட்டும் பெருமையை கீழ்நாடு அடைந்துவிட்டது. மேல்நாட்டு அரசியல் முறைகளுக்கு முற்றிலும் மாறுபட்ட முறையை காந்தியடிகள் கடைப்பிடித்தார்.

பகைவன் புறமுதுகிட்டபோது அவனையும் அவனுக்குத் துணையிருந்த சக்திகளையும் பூண்டோடு அழிப்பது மேநாட்டவரின் முறை. ஆனால், காந்தியடிகளின் போர் முறை இதிலிருந்து மாறுபட்டது. பகைமையை அழித்து, பகைவனை நட்புக் கொள்வதுதான் காந்தியடிகளின் போர் முறை.

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடையாளன்
தகைமைக்கண் தங்கிற் றுலகு

என்ற வள்ளுவர் குறளும் இதையே வலியுறுத்துகின்றது. பகைவனின் சங்கடத்தைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு வெற்றி காண்பது மேல்நாட்டார் யுத்த தந்திரம். பகைவன் சங்கடத்தில் சிக்கியபோது விட்டுக்

கொடுத்தும் உதவி புரிந்தும் அவன் மனமாற்றம் அடைவதற்குச் சந்தர்ப்பம் தருவது காந்தீய நெறி.

இன்றைய உலகம் எல்லாத் துறைகளிலும் சீர் திருத்தம் வேண்டுகிறது. இந்தியாவும் அப்படித்தான். ஆனால், வெண்ணெ திரண்டு வரும் நேரத்தில் தாழி உடைந்ததுபோல், விடுதலை பெற்ற இந்தியா சமூக சீர் திருத்தத்தில் வேகமாக முன்னேற வேண்டிய தருணத் தில் அடிகளாரை இழந்துவிட்டோம். ஆயினும், சீர் திருத்தம் வேண்டும் செம்மல்களுக்கு அடிகளாரின் வரலாறு நல்ல வழிகாட்டியாகும். காந்தியடிகளுக்கு முன்தோன்றிய சீர்திருத்தவாதிகள் நல்லதைச் செய்ய முனைந்த வேகத்திலே சிற்சில கெடுதல்களையும் செய்து விட்டனர். ஒரு மதத்தைச் சீர்திருத்த விரும்பி மற்றொரு புதுமதத்தைத் தோற்றுவித்த பெரியார்கள் பலர். ஆனால் காந்தியடிகளோ இந்து மதத்தை சீர்திருத்த விரும்பினரே யொழிய மற்றொரு புதுமதத்தைத் தோற்றுவித்தாரில்லை. புதியதொரு வேத நூலை வெளியிட்டாரில்லை. ஆகவே, உலகச் சீர்திருத்தவாதிகளின் வரிசையிலே, காந்தியடிகள் ஒப்பற்ற ஒருவராய் விளங்குகின்றார்.

வாழ்க, காந்தியடிகள் திருநாமம்!

## காந்தீயம் வாழ்க!

அக்டோபர் இரண்டாம் தேதி காந்தியடிகளின் பிறந்த நாள். இந்த நாளை நன்றிக்கு அறிகுறியாகக் கொண்டாடுகின்றனர் மக்கள். 'அடிகள் மறைந்த பின்னரும் பிறந்த நாள் விழாவா?' என்று கேட்கலாம். இந்தக் கேள்வி அறிவின்பாற் பட்டதே. ஆனால், காந்தியடிகள் பிறந்தநாள், புதிய இந்தியா பிறந்த நாளாகும். எனவே, அவர் மறைந்த பின்னரும் பிறந்த நாள் கொண்டாடுவதில் பிழையொன்றுமில்லை.

காந்தியடிகள் மறைந்துவிட்டார். ஆனால், 'காந்தீயம்' மாய்ந்து விடவில்லை. எந்த அற வழியால் அரசியல் உரிமை பெற்றோமோ, அதே அறவழியால்—அன்பு நெறியால் சுதந்தர இந்தியாவை ஆளுவோமாயின், அதுவே காந்தி பிறந்த இந்தியாவுக்குப் பெருமையளிப்பதாகும்.

'காந்தீயம்' நல்லதை வளர்த்து, அல்லதை அழிக்கும் அறநெறியாகும். காந்தியடிகள் காங்கிரசில் தலைமை ஏற்றதும் புதிய திட்டங்களை வகுத்தார். திலகரின் தலைமையின்கீழ் காங்கிரஸ் போராட்ட முனையில் புகுந்த

தென்றலும், அவரிடம் மக்களைக் கவரக்கூடிய திட்டமில்லை.

காந்தியடிகள் பலாத்காரத்தை வெறுத்தார்; அதற்குப் பதிலாக அரசியலிலே அஹிம்சையைப் புகுத்தினர். இதன் விளைவாக, இந்திய சுதந்தரப் போரில் ஆண், பெண்; இளையோர்—முதியோர்; ஏழை—பணக்காரர்; பாமரர்—பண்டிதர் ஆகிய எல்லோரையும் ஈடுபடச் செய்தார்.

காந்தியடிகள் அந்நியக் கல்வியை வெறுத்தார். அதற்குப் பதிலாக தேசீயக் கல்வித் திட்டத்தை நாடெங்கும் பரப்பினர்.

அரசாங்கக் கல்லூரிகளைப் பகிஷ்கரித்தார். அதனல், இளைஞர்களின் கல்வி கெடாமலிருக்க, இந்தியா எங்கும் தேசீயக் கல்லூரிகளைப் பெருக்கத் திட்டமிட்டார்.

அந்நிய ஆடையைத் தீக்கிரையாக்கினர். அதற்குப் பதிலாக, கதராடையைப் பெருக்க, நூல் நூற்போர் சங்கத்தை நிறுவினர்.

ஏகாதிபத்தியத்திற்கு எதிராக இந்திய மக்களை ஒன்று திரட்டத் தீண்டாமை விலக்கு, இந்து—முஸ்லிம் ஒற்றுமை போன்ற நல்ல திட்டங்களை நாடெங்கும் பரப்பி மக்களிடையே ஒற்றுமையை வளர்த்தார்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், நெப்போலியனை வெற்றி கண்டது; ஹிட்லரை வீழ்த்தியது; முசோலினியை முறியடித்தது; ஆனல், காந்தியடிகளை வெற்றி காண முடியாமல், அவரது அறப்போரின் வலிமையால் வீழ்ச்சியுற்றது!

இனியும் சுதந்தர இந்தியா சுகம் பெற வேண்டுமானல் இந்திய மக்கள் காந்திய நெறியைக் கைவிடக்

கூடாது. ஆனல், நாம் காண்பதென்ன ? காந்தியடிகள் மறைந்த ஓராண்டுக்குள்ளேயே, காந்தீயக் கோட்டை சரிந்து வீழ்ந்து கொண்டிருக்கும் காட்சியல்லவா ?

அடிகள் தமது வாழ்நாள் முழுவதும் ஆக்கவழித் திட்டத்தில் பாடுபடும் தொண்டர்கள் பதவி வேட்டையில் ஈடுபடக்கூடாது என்று எச்சரித்த வண்ணமிருந்தார். அவர் தமது இறுதிக் காலத்தில், காங்கிரஸை பார்லிமெண்டரி முனையில் பதவி வேட்டையாடும் ஸ்தாபனமாக இல்லாமல், உலக மக்களுக்கு சேவை செய்யும் ஒரு ஒப்பற்ற ஸ்தாபனமாக மாற்றப் பின்வரும் அடிப்படையில் திட்டம் வகுத்தார்.

'காங்கிரஸ்' என்ற பெயரை மாற்றி, 'லோக் சேவக் சங்கம்' என்ற புதுப் பெயர் தரவேண்டும்.

லோக் சேவக் சங்கத்தினர் வேறு எந்த அரசியல் கட்சிகளிலும் அங்கம் வகிக்கக் கூடாது.

சுயநலச் சிந்தையை வளர்க்கும் பட்டம் பதவிகளை நாடாமல், பொதுநலப்பணி புரிய வேண்டும்.

அடிகளின் எண்ணப்படி காங்கிரஸைத் திருத்தி அமைத்திருப்பின், சுதந்தர இந்தியாவில் ஒவ்வொரு இந்தியரின் இதயத்திலும் வீற்றிருக்கும் பெருமை மிக்க ஸ்தாபனமாக காங்கிரஸ் மாறி இருக்கும். ஆனல், அவர் எழுதி வைத்துப்போன திட்டத்தை அவரது கருத்து வழி அமுல் நடத்தத் தவறி விட்டனர் மேலிடத்துத் தலைவர்கள்.

ஆக்க வழியில் அடக்கமாகப் பணி புரிந்து வந்த தொண்டர்கள்கூட, அடிகளின் மறைவுக்குப் பிறகு அரசியலில் புகுந்து பதவி வேட்டையாட முனைந்து விட்டனர்.

காந்தியடிகள் மொழிவாரி மாகாணப் பிரிவினையைத் துரிதப்படுத்த வேண்டுமென்று, இறப்பதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னர்கூடப் பிரார்த்தனை மேடையில் பேசினர். மொழிவழி கலைகள் வளர, மக்கள் மனமொத்து வாழ அது ஒன்றே தக்கவழி என்பதையும் வற்புறுத்திக் கூறினர். ஆனல் அடிகளாரைப் போற்றும் மேலிடத்துத் தலைவர்கள், மொழிவழி மாகாணப் பிரிவினை வேண்டுவது, 'முதல் நம்பர் தேசத்துரோகம்' என வசைபாடுகின்றனர். இவ்வாறு காந்தீய நெறிகளைப் புறக்கணித்து, அவரது பிறந்த நாளைக் கொண்டாடுவதில் பயனில்லை.

காந்தியடிகள், தமது பிறந்த நாளை 'சர்க்கா' தினமாகக் கொண்டாட வேண்டுமென்று தாம் வாழ்ந்த நாட்களில் கூறியிருந்தார். 'சுதந்தரம் பெற்ற பின்னும் சர்க்காவைச் சுற்றுவதா?' என்பது சிலரது வாதம். "ஆலைத் தொழில்களை அடியோடு அழித்து, சர்க்காவையே நம்பி வாழவேண்டும்" என்பர் தீவிர தேசிய வாதிகள். இந்த இருதரப்பினர் கூற்றும் உண்மைக்குப் புறம்பானது. முன்னது நையாண்டி; பின்னது நாசவேலை.

இயந்திரத்தையே நம்பி வாழவேண்டுமென்பது எப்படி நல்லதல்லவோ அதுபோலத்தான் சர்க்காவையே நம்பி வாழ்வதென்பதும் நடக்காத காரியம். காந்தியடிகளும் அப்படிக் கூறியதில்லை. அவரது கருத்து, இயந்திரத்துக்கு அளவுக்கு மீறி அடிமைப் பட்டுவிடக்கூடாது என்பதேயாகும். யுத்தகாலத்தில் பஞ்சாலைகளை பகைவர்கள் அரை நொடியில் அழித்துவிட முடியும். அந்தச் சமயத்தில் நமக்குக் கைராட்டைதான் கைகொடுக்கும். ராட்டை சுற்றுவதால் கிடைக்கும் வருமானம் ஆடம்பர வாழ்க்கைக்குப் போதுமானதாய் இல்லாமலிருக்கலாம். ஆடம்பர வாழ்க்கையை விரும்புவோர் வேறு தொழிலில்

ஈடுபடுவதைத் தடுப்பாரில்லை. வேறு தொழில்களில் ஈடுபடச் சக்தியற்ற மக்கள், இருந்த இடத்திலிருந்தே கைராட்டை சுற்றிக் கஞ்சி உணவுக்கேனும் காசு தேட முடியும்.

காங்கிரஸ்காரர்கள் காந்தீய நெறிப்படி செய்ய வேண்டிய தொண்டுகள் எவ்வளவோ உண்டு.

சாதி வேற்றுமைகளை ஒழிக்கச் சட்டம் செய்யும்படி அமைச்சர்களை வற்புறுத்தலாம்.

சமூகத்தில் நிலைத்துவிட்ட அர்த்தமற்ற சடங்குகளை, அறிவுக்குப் புறம்பான பழக்க வழக்கங்களை ஒழிக்கப் பாடு படலாம்.

அதிகாரத்திலிருப்பவர்களால்தான், ஆக்க வழியில் பணிபுரிய முடியுமென்று எண்ணுவது தவறு. அமைச்சர் பதவியில் இருப்பவரைவிட, ஒரு சாதாரண அரசியல் வாதிக்கு உள்ள சக்தி அதிகமானது. ஒவ்வொரு தொண்டரும் ஒரு ஸ்தாபனத்துக்குரிய சக்தியைப் பெற்று விளங்கவேண்டு மென்பதே காந்தீயத்தின் குறிக்கோள்.

*'முரசு' 3—10—'48.*

## காந்தீயமும் காங்கிரசும்

### 1

'**கா**ந்தீயம்' என்ற சொல், அரசியல் உலகில், குறிப்பாக காங்கிரஸ் மேடைகளில் அடிக்கடி முழங்கக் கேட்கிறோம். ஆனால், 'காந்தீயம் என்றால் என்ன?' இந்தக் கேள்விக்குத் தெளிவாக விடை கிடைப்பதில்லை. பெரும்பாலும் சமூக நலத்துக்காக அன்றி, கட்சி நலத்திற்காகவே காந்தீயம்என்ற சொல் பயன்படுத்தப்படுகின்றது. இது, காந்தியடிகளின் கருத்துக்கே முற்றிலும் முரண்பட்டதாகும்.

'காந்தீயம்' என்பது, தெளிவாக, திட்டவட்டமாக எழுதப்படாத ஒரு தத்துவமாகத்தான் இன்னமும் இருந்துவருகின்றது. 'மார்க்ஸிஸம்' என்ற தத்துவத்தைப் பற்றி கார்ல் மார்க்ஸ் அவர்கள் எழுதிய 'மூலதனம்' என்னும் நூல் நம்மிடையே நடமாடுகின்றது.

அதுபோலவே, 'வள்ளுவரிஸம்' என்ற ஒரு தத்துவத்தைச் சொன்னால், அதைப்பற்றியும் விளக்கமாக வள்ளுவரே எழுதிய 'திருக்குறள்' நம்மிடையே உலவி வருகின்றது.

அதுபோல, காந்தீயத்தைப் பற்றி, தெளிவாக விளக்கும் ஒரு நூல் காந்தியடிகளாலேயே எழுதப்படவில்லை. அதனாற்றான், காந்தீயம் என்பது 'எழுதப்படாத தத்துவம்' என்று சொல்லவேண்டியிருக்கிறது. இதன் விளைவாக, 'காந்தீயம்' என்பது குருடர்கள் கண்ட யானைபோல் ஆகிவிட்டது.

காந்தீயத்தைப்பற்றி, காந்தியடிகளோடு பழகிய பல அறிஞர்கள் தனித்தனியே நூல்கள் எழுதி வெளியிட்டிருக்கின்றனர். ஆனால், காந்தீயத்தை விளக்குவதில், ஒரு நூலுக்கு இன்னொரு நூல் வேறுபடுவதைப் பார்க்கிறோம். ஆகவே, "இதுதான் காந்தீயம்!" என்று திட்டவட்டமாக தெளிவுபடுத்தக்கூடிய நூல் ஒன்று இதுவரை எழுதப்படாதது பெருங் குறையாகும். காந்தியடிகள் வாழ்ந்த காலத்திலேயே,

> "தங்கள் சமயத்துறையில் கொள்கைகளைத் தெளிவாக விளக்கும் நூல் ஒன்றைத் தாங்களே எழுதி வெளியிடலாமே"

என்று ஒரு நண்பர் அடிகளாரைக் கேட்டதற்கு,

> "அப்படி ஒரு நூலை நான் வெளியிட்டால், அதை வைத்துக்கொண்டு என் பெயரால் ஒரு மதம் ஏற்பட்டுவிடும். அதை நான் விரும்பவில்லை"

என்று பதிலளித்தார். இதிலிருந்து 'காந்தீயம்' என்ற பெயரில் தமது காலத்துக்குப் பின்னால், தமது கருத்தை அப்படியே எதிரொலி செய்யும் ஒரு சமய இயக்கம் நடைபெறுவது சாத்தியமில்லையென்று காந்தியடிகள் கருதியதாக நாம் நம்புவதற்கு இடமிருக்கிறது. ஆம்; மருந்து சிறந்ததாக இருந்தால் மட்டும் போதாது. அம்மருந்தை

நோயாளி மீது உபயோகிக்கும் மருத்துவனும் திறமை சாலியாக இருக்க வேண்டும். அதுபோல, காந்தீய நெறி சிறந்ததாக இருப்பினும், அந்த நெறியைப் பரப்ப நடக்கும் இயக்கத்துக்கு தலைமை தாங்கத் தகுதியான ஒரு தலைவனும் கிடைக்கவேண்டும். இல்லையேல், காந்தீய நெறியால் நாட்டிற்கு நன்மை விளைவதற்குப் பதிலாக தீமையே விளையும.

காந்தியடிகளுக்கு முன் தோன்றிய சங்கரர், ராமானுஜர், மாத்வர், தயானந்தர் போன்ருரெல்லாம் இந்து சமயத்தைச் சீர்திருத்தி, அதைப் பலப்படுத்துவதற்காகவே பாடுபட்டனர். ஆனுல், அவர்கள் எழுதிவைத்த நூல்களும், அமைத்துவைத்த ஸ்தாபனங்களும் அவர்கள் காலத்துக்குப் பிறகு, அவர்களில் ஒவ்வொருவருடைய பெயராலும் கிளைமதத்தைத் தோற்றுவித்துவிட்டன. அதன் விளைவாக, மேற்சொன்ன சமயாச்சாரியர்கள் நினைத்தவழி இந்து மதம் பலப்படுவதற்கு பதிலாக பலவீனப்பட்டதைப் பார்த்துவிட்டோம். ஆகவே, தமது பெயராலும் ஒரு கிளை மதமோ, மத சித்தாந்தமோ தோன்றுவதைக் காந்தியடிகள் விரும்பாததில் வியப்பில்லை.

அரசியலைப் பொருத்த வரையில், 'காந்தீய அரசியல்' என்ற தலைப்பில், திரு. எஸ். என். அகர்வால், ஒரு நூல் எழுதி காந்தியடிகளின் முன்னுரையுடன் அதைப் பிரசுரித்திருக்கிருர். அந்த முன்னுரையில், "இதில் விளக்கப்படும் விஷயங்கள் அனைத்தையும் நான் அப்படியே ஒப்புக்கொண்டு முன்னுரை கொடுத்ததாக வாசகர்கள் நம்பிவிடக்கூடாது" என்று காந்தியடிகள் நமக்கு எச்சரிக்கை தந்திருக்கிருர். ஆகவே, அரசியலைப் பொருத்தவரையில் கூட, காந்தியடிகள் கருத்துவழி காந்தீயத்தைப் பற்றி

இதுவரை யாரும் நூல் எழுதவில்லை யென்பது தெளிவா கின்றது.

மற்ற 'இஸங்களை' ஒட்டிய இயக்கங்களுக்கெல்லாம் அறிவும் ஆற்றலும் மட்டுமே படைத்தவர்கள் தலைவர் களாக வந்துவிடலாம். ஆனால், 'காந்தீய' இயக்கத்திற்குத் தலைமை தாங்க அறிவும் ஆற்றலும் மட்டும் போதா ; ஆன்ம பலமும் வேண்டும்.

ஆச்சார்யா விநோபாபாவேயைப் போன்ற ஒன்றிரு பெரியார்கள் காந்தீய நெறிவழி நாட்டிற்குப் பணி புரிந்து வருவதை நாம் மறப்பதற்கில்லை. என்றாலும், அவராலும் காந்தியடிகளின் இடத்தை முற்றிலும் பூர்த்தி செய்ய முடியவில்லை என்பதையும் நாம் மறைப்பதற்கில்லை. ஆம் ; காந்தியடிகளைப் போன்று ஆன்ம பலமும், செயற் கரிய செய்யவல்ல ஆற்றலும் படைத்த பெரியார்கள் பல நூற்றாண்டுகளுக்கு ஒரு முறைதான் பிறக்கிறார்கள். இது சமய வழிப்பட்ட நம்பிக்கை மட்டுமன்று ; சரித்திரம் காட்டும் உண்மையுமாகும்.

தமக்குப் பிறகு பண்டித ஜவஹர்லால் நேருவே தம்முடைய வாரிசு என்று காந்தியடிகள் கூறிப்போனார். தலைவர் நேருவும் காந்தியடிகளின் அரசியல் கொள்கை களுக்கு வாரீசாக இருக்கமுடிகிறதே யன்றி, அவருடைய ஆன்ம பலத்திற்குப் பிரதிநிதியாக இருக்க முடியவில்லை.

காந்தியடிகள் முப்பது ஆண்டுகள் வரை இந்தி யாவின் இணையற்ற தலைவராக விளங்கினார். ஆரம்ப காலத்தில் அவருடைய தலைமையை விரும்பாதவர்கள் அவருக்கு விரோதமாக வேலை செய்தார்கள். ஆனால் தலைமையை மாற்றுவதில் அவர்கள் வெற்றி பெற முடிய வில்லை. காரணம், காந்தியடிகளைப்போன்று ஆன்ம

பலம் படைத்த இன்னொருவரை அவருக்கு எதிராக நிறுத்த முடியாமற்போனதாகும். ஆம்; காந்தியடிகள் காலம் கொடுத்த பரிசு!

காந்தியடிகள் காலத்தில், காந்தீய தத்துவத்தின் வழி நாட்டுக்குச் சேவை செய்யப் பலர் அவரால் பயிற்றுவிக்கப்பட்டனர். ஒரு தலைமுறைக்கு மேலாகவே காந்தியடிகளோடு ஒன்றியிருந்து உழைத்து அவரது உள்ளத்தை அறிய அவர்கள் சந்தர்ப்பம் பெற்றனர். 'காந்தீயம்' எழுதப்படாத தத்துவமாயினும், அதன் எல்லா அம்சங்களையும் பிறர்க்கு உணர்த்தி வைக்கும் பேராசிரியர்களாக அவர்கள் தேர்ச்சி பெற்றனர். ஆகவே, காந்தியடிகள் மறைவுக்குப் பிறகு அந்தப் 'பேராசிரியர்'களேனும் காந்தீய நெறியைப் பிரச்சாரம் செய்வார்களென்று நாடு நம்பியது. ஆனால், நம்பியது நடக்கவில்லை. அவர்களில் சிலர், தாங்கள் பாடுபட்டுப் பெற்ற சுதந்திரத்தின் பலனை அனுபவிக்க ஆசைகொண்டு, அதிகாரப் பதவிகளில் அமர்ந்துவிட்டனர். இன்னும் சிலர், காந்தீயப் பணிக்குத் தலைமுழுக்குப்போட்டு, சட்டசபை, பார்லிமெண்டு நாற்காலிகளில் அமர்ந்துவிட்டனர். பின்னும் சிலர், அதிகாரப் பதவிகளோ, அமருவதற்கு நாற்காலிகளோ கிடைக்காத காரணத்தால் 'அதிருப்தி'யாளர்களாக மாறிவிட்டனர். இவர்கள் அதிகாரப் பதவிகளில் இருப்பவர்களைக் குறை கூறிக்கொண்டிருப்பதைத் தவிர, காந்தியடிகளிடம் பெற்ற பயிற்சியைக்கொண்டு ஆக்கவழிகளில் பாடுபட நினைக்கிறார்களில்லை. இப்படிப்பட்டவர்களுடைய பெயர்களைச் சொல்லி, அவர்கள் அடைந்துள்ள பிற்போக்கான மாறுதல்களையும் விளக்கினால், மிகவும் சுவையாக இருக்கும். ஆனால், காந்தீய நெறிபற்றி விளங்கப் புகுந்த இக்கட்டுரையில் தனிப் பட்டவர்களின் பெயர்களைச்

சொல்லிக் குறைகூறுவது நல்லதல்ல என்பதற்காகவே குறைகளைப் பொதுப்படக் கூறினேன்.

. சுருங்கச் சொன்னால், காந்தியடிகள் காலத்தில் காந்தீயப் பணிக்கென்றே திரட்டப்பட்டுப் பயிற்சியளிக்கப் பட்ட 'காந்தீய சேனை' காந்தியடிகள் மறைந்த மறு கணத்திலேயே, அணிவகுப்புக் கலைந்து, ஆக்க வழிப் பாதையை விட்டு விலகி, சீர்குலைந்து சிதறி விட்டது. இது நாட்டின் துரதிர்ஷ்டமாகும்.

கடந்த காலத்தில் காந்தீய நெறியைப் பரப்புவதற்குப் பயன்பட்ட சாதனங்கள் யாவை?

1. காந்தியடிகள், 2. அவரால் பயிற்றுவிக்கப்பட்ட நிர்மாண சேனை, 3. காங்கிரஸ் மகாசபை.

இந்த மூன்று சாதனங்களில், காந்தியடிகள் மறைந்து விட்டார். அவரிடம் பயிற்சி பெற்ற சேனையும் சிதறி விட்டது. எஞ்சியிருக்கும் சாதனம், காங்கிரஸ் ஒன்று தான். அதுவும், காந்தீயப் பாதையை விட்டு விலகி நெடுந்தூரம் சென்றுவிட்டது. இப்படிச் சொல்வதற்காக காங்கிரஸ்காரர்களில் சிலர் என்மீது கோபப்படலாம். ஆனால், "தன் நெஞ்சறிவது பொய்யற்க" என்ற குறள் வரியை அவர்களுக்கு நினைப்பூட்டுவதைத் தவிர நான் வேறு என்ன செய்ய முடியும்!

விடுதலைப் போராட்டத்தை நடத்திக்கொண்டிருந்த வரை காங்கிரஸ் மகாசபை பெரும்பாலும் காந்தீய நெறியையே பின்பற்றி சமுதாயத்தின் அடித் தளத்தில் சிக்கி அல்லல்படும் மக்களுக்காகப் பாடுபட்டு வந்தது.

> " சதா பசிப்பிணியால் பீடிக்கப்பட்டு கால் நடைகளைப் போலத் தங்கள் துயரை வாய் விட்டுக் கூறாமல் அனுபவித்துவரும் ஏழ

லட்சம் இந்திய கிராமங்களில் வசிக்கும் கோடிக் கணக்கான கிராமவாசிகளின் கட்சியை எடுத்து வாதிப்பதையே தொழிலாகக் கொண்டது காங்கிரஸ் மகாசபை."

இது, லண்டனில் நடைபெற்ற இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டில் காந்தியடிகள் பேசியபோது குறிப்பிட்டதாகும். டாக்டர் பட்டாபி சீத்தாராமய்யா எழுதிய 'காங்கிரஸ் சரித்திர'த் தமிழ்ப் பதிப்பில் 18-ம் பக்கத்தில் இதைக் காணலாம். ஆம்; விடுதலைப் போராட்ட காலத்தில் காங்கிரஸ் காந்தீய நெறிவழி ஏழைகள் ஸ்தாபனமாக விளங்கியது.

விடுதலைப் போராட்டம் முடிந்து, காங்கிரஸ் ஆளும் கட்சியாக மாறிய பிறகு அதனுடைய பாதையும் மாறி விட்டது. அதிலுள்ள பெரும்பாலோரின் பண்புகளும் மாறிவிட்டன. இதை காந்தியடிகளே கூறக் கேட்போம்:

> "காங்கிரஸ் ஸ்தாபனம் கடந்த 60 ஆண்டுகள் —அதாவது, 1885 முதல் இன்றுவரை மிகுந்த தொல்லை, தொந்தரவுகளுக்கிடையே சம்பாதித்த தூய்மை, தியாகம், பொதுநலத் தொண்டு உணர்ச்சிகள், காங்கிரஸார் பதவியேற்ற நாள் முதற்கொண்டு கைவிடப்பட்டு வருகின்றன. பல வட்டாரங்களிலிருந்து எனக்குச் செய்தி கிடைத்திருக்கிறது. தன்னலமிக்க அதிகார ஆசை வெறியுடையோரும் பதவி வேட்கைக் காரரும் நிறைந்த ஸ்தாபனமாக காங்கிரஸ் மாறி வருவதாகத் தோன்றுகிறது"

என்று, 1947—மே மாதம் 21-ந் தேதி பீகார் மாகாணத்தைச் சேர்ந்த 'பிக்ராம்' என்ற கிராமத்தில்

நடைபெற்ற பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்தியடிகள் பேசினர். அதே பேச்சில் அவர் மேலும் கூறியதாவது :

" காங்கிரஸார் மக்களின் ஊழியர்களாக இருப்பதற்குப் பதிலாக அவர்களின் தலைவர்களாக, எசமானர்களாக ஆகிவிட்டனர். மேலும், சில்லரைச் சூழ்ச்சிகளாலும் குரோத மனப் பான்மை, கோஷ்டிப் பிரிவுகளாலும் காங்கிரஸ் சின்னபின்ன மாகிவிட்டது.

" நான் கூறுவது எல்லா மாகாணங்களுக்குமே பொருந்தும். இது தொடர்ந்து நிலைபெற்று வருமேயாகில், நம்மை நோக்கி வந்துகொண்டிருக்கும் கிடைத்தற்கரிய சுதந்திரத்தை இந்தியா பாதுகாத்து வைத்துக் கொள்ள முடியாது. இதற்குத் தேவையானது அறிவு, நல்லெண்ணம், தூய உள்ளம் ஆகியவையே."

காந்தியடிகள் இப்படிக் கதறியது சுதந்திரப் பிரகடனம் செய்யப்படுவதற்கு மூன்று மாதங்களுக்கு முன்பாகும். அதற்கு ஏழாண்டுகளுக்குப் பிறகு இன்று காங்கிரஸ் அடைந்துள்ள வருந்தத்தக்க மாறுதலைக் காந்தியடிகள் கண்டிருந்தால் அவர் உள்ளம் என்ன பாடுபட்டிருக்குமோ !

மேலே எடுத்துக் காட்டிய, காந்தியடிகளின் சொற்பொழிவுகளிலிருந்தே இன்றைய காங்கிரஸ் காந்தீயப் பாதையிலிருந்து விலகி நெடுந்தூரம் சென்று விட்டது என்பது தெளிவாகும். சுதந்திரம் கிடைத்த பிறகு காங்கிரஸ் ஆளும் கட்சியாக மாறினுல், அது காந்தீய நெறிவழி பாடுபடத் தகுதியற்ற தாகிவிடுமென்று காந்தியடிகள் அப்போதே தெரிந்துகொண்டிருந்தார். அதனுல்தான் காங்கிரஸைக் கலைத்துவிட்டு, 'லோக் சேவக் சங்கம்' என்ற ஒன்றைப் புதிதாகத் துவக்க விரும்பினுர். சட்டசபைக்குள் புகுந்தும் அதிகாரப்

பதவிகள் பெற்றும் வாழ விரும்பும் காங்கிரஸ்காரர்கள் தனிவழி செல்லலாமென்றும், பொதுஜன சேவை ஒன்று மட்டுமே வாழ்க்கை லட்சியமாகக் கொண்டவர்கள் 'லோக் சேவக் சங்க'த்தில் சேர்ந்து தம்மைப் பின்பற்றலாமென்றும் காந்தியடிகள் அறிக்கை விடுத்தார். ஆனால், அந்த அறிக்கையை எழுதிய மை உலருவதற்கு முன்பே அண்ணல் காந்தி அமரராகி விட்டார்!

## 2

"காந்தீயம் என்பது எழுதப்படாத தத்துவம் என்றால் காந்தியடிகளால் எழுதப்பட்ட 'சத்திய சோதனை' போன்ற நூல்களில், காந்தீயக் கொள்கை விளக்கப்படவில்லை என்று தாங்கள் எண்ணுகின்றீர்களா?"

என்று ஒரு நண்பர் என்னைக் கேட்டிருக்கிறார். 'சத்தியசோதனை' என்ற நூல், காந்தியடிகளால் எழுதப்பட்ட அவருடைய சுயசரிதையே. அது காந்தீயத் தத்துவத்தின் விளக்கமோ வியாக்கியானமோ அல்ல.

மற்றும் காந்தியடிகளின் பெயரால் வெளிவந்துள்ள நூல்களெல்லாம் வெவ்வேறு சந்தர்ப்பங்களில், பல்வேறு விஷயங்களைப் பற்றி அவர் தெரிவித்துள்ள அபிப்பிராயங்களையே கூறுகின்றன. இந்த நூல்களிலிருந்து காந்தீயக் கொள்கைகளை அறிந்துகொள்ள முடியாதென்று நான் சொல்லவில்லை. ஆனால், தத்துவம், நடைமுறை ஆகிய இரண்டையும் பல்வேறு கோணங்களிலிருந்து ஆராய்ந்து கட்டுக் கோப்புகளுடன் ஒரே நூலாக உருவாக்கி வெளியிடப்பட்ட காந்தீய இலக்கியம் ஒன்றும் இல்லை என்றுதான் நான் கூறினேன். காந்தியடிகளின் பெயரால் வெளிவந்துள்ள நூல்களில் காந்தீயம் பற்றிய சிற்சில

அம்சங்கள் இல்லாமறை காயென இடம் பெற்றிருக்கலாம். அவை போதா. அவற்றை யெல்லாம் தொகுத்து தக்க வியாக்கியானங்களோடு ஒரு தனிநூல் வெளியிடப்பட வேண்டும். இதை நினைப்பூட்டத்தான் 'காந்தீயம்' என்பது எழுதப்படாத தத்துவம் என்று நான் கூறினேன்.

இனி கட்டுரையைத் தொடர்வோம் :—

உண்மைக் காந்தீயவாதி அதிகாரப் பதவிகளை விரும்ப மாட்டான். பதவியானது, மனிதனுடைய சுயநல ஆசைகளைத் தூண்டி விடுவதுடன் அவன் சுதந்திரமாகச் செயலாற்றுவதற்கும் தடையாக இருக்கிறது. ஆம், பதவியிலிருக்கும் ஒரு மனிதனல் எதிலும், எப்போதும் மனச்சாட்சிப்படி நடந்து கொள்ள முடிவதில்லை. ஒரு ஸ்தாபனத்தின் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு சாதாரண அங்கத்தினராக இருப்பவர்கள்கூட இந்தக் கஷ்டங்களுக்கு உள்ளாகின்றனர். அதனுற்றான், காந்தியடிகள் தம் வாழ்நாளின் பிற்பகுதியில் காங்கிரசில் நான்கணு அங்கத்தினராகக்கூட இல்லாமல் சுதந்திர புருஷராக செயலாற்றி வந்தார். ஆம்; அவர் ஒரு ஸ்தாபனம் போன்றவர். அவரைப் போன்று, ஸ்தாபனத்தோடு தொடர்பின்றி நாட்டுக்கு உழைக்க எல்லோராலும் முடியாது. ஆகவே, காந்தீயவாதி, கடமையைச் செய்வதற்காக ஸ்தாபனத்தோடு தொடர்பு கொண்டு அதனல் கிடைக்கும் உரிமைகளைத் துறந்துவிடவேண்டும். அப்படிப்பட்டவரே காந்தீயவாதி.

ஆனல், அதிகாரப் பதவிகளை விரும்பும் காங்கிரஸ் வாதிகள் கடமைகளை வாயளவில் பேசி விட்டு, உரிமைகளை அனுபவிப்பதிலேயே வாழ் நாளைக் கழிக்கின்றனர். இப்படிப்பட்டவர்களையே கொண்ட காங்கிரஸ் கட்சி காந்தீயப் பாதையில் நாட்டுக்குப் பணிபுரிவது கொஞ்சங்

கூட முடியாத காரியம். இது எனது அபிப்பிராயம் மட்டு மல்ல; நாட்டு மக்கள் அன்றாடம் கண்டுவரும் காட்சியு மாகும்.

ஆனால், கடந்த காலச் சரித்திரத்தை வைத்துக் கொண்டு, காங்கிரஸ் கட்சியானது தன்னைக் காந்தீய ஸ்தாபனம் என்றே இன்னமும் கருதிக்கொண்டிருக்கிறது. அதன் நிர்வாகிகள் இதை வெளிப்படையாகக் கூறவும் தயங்கவில்லை. காங்கிரஸ் கட்சிக்கு காந்தீயத்தில் நம் பிக்கை இருக்கிறதா, இல்லையா என்பது விவாதத்துக் குரிய விஷயம். நம்பிக்கை இருப்பினும், நடை முறையில் காந்தீயக் கொள்கையின் வரம்பு கடவாமல் நாடாளும் கட்சியான காங்கிரசால் நடந்துகொள்ள முடியுமா என்பதே பிரச்னை. முடியாது என்ற உண்மை சமீப ஆண்டுகளில் நிரூபணமாகி விட்டது. ஆயினும், கடந்த காலச் சரித்திரப் பெருமை குன்றாமல் காந்தீயப் பாதையிலேயே இனியும் காங்கிரசை நடத்திச் செல்ல அதன் நிர்வாகிகள் விரும்புவார்களானால், தாம் இறக்கும் காலத்தில் காந்தியடிகள் கூறியதுபோன்று காங்கிரசை "உலக சேவா சங்க" மாக மாற்றி அமைக்க வேண்டும். சட்டசபையிலும் மந்திரி சபையிலும் நுழையத் துடிப்போர் அதிலிருந்து வெளியேறி புதிய அரசியல் கட்சி ஒன்றை அமைத்துக் கொண்டு தங்கள் விருப்பம் போல நடந்து கொள்ளலாம். ஆனால் காங்கிரஸ் நிர்வாகிகள் இதைச் செய்வார்களென்று நான் நம்பவில்லை.

ஆகவே, காந்தீய நெறிவழி நடந்து கொள்ள இந்திய மக்களுக்குப் பயிற்சி அளிக்கவும், ஆளுவது எந்தக் கட்சியாக இருப்பினும், காந்தீய தர்மப்படி ஆளும்படி அதை வற்புறுத்தவும் ஒரு புதிய ஸ்தாபனம் தேவைப் படுகின்றது. அந்த ஸ்தாபனம் அரசாங்கப் பொறுப்பை

ஏற்று நடத்தக் கூடாது என்பதைத் தவிர, மற்ற எல்லா வகையிலும் ஒரு அரசியல் ஸ்தாபனமாகவே இயங்க வேண்டும். அதாவது அரசியல், கலாசாரம், பொருளாதாரம் ஆகிய எல்லாத் துறைகளிலும் அது பூரணமாகப் பங்கு கொள்ள வேண்டும்.

இந்தியா விடுதலை பெற்று விட்டதால், இனி நாட்டுக்குத் தேவையானவை பார்லிமெண்டரி முறைப்படி சட்டசபைகளிலும் மந்திரி சபைகளிலும் புகுந்து மக்களுக்குப் பாடுபடும் அரசியல் கட்சிகள் தான் என்று நம்பப் படுகிறது. இதில் ஓரளவு உண்மை இருக்கலாம். ஆனால், இந்தியா பெற்றது வெறும் அரசியல் விடுதலையே யன்றி பொருளாதார விடுதலையன்று. ஆகவே, மனிதனை மனிதன் சுரண்டி வாழாத, ஏற்றத் தாழ்வுகளைக் கற்பித்து ஏய்த்துப் பிழைக்காத சமதர்ம சமுதாயம் இனித்தான் அமைய வேண்டும். அதை, சர்க்காரை நடத்தும் கட்சியே சாதித்து விடுமென்று உண்மைக் காந்திய வாதியால் நம்ப முடியாது. சர்க்காரை நடத்தும் கட்சியாலேயே சமதர்ம சமுதாயத்தை அமைக்க முடியுமானால், வேறு எவரையும் விட காந்தீயவாதியே அதிக மகிழ்ச்சி யடைவார். ஆனால், அது சாத்தியமில்லை என்பதை காங்கிரசின் சமீபகாலச் சரித்திரம் காட்டிவிட்டது. ஆகவே கிளர்ச்சி வழியில்தான் சமதர்ம லட்சியத்தை அடைய முடியும் என்ற வாதத்தை காந்தீயவாதி அடியோடு புறக் கணிப்பதற்கில்லை. கிளர்ச்சி சாத்வீக முறைகளில்-சமுதாயத்தின் கட்டுக் கோப்பைக் குலைக்காத வகையில் நிகழ வேண்டும் என்பதே காந்தீயவர்தியின் நிபந்தனை. 'கிளர்ச்சி' என்பதற்கு காந்தியடிகள் புதிய இலக்கணம் கண்டு விட்டார். அந்த இலக்கணத்தின் வழி நாட்டில் பொருளாதாரக் கிளர்ச்சி நடைபெற வேண்டுமானால்

காந்தீயக் கட்சி ஒன்று ஏற்பட்டே ஆகவேண்டும். இல்லையேல், பாட்டாளி வர்க்கத்தினர் தவருன வழிகளில் இழுக்கப்படுவதை ஆளும் கட்சியாலோ, அரசாங்க பலத்தாலோ தடுத்துவிட முடியாது.

காந்தியடிகள் வாழ்ந்திருந்தால் நிச்சயமாக ஒரு பொருளாதாரக் கிளர்ச்சியை இந்நேரம் துவக்கி வைத்திருப்பார். ஆட்சியாளரின் உதவியையும், ஒத்துழைப்பையும் கொண்டே அதை நிகழ்த்த முயன்றிருப்பார். அந்த முயற்சியில் தோல்வி யுற்றிருப்பின், மக்கள் சக்தியைக் கொண்டே சமதர்ம சமுதாயத்தை அமைக்கும் போராட்டத்தை நடத்தியிருப்பார்.

காந்தியடிகள், கொள்கையில் கொஞ்சங்கூட விட்டுக் கொடுக்காத லட்சியவாதி. ஆனல், நடைமுறைத் திட்டங்களைச் சந்தர்ப்பத்திற்கேற்ப திருத்திக் கொள்ளும் ராஜதந்திரி. இதன்படி பார்த்தால், இந்தியாவின் அரசியல் சுதந்திரப் போராட்டத்தில் கடைப்பிடித்ததைவிடத் தீவிரமான முறையைக் கையாண்டு ஏழை மக்களின் இன்னல் தீர்க்கும் பொருளாதாரப் போராட்டத்தை அவர் நடத்தியிருப்பார் என்பதில் எனக்கு ஐயமில்லை.

அடிகளார் தெளிந்த ராஜதந்திரி. ஆகவே, அரசியல் சுதந்திரத்துக்காக நடத்திய போராட்டத்தோடு,பொருளாதார சுதந்திரப் போராட்டத்தைப் பிணைத்துவிட அவர் விரும்பவில்லை. அதனல் விடுதலைப் போராட்டத்தின் அணிவகுப்பு குலைந்து அந்நிய ஆட்சி ஸ்திரப்பட்டுவிடும் என்று அவர் அஞ்சினர். ஆகவே, தேசீய இயக்கக் காலத்தில், முதலாளி—தொழிலாளி தகராறில் சமரசம் காண்பதே அவருடைய கொள்கையாக இருந்தது. அதை வைத்துக்கொண்டு காந்தீய தத்துவத்தின் பொருளா

தாரக் கொள்கையை நிர்ணயித்துவிடக் கூடாது. ஆனால், அப்படித்தான் செய்ய முயலுகிறது காங்கிரஸ் கட்சி. இது காந்தீயத்திற்குச் செய்யும் அநீதியாகும்.

3

ஆவடியில் கூடிய அறுபதாவது காங்கிரஸ் மகா சபை, 'சோஷலிச பாணியை' ஏற்றுக்கொண்டுவிட்டது. ஆம்; "சோஷலிச பாணி"யில் இந்தியாவின் பொருளாதார ஏற்றத்தாழ்வைப் போக்கப் போவதாக இந்திய மக்களுக்கு ஆவடி காங்கிரஸ் உறுதி கூறியிருக்கிறது.

ஆவடி காங்கிரஸில் சோஷலிசத் தீர்மானத்தின் மீது பேசியவர்கள் சித்தாந்த ரீதியான சோஷலிசத்தில் தங்களுடைய நம்பிக்கையின்மையைத் தெரிவித்திருக்கின்றனர். அவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் பிரதமர் நேருவும், மௌலானா ஆஸாதும் ஆவர்.

சோஷலிசத்தை "இந்திய பாணி"யில் அமுல் நடத்தப் போவதாகவும் அவர்கள் பேசியிருக்கின்றனர். அந்தப் பெரியார்கள் குறிப்பிடும் "இந்திய பாணி" என்ன என்பது எனக்கு விளங்கவில்லை; அவர்களும் விளக்கவில்லை. ஆனால் ஆவடித் தீர்மானத்தின் வழி மத்திய அரசாங்கம் செயல்படும்போது, "இந்திய பாணி' எது என்பது விளங்கிவிடுமல்லவா ?

பொதுப்படையாக, சோஷலிச லட்சியத்தை நோக்கி காங்கிரஸ் இந்தியா யாத்திரை தொடங்கி விட்டது. அந்த அளவில் சோஷலிச சித்தாந்திகள் ஆறுதல் அடைய வேண்டியதுதான். இந்த யாத்திரையில், காங்கிரஸ் வேகமாகச் செல்லுவது பொது மக்களின் விழிப்பைப் பொறுத்திருக்கிறது. அந்த விழிப்பை ஏற்படுத்த வேண்டியது சோஷலிச சித்தாந்திகளின் கடமையாகும்.

இன்றைய முதலாளித்துவ சமுதாயத்தை இனியும் சுமந்து கொண்டிருப்பது சாத்தியமில்லை என்ற முடிவுக்கு காங்கிரஸ் கட்சி வந்து விட்டது. அதைச் சாத்தியமாக்க முயல்வதால், முதலாளித்துவத்திற்கே யன்றி, அதைச் சுமந்து கொண்டிருக்கும் இந்திய தேசீயத்திற்கும் அழிவு ஏற்பட்டு விடுவது திண்ணம் என்பதை காங்கிரஸ் கட்சி தெரிந்து கொண்டு விட்டது ; இது சோஷலிச சித்தாந்திகளுக்கு லாபந்தானே !

சோஷலிச பாணியை ஏற்றுக்கொண்டு விட்ட காங்கிரஸ், விளை நிலங்களேயோ தொழில் ஸ்தாபனங்களேயோ அல்லது இவை போன்ற இதர சாதனங்களேயோ நஷ்ட ஈடின்றிப் பறிமுதல்செய்யும் கொள்கையை ஏற்றுக்கொள்ள மறுக்கின்றது. ஆனல், நஷ்ட ஈட்டின் அளவைக் குறைப்பதில் மட்டும் காங்கிரஸ் அதிக அக்கறை காட்டுகிறது. காரணம், சோஷலிச சித்தாந்தத்தில் கொண்ட பற்றுதல் அல்ல; பணத்துறையில் அரசாங்கத்துக்குள்ள பற்றுக் குறைதான்.

தனிப்பட்டவர்களிடமுள்ள தொழில் ஸ்தாபனங்களே, உடனடியாகத் தேசிய மயமாக்குவதற்கு காங்கிரஸ் துடிக்கவில்லை. என்றாலும், விவசாயத் துறையில் தனிப்பட்டவர்கள் வைத்துக்கொள்ளக்கூடிய அதிகபட்ச நிலத்துக்கு வரம்பு கட்ட காங்கிரஸ் ஒப்புக்கொண்டு விட்டது. ஆனல், அங்கேயும் நஷ்ட ஈடு கொடுக்கும் கொள்கையைக் கைவிடவோ, அல்லது பெருஞ் செல்வந்தர்களேப் பொறுத்த வரையிலேனும் விதிவிலக்குச் செய்யவோ காங்கிரஸ் விரும்பவில்லை.

காங்கிரசின் இந்த நஷ்ட ஈட்டுக் கொள்கை காந்தீயத் தத்துவத்திற்கு முற்றிலும் முரணனதாகும். சுதந்திரப் போராட்ட காலத்தின் ஆரம்பத்திலோ, இடையிலோ

நஷ்ட ஈட்டைப் பற்றிக் காந்தியடிகள் என்ன சொல்லி யிருப்பினும், அப்போராட்டத்தின் இறுதிக் காலத்தில் நஷ்டஈட்டுக் கோரிக்கையை காந்தியடிகள் ஏற்றுக் கொள்ளவில்லை; எதிர்த்தும் வந்திருக்கிறார்.

விளை நிலங்களை உழுது பயிரிடும் உழைப்பாளி களுக்கே உரிமையாக்குவது பற்றி, அமெரிக்க அறிஞர் லூயி பிஷர் என்பவர், 1942-ம் ஆண்டின் மத்தியில் காந்தியடிகளோடு தாம் நடத்திய உரையாடலை "காந்திஜி யுடன் ஒரு வாரம்" என்ற தலைப்பில் அவர் வெளியிட் டுள்ள நூலில் குறிப்பிட்டிருக்கிறார். அந்நூலின் சில பகுதிகளை இங்கு தருகின்றேன் :

லூயி பிஷர் : சுதந்திர இந்தியாவில், பெரும்பான்மை யினராக இருக்கும் விவசாயிகளின் அபிவிருத்திக்கு உங்கள் திட்டம் என்ன ?

காந்தியடிகள் : விவசாயிகள் நிலங்களை எடுத்துக் கொள்வார்கள். அதை எடுத்துக்கொள்ளும்படி நாங்கள் அவர்களுக்குச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. தாங்க ளாகவே நிலங்களைக் கைப்பற்றத்தான் செய்வார்கள்.

பிஷர் : பலாத்காரமாகவா ?

காந்தி : பலாத்காரம் ஏற்படலாம். ஆயினும் நிலச் சுவான்தார்களும் ஒத்துழைப்பார்கள்.

பிஷர் : நஷ்ட ஈடின்றி நிலம் பறிமுதல் செய்யப்பட வேண்டுமென நினைக்கிறீர்களா ?

காந்தி : சந்தேகமில்லாமல் ! நிலச்சுவான்தார்களுக்கு நஷ்ட ஈடு கொடுப்பது பொருளாதாரப்படி யாராலும் செய்ய முடியாத காரியம்.

இன்றையக் காங்கிரஸின் நஷ்ட ஈட்டுக் கொள்கை காந்தீயத்திற்கு விரோதமானது என்பதை மேலே காட்டிய உரையாடல் நமக்கு உணர்த்தி வைக்கின்றதல்லவா ?

"நஷ்ட ஈடு கொடுக்க மறுப்பதால் நிலச்சுவான் தார்கள் பலாத்கார முறையில் எதிர்ப்புக் காட்ட மாட்டார் களா ?"—என்று லூயி பிஷர் கேட்டதற்கு,

"சில தினங்களுக்குக் குழப்பம் இருக் கலாம். ஆனால், அதை நாம் சீக்கிரம் அடக்கிவிட முடியும்."

என்று காந்தியடிகள் பதிலளித்திருக்கிறார். இந்த சந்தர்ப்பத்தில் நேருஜியும் அருகிலிருந்து காந்தியடிகளின் கருத்தை ஆதரிக்கும் போக்கில், உரையாடலில் பங்கு கொண்டதாக லூயிபிஷர் குறிப்பிடுகின்றார்.

விஷயாலோசனைக் கமிட்டியில் மௌலானா ஆஸாத், சோஷலிசத் தீர்மானத்தைப் பிரரேபித்தபோது, அந்தத் தீர்மானத்தி லிருக்கும், "சோஷலிச பாணி" என்ற வார்த்தைக்குப் பதிலாக "சர்வோதய முறையில்" என்ற வார்த்தையைச் சேர்த்துக் கொள்ளும்படி ஒரு பிரதிநிதி திருத்தம் கொடுத்தார். காந்தியடிகளால் துவக்கப்பட்ட "ஹரிஜன்" பத்திரிகையும் இதே விதமான அபிப் பிராயத்தையே தெரிவித்திருந்தது. ஆனால், காந்நீய வழிப்பட்ட "சர்வோதயம்" ஆச்சாரியா வினோபா பாவேயைப் போன்ற தனி மனிதர்களின் கொள்கை யாகத்தான் இருக்க முடியும் என்றும், மிகவும் விசால மான—அர்த்த புஷ்டி வாய்ந்த அந்த வார்த்தையை காங்கிரஸ் ஏற்றுக்கொள்ள முடியாதென்றும் பிரதமர் நேரு தெளிவாகக் கூறிவிட்டார்.

ஆம்; காங்கிரஸ், பொது மக்களுடைய உள்ளத்தில் வளரும் ஸ்தாபனமாக இருந்த காலத்தில்தான் நஷ்ட ஈடற்ற பறிமுதலைக் காந்தியடிகள் வற்புறுத்தினார். விவசாயிகள் தாங்கள் பாடுபடும் நிலத்தைத் தாங்களே கைப்பற்றிக் கொள்ளும் சாத்விகப் புரட்சி சுதந்திர இந்தி

யர்வில் நடக்கு மென்று காந்திஜீ கனவு கண்டார்: நடக்கவேண்டும் என்றும் அவர் விரும்பினார்.

'அரசாங்கம் நிலத்தைக் கைப்பற்றிக் கொள்ளும்; விவசாயிகளை அடக்கி ஒடுக்காமல் நஷ்டஈடு கோரி நிலச் சுவான்தார்கள் நடத்தும் பலாத்காரக் கிளர்ச்சியை ஒடுக்கும் என்றும் அவர் நம்பினார். அவருடைய அந்த தீவிரக் கொள்கைகளை அப்போது அரசியல் கிளர்ச்சிக் காரராக இருந்த நேருஜீயும் ஆதரித்தார்.

ஆனால், இன்றைய காங்கிரஸ் பொதுமக்களின் தொடர்பை இழந்துவிட்டது. அதற்குப் பதிலாக நிலச் சுவான்தார்களுக்கும் காங்கிரசுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டுவிட்டது. தமிழ் நாட்டைப் பொருத்தவரை ஜில்லாக்கள் தோறும் நிலச்சுவான்தார்கள்தான் காங் கிரஸ் கமிட்டிகளின் நிர்வாகிகளாக இருக்கின்றனர். இந்த மாறுதலான சூழ்நிலையில் 'சர்வோதயம்' என்ற சொல் லைக்கூட காங்கிரஸ் ஏற்றுக்கொள்ள முடியாது என்று பிரதமர் நேரு தெரிவித்ததைக் கண்டு யாரும் வியப்படை வதற்கில்லை. ஆம்; அது 'தற்கொலை' முயற்சி என்று நேருஜி கருதியிருக்கலாம்.

"சோஷலிச பாணி"யில் இந்திய சமுதாயத்தின் பொருளாதாரக் கட்டுக் கோப்பை அமைக்கப்போவதாகக் கூறும் நேருஜி, அதே நேரத்தில் தான் வகுக்க விருக்கும் பொருளாதாரத் திட்டத்தில் தனிப்பட்டவர்களின் உடை மைக்கும் முயற்சிக்கும் இடமுண்டு என்று அழுத்தமாகக் கூறுகின்றார். ஆம்; தனிப்பட்ட செல்வந்தர்களோடு சமரசம் செய்து கொள்வதன்மூலம், சமுதாயத்தின் அடித் தளத்திலுள்ள சாதாரண மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முடியும் என்று நேருஜி நம்புகின்றார்.

தெளிவாகச் சொன்னால், "சோஷலிச பாணி"யில் வாழ்விருக்கும் வருங்கால இந்தியாவில் முதலாளித்துவத்திற்கும் ஒரு விசாலமான இடத்தை நிரந்தரமாக ஒதுக்கி வைக்கின்றார்.

விடுதலைப் போராட்ட காலத்தில் கிளர்ச்சிக்காரர்களின் தலைவராக இருந்த நேரு இதற்கு நேர்மாறான கொள்கையைக் கொண்டிருந்தார் :

> "தற்போதைய நிலைமையில், பணக்காரன் இனித் தேவையே யில்லை. உற்பத்தித் திட்டத்துக்கு அவன் தேவையான ஒரு பகுதி அல்ல. மொத்தத்தில் ஜன சமுதாயத்துக்கும் அவன் தேவையான ஒரு அம்சமல்ல. அவன் மிகையானவன். அவன் எப்பொழுதும் எதற்கும் குறுக்கே விழுந்து கொண்டிருக்கிறான்."

—இது, தாம் எழுதிய "சுய சரித்திரத்"தில், "காந்தி ஒரு புதிர்" என்ற தலைப்பின்கீழ் நேருஜி கூறியிருப்பதாகும். மேலும் அந்தப் பகுதியில் அவர் கூறுவதாவது :—

> "கடைசியாக ஒரே ஒரு பரிகாரம்தான் சாத்தியமானதாக நம்முடைய கண்ணில் படுகிறது. அது முதலில் நம்முடைய தேச எல்லைக்குள்ளே சோஷலிசத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவது."

ஆம் ; இங்கு "சோஷலிசம் !" என்றுதான் கூறுகின்றார். "சோஷலிச பாணி" என்று குறிப்பிடவில்லை. மற்றும்,

> 'விரும்பத்தக்க, அனுபவ சாத்தியமான அந்த லட்சியத்தைப் பறிகொடுத்து விட்டு

பழைய அமைப்புகளோடு ராஜி செய்துகொள்ளு
வது மகத்தான துரோகமாகும்.”

என்றும் நேருஜி எழுதியிருக்கிறார். இதிலிருந்து அன்றைய நேருவின் கருத்திலிருந்தது கலப்படமற்ற சோஷலிசம்தான் என்றும் தெளிவாகத் தெரிந்து கொள்ளுகின்றோம்.

இதையெல்லாம் நான் எடுத்துக் காட்டுவது, சோஷலிசத்தில் நேருஜிக்கு நம்பிக்கை இல்லை என்று நிரூபிப்பதற்காக அல்ல. தம்மால் முடிந்தவரை இன்றைய சமுதாயத்திலுள்ள பொருளாதார ஏற்றத் தாழ்வைப் போக்கியே தீரவேண்டும் என்பதில் அவருக்குள்ள உறுதியை யாரும் சந்தேகிக்க முடியாது. அந்த விஷயத்தில் அவரைவிட தீவிரமும் தூய்மையும் படைத்த இன்னொருவரை இன்றைய காங்கிரசில் காண முடியாது.

ஆனால், காங்கிரஸ் கட்சிக்கு பொதுமக்களோடு தொடர்பு இல்லாததாலும், மீண்டும் அந்தத் தொடர்பை பழைய காலத்தைப் போன்று ஏற்படுத்திக் கொள்ள முடியாதோ என்று நினைக்கும் அளவுக்குப் பொதுமக்களுக்கும் காங்கிரசுக்கும் இடைவெளி அதிகரித்து விட்டதாலும், பிரதமர் நேரு தமது பழைய கொள்கைப்படி நடந்து கொள்ளச் சக்தியற்றவராகி விட்டார். நோய்ப்பட்ட குழந்தையின்பால் கருணை கொண்ட தாய், அதைக் காப்பாற்றுவதற்குக் கடமைப்பட்ட காரணத்தால், தான் பத்தியமாக உண்பதைப்போல, ஆரோக்கியக் குறைவை அடைந்துவிட்ட காங்கிரசுக்காகக் கொள்கை விஷயத்தில் பத்தியமாக இருக்க வேண்டிய கட்டாயம் நேருவுக்கு ஏற்பட்டுவிட்டது.

இந்த நிலைமாறி காந்திய நெறி வழியும், கடந்த காலத்தில் நாம் நினைத்தபடியும் நேருஜீ செயலாற்ற

வேண்டும் என்பதே எனது அவா. அதற்கு, காங்கிரஸிலுள்ள விரும்பத்தகாதவர்களை, சோஷலிசத்துக்கு ஆதரவாக இருக்க முடியாதவர்களையெல்லாம் வெளியேற்றி அதைத் தூய்மைப்படுத்த வேண்டும். அப்படிச் செய்யாதவரை, ஆவடியில் அரங்கேற்றிய "சோஷலிச பாணி"யைக்கூட இந்தியாவை முன்னேற்ற காங்கிரசால் முடியுமா என்பது சந்தேகம்தான்.

காங்கிரஸ் மட்டுமல்ல; பொது ஜனங்களோடு, அதாவது உழைத்துப் பிழைக்கும் சாதாரண பாட்டாளி மக்களோடு நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ளாத எந்த அமைப்பும், பொருளாதாரத் துறையில் புரட்சிகரமான மாறுதல்களை ஏற்படுத்தச் சக்தியற்றதாகும்.

4

**கா**ந்தியம் என்பது, மக்கள் வழிப்பட்ட தத்துவமாகும். ஆகவே, தன்னைக் காந்தியவாதி என்று சொல்லிக் கொள்ளும் எவரும் மக்களோடு நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டும். மக்கள் தொடர்பற்றவர்கள், எண்ணத்தால் காந்தியத்தை ஏற்றுக்கொண்டிருப்பினும், இயக்கத்தால் காந்தியவாதியாக இருக்க முடியாது.

பொதுஜனத் தொடர்பு என்றால் என்ன?

திறந்தவெளி மைதானத்தில் பல்லாயிரக் கணக்கான மக்களைக் கூட்டி வைத்துச் சொற்பொழிவாற்றி அதோடு திருப்தி அடைந்து விடுவதா?

மக்களைத் திரட்டி மாநாடு கூட்டி அவர்களுடைய குறைகளைப் பற்றித் தீர்மானங்கள் நிறைவேற்றிவிட்டுக் கலைந்து போவதா?

கதை, காலட்சேபம், இலக்கியப் பிரசாரம் என்ற பெயரால் மக்கள் மத்தியில் நின்று அவர்களுக்கு ஒழுக்க நெறி போதிப்பதா?

ஆம்; இதெல்லாம் பொதுஜனத் தொடர்புடைய செயல்களே. ஆனால், காந்தியக் கண்ணோட்டத்தின் வழி பொதுஜனத் தொடர்பு என்றால், மக்கள் மத்தியில் அடிக்கடி நடமாடி அவர்களிடமுள்ள குறைகளை நீக்கவும், கஷ்டங்களைப் போக்கவும் சேவை செய்வதாகும்.

பொதுஜனத் தொடர்பு என்றால் என்னவென்பதை காந்தியடிகள் தம்முடைய வாழ்க்கைமூலம் நாட்டு மக்களுக்குப் புலப்படுத்தியிருக்கிறார்.

அடிகளார் தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்த காலத்தில், அங்கு இந்திய மக்களுக்குற்ற அல்லல்களையும் அவமானங்களையும் போக்கப் பாடுபட்டார். அவர்களிடையே நிலவியிருந்த வேற்றுமைகளையெல்லாம் விலக்கி, அவர்களுக்குள் ஒற்றுமையை உருவாக்கினார்.

தென்னாப்பிரிக்காவில் 'கூலிச் சேரி" என்ற பகுதியில் கருமகாமாரி என்ற தொத்து நோய் தோன்றியபோது, அந்நோய்க்கு இரையான மக்களைக் காப்பாற்ற மருத்துவப் பணி புரிந்தார். மற்றும் 'ஜோஹன்ஸ் பர்க்'கில் ஸுலூ என்னும் வகுப்பார் அரசாங்கத்திற்கு எதிராகக் கலகம் செய்தனர். அப்போது அரசாங்கப்படையினரால் தாக்கப்பட்டுப் படுகாயமடைந்த கலகக்காரர்களுக்கு மருத்துவ சேவை செய்தார்.

இந்தியாவிலும் ஆக்கவழிப்பட்ட எவ்வளவோ பணிகளில் அடிகளார் பங்கு கொண்டார். காங்கிரசுக்கு வழிகாட்டிச் செல்லும் பொறுப்பை ஏற்ற பிறகு அடிகளார் தயாரித்துக் கொடுத்த நிர்மாணத் திட்டங்களை அறியாதார் யார்?

விடுதலைப் போராட்ட காலத்தில், எங்கு தீ விபத்து நேரினும், வெள்ள விபத்து நிகழினும், தொத்து நோய் தொடரினும், பஞ்சம் படரினும் அங்கெல்லாம் முதல் உதவிப் படையாக இருந்து சேவை செய்தவர் காங்கிரஸ் காரர்களே.

இந்து—முஸ்லிம்களிடையே பயங்கரமான வகுப்புக் கலகங்கள் நிகழ்ந்த போதெல்லாம், அதை அடக்கி, சண்டையிடும் வகுப்பாரிடையே சமாதானத்தை உண் டாக்கக் காங்கிரஸ்காரர்களே பணிபுரிந்தனர்.

கடந்த இரண்டாவது மகா யுத்தத்தின்போது, பர்மாவிலிருந்து புறப்பட்டு இந்தியாவை நோக்கி வந்த பர்மா இந்திய அகதிகளுக்கு, வங்காளத்திலிருந்து சென்னை நகரம் வரையுள்ள காங்கிரஸ்காரர்கள் செய்த சேவை பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்க தாகும். ஆம் ; காங்கிரஸ் ஸ்தாபனம் காந்தீயப் பாதை யில் சென்றுகொண்டிருந்த காலத்தில் காங்கிரஸ்காரர்கள் பொது ஜனங்களிடையே தொடர்பு கொண்டிருந்த சரித் திரத்துக்கு இவையெல்லாம் சான்றுகளாகும்.

ஆனால், இந்தச் சம்பவங்களெல்லாம் பொய்யாய், கனவாய், பழங்கதையாய்ப் போய்விட்டன. இன்று காங்கிரசில் புதிதாகப் புகுந்துள்ள நவீன தேசீய வாதி களுக்கு இந்தப் பழைய சரித்திரம் தெரியாது. நெடு நாளைய காங்கிரஸ் வாதிகளாய் இருந்தவர்களும், கடந்த தலைமுறையின் சாதனைகளை யெல்லாம் மறந்தே விட்டார்கள். காங்கிரஸ் மகாசபை இந்திய மக்களிடையே மதிப்புப் பெற்றதற்கு அம்மகாசபை நடத்திய போராட் டங்கள் மட்டுமே காரணங்களல்ல. காந்தீய வழி நின்று காங்கிரஸ்காரர்கள் ஆற்றிய நிர்மாணப் பணிகளே முக்கிய காரணங்களாகும்.

போராட்டங்களால், காங்கிரசின் கொள்கைகளுக்கு நல்ல விளம்பரம் கிடைத்தது ; காங்கிரஸ்காரர்கள் தியாக உணர்வு பெற்றனர் ; ஏகாதிபத்தியம் காங்கிரசைக் கண்டு அஞ்சி நடுங்கியது. ஆங்கிலக் கொடுங்கோல் ஆட்சியை மக்கள் வெறுத்தனர். ஆனல், காங்கிரஸ் ஸ்தாபனம் மக்களுடைய அபார மதிப்பைப் பெற்றதற்குக் காரணம் காங்கிரஸ்காரர்கள் ஆக்க வழியில் மக்களுக்குச் செய்த அரும்பணியே யாகும்.

காந்தியடிகள் காங்கிரசை நடத்தும் பொறுப்பை ஏற்ற பிறகு முப்பதாண்டுகளில் மூன்று முறைதான் தேசத்தைப் போராட்டப் பாதையில் இழுத்தார். 1921–ல் ஒத்துழையாமைப் போர் துவக்கினர். 1931–ல் உப்பு சத்தியாகிரப் போர் நடத்தினர். 1941–ல் யுத்த எதிர்ப்புப் போராட்டம் துவக்கினர். ஆம் ; பத்து வருஷத்துக்கு ஒருமுறைதான் காங்கிரஸ் மகாசபையை அரசாங்கத்துக்கு எதிரான நேரடி நடவடிக்கையில் ஈடுபடுத்தினர். அதுவும், தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில்தான் போராட்டம் துவக்கினர். ஆம் ; ஆங்கில ஏகாதிபத்தியம் இந்திய மக்களின் சுயமரியாதை உணர்ச்சிக்கு அறை கூவல் விட்டபோதுதான் தன்மானப் போர்க் கொடியை உயர்த்தினர்.

போராட்டமில்லாத காலங்களில் மக்களோடு தொடர்பு கொள்ளவும் அவர்களுடைய கவனத்தைக் காங்கிரசின் பால் ஈர்க்கவும் காங்கிரஸ்காரர்கள் கடைப்பிடித்த நடை முறைகள் காந்தியடிகள் கற்றுத் தந்த நிர்மாணத் திட்டங்களாகும்.

காங்கிரஸே அன்றி, அரசியல் கட்சி நடத்தும் ஒவ் வொருவரும் மேலே கொடுத்த சான்றுகளைக் கவனத்தில் கொள்ள வேண்டும். “ ஆண்டுக்கு ஒரு முறை போராட்டம்

என்ற பெயரில் ஏதேனும் ஒரு ஆர்ப்பாட்டம் நடத்திக் கொண்டிருந்தால்தான் கட்சிக்கு விளம்பரம் கிடைக்கும்; தொண்டர் படை கலையாமல் இருக்கும்; மக்கள் கவனத்தையும் கவரமுடியும்" என்று நினைக்கிறார்கள், சில அரசியல் ஸ்தாபனங்களின் தலைவர்கள். அதற்காக காரணமில்லாமலும், நியாய வரம்பு மீறியும் அடிக்கடி ஆர்ப்பாட்டங்களை நடத்துகிறார்கள்.

ஆம்; அவர்களிடம் மக்களுக்குப் பாடுபடக்கூடிய ஆக்க வழிப்பட்ட திட்டம் இல்லை. ஆகவே, ஆர்ப்பாட்டம் ஒன்றின் மூலம்தான் அவர்கள் தாங்கள் தலைமை வகிக்கும் ஸ்தாபனத்தின் கட்டுக்கோப்புக் குலையாமல் வைத்துக் கொள்ள முடிகிறது. இப்படிப்பட்ட தலைவர்களும் சரி, அவர்களால் நடத்தப்படும் அமைப்புகளும் சரி; காந்தீய நெறிக்குத் தீங்கிழைப்போர் ஆவர். அதிசயமென்னவென்றால் இப்படிப்பட்ட தலைவர்களும் ஸ்தாபனங்களும்கூட சந்தர்ப்பம் கிடைக்கும்போது காந்தீயத்தில் நம்பிக்கை உள்ளவர்கள்போல நடிப்பதுதான்.

காந்தீயவாதி பணிபுரியும் பொதுஜன ஸ்தாபனம் எதுவும் போராட்டம் நடத்த சந்தர்ப்பத்தைத் தேடாது. அல்லது அரைகுறைச் சந்தர்ப்பத்தை வைத்துக் கொண்டே போராட்டத்தில் இறங்கிவிடாது. வேறு வழி இல்லை என்று ஏற்படும்போதுதான், சமாதான முறைகள் அத்தனையையும் கையாண்டு பார்த்த பிறகுதான் போராட்டத்தில் ஈடுபடும்.

இன்று காங்கிரஸ் ஆளும் கட்சியாக மாறிவிட்டதால் அரசாங்கத்துக்கு எதிரான நேரடிப் போராட்டத்தில் ஈடுபட அதற்குச் சந்தர்ப்பமே இல்லை. ஆனால், ஆக்க வழியில் பொது ஜனத் தொடர்பு கொள்ள முன்னைவிட இப்போது காங்கிரசுக்கு அதிக சந்தர்ப்பம் இருக்கிறது.

சந்தர்ப்பம் மட்டுமா? சக்தியும் சாதனங்களும் கூட அதிகரித்திருக்கின்றன. ஆனால், காங்கிரஸ் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளாமல் பாழ்படுத்தி வருகிறது.

காரணம், காங்கிரசில் காந்தீயத்தில் நம்பிக்கை உடையவர்களின் எண்ணிக்கை குறைந்து வருகிறது. பழைய காந்தீய வாதிகளில் சிலர் இறந்தே போனார்கள். மற்றும் சிலர் வயோதிகத்தால் உள்ளம் தளர்ந்து கிடக்கிறார்கள். இன்னும் சிலர் காங்கிரசின் விபரீதப் போக்கைக் கண்டு உள்ளம் உடைந்து அரசியலிலிருந்து விலகிக் கொண்டு விட்டனர். பின்னும் சிலர், காங்ரகிசிலிருந்து வெளியேறி வேறு ஸ்தாபனங்களின் மூலமாகவோ, தனி நபராக நின்றோ இயன்றவரை நாட்டுக்குப் பணி புரிந்து வருகின்றனர். எஞ்சிய சிலர் கொள்கையை மாற்றிக் கொண்டு அதிகாரத்தைக் கையில் வைத்திருக்கும் கோஷ்டியாருக்குக் குற்றேவல் புரிந்து வருகின்றனர். இந்த நிலையில் காங்கிரஸ் எப்படிப் பொது ஜனங்களோடு தொடர்பு கொள்ள முடியும்? காங்கிரஸ் பொது ஜனங்களோடு தொடர்பு கொள்ளாததால் நாட்டுக்கு ஏற்பட்ட நஷ்டங்கள் அளவிட முடியாதவை.

## 5

'காந்தீய' சித்தாந்தத்தில் தாய் மொழிக்கு முக்கியத்துவம் தரப்பட்டிருக்கிறது. அதுவே, காந்தீயத்தின் மூச்சு என்றும் சொல்லலாம். எல்லாவற்றிலும் சுத்த சுதேசியம் பரிணமிக்க வேண்டும் என்பதுதானே காந்தியடிகளின் குறிக்கோள்.

கல்வி, கலை, கலாச்சாரம் ஆகிய துறைகளில் தாய் மொழிக்குரிய இடத்தை எந்தக் காரணத்தை முன்னிட்டும் அன்னிய மொழிக்கு வழங்கக் கூடாது. அப்படிச் செய்வது

காந்தீயத்துக்கு விரோதமாகும். காந்தியடிகள் காங்கிரசில் பிரவேசிக்கும்வரை, அம் மகாசபையின் நடவடிக்கைகளில் ஆங்கிலமே ஆதிக்கம் பெற்றிருந்தது. அந்நாளில் காங்கிரஸ் மாகாணங்கள் மொழிவாரிப் பிரதேசங்களாக அமைந்திருக்கவில்லை. அரசாங்க மாகாணங்களை முன்மாதிரியாகக் கொண்டே அமைந்திருந்தன. ஆகவே, காங்கிரஸ் மகாசபை நடவடிக்கைக்கு மட்டுமின்றி, மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகளின் நிர்வாகத்திற்கும் ஆங்கிலமே பயன்படுத்தப்பட்டு வந்தது. இதனால் ஆங்கிலம் அறியாதவர்கள் காங்கிரஸ் நிர்வாக அமைப்புகளில் இடம் பெறுவதற்குச் சந்தர்ப்பம் இல்லாமலிருந்தது.

காந்தியடிகள் காங்கிரசில் பிரவேசித்த பிறகு, காங்கிரஸ் மாகாணங்களை மொழிவாரிப் பிரதேசங்களாகத் திருத்தி அமைக்கவேண்டுமென்று ஆலோசனை கூறினர். 1917-ல் கூடிய கல்கத்தா காங்கிரஸில் அவருடைய ஆலோசனை ஏற்றுக்கொள்ளப்பட்டு தென்னிந்தியாவிலும், மத்திய இந்தியாவிலும் காங்கிரஸ் மாகாணங்கள் திருத்தி அமைக்கப்பட்டன. இந்தத் தீர்மானத்தை லோகமான்ய பால கங்காதர திலகர்தான் கல்கத்தா காங்கிரசில் பிரரேபித்தார் என்பது குறிப்பிடத்தக்கது. அப்போது அவர், "மாகாண சுயாட்சிக்கு இது ஆரம்ப நடவடிக்கை" என்று குறிப்பிட்டார். ஆம் ; இந்திய மாகாணங்கள் சுயாட்சியுள்ள மொழிவழி ராஜ்யங்களாக இருக்கவேண்டும் என்ற கோரிக்கை 1917-ம் ஆண்டு கல்கத்தா காங்கிரசிலேயே தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

காங்கிரஸ் மாகாணங்கள் மொழிவழி திருத்தி அமைக்கப்பட்ட பிறகு, காங்கிரஸ் மகாசபை ஆங்கிலம் படித்த மேதைகளின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு சாதாரண பொதுமக்களின் கைக்கு வந்ததோடு, உண்மை

யான போராட்ட ஸ்தாபனமாகவும் மாறிவிட்டது. அந்தக் காலம் முதல் இதுவரை மொழிவழி ராஜ்யக் கோரிக்கை காங்கிரசின் கொள்கையாக இருந்து வருகின்றது. ஆனால், அதை அமுல் நடத்த வேண்டுமென்ற ஆர்வம் இன்று காங்கிரசை நிர்வகிப்போரிடை இருப்பதாகத் தெரியவில்லை. காரணம், இன்றைய காங்கிரஸ் காந்தீயப் பாதையிலிருந்து விலகிச் சென்றுவிட்டது தான்.

'தந்தையோடு கல்விபோம், தாயோடு அறுசுவை போம்...' என்று சொல்வார்கள் அல்லவா? அதுபோல, காந்தியோடு காந்தீயமும் போய்விட்டது என்று கூறத் தக்கநிலை ஏற்பட்டுள்ளது. காந்தியடிகள் வாழ்ந்திருந்தால், இந்தியக் குடியரசுச் சட்டம் அமுலுக்கு வந்த நாளிலேயே ராஜ்யங்களை மொழிவாரியாகத் திருத்தி அமைக்கும் வேலையும் முற்றுப் பெற்றிருக்கும்.

காந்தீய சித்தாந்தத்தில் தாய் மொழிக்கு முக்கியத்துவம் தரக் காரணமென்ன? தாய் மொழியின் மூலம் நாடு இயங்கினால்தான் மக்களிடையே அடிமைப் புத்தி மாயும்; பிற்போக்குச் சக்திகள் மக்கள்மீது ஆதிக்கம் செலுத்தும் கொடுமை ஒழியும் என்பதுதான். ஆனால், அன்னியனை வெளியேற்றி விட்டதனாலேயே அடிமைத் தனத்தை ஒழித்துவிட்டதாக நினைப்பவர்கள், மக்கள் மீது ஆதிக்கம் செலுத்தும் பிற்போக்குச் சக்திகளிடம் உறவு வைத்துக்கொண்டு விட்டவர்கள், தாய்மொழிக்கு முக்யத் துவம் தர மறுப்பது இயற்கையே. வியப்பு என்னவென்றால், இப்படிப் பட்டவர்கள் இன்னமும் தங்களைக் காந்தீய வாதிகள் என்று சொல்லிக் கொள்ளுகிறார்களே, அதுதான்!

காந்தீய நெறிப்படி காங்கிரஸ் மாகாணங்கள் மொழிவாரி திருத்தி அமைக்கப்பட்டிரா விட்டால் போதிய

ஆங்கில ஞானமில்லாத காமராசரும் கக்கனும் தமிழ் நாடு காங்கிரசின் தலைவர்களாக வந்திருக்க முடியுமா? இன்னும் ஆயிரம் ஆயிரம் பேர், தாய்மொழியின் மூலமே, தெளிந்த அரசியல் ஞானம் பெற்று காங்கிரஸ் கமிட்டிகளில் நிர்வாகப் பதவிகள் வகிக்க முடிகிறதே, இது சாத்யமாகி இருக்க முடியுமா? சுருக்கமாகச் சொன்னால், இந்தியாவின் மாபெரும் ஸ்தாபனமான காங்கிரஸ் மகாசபையின் மாகாணக் கமிட்டிகள் மொழிவாரி திருத்தி அமைக்கப்பட்ட பிறகுதான், சமூகத்தின் அடித்தளத்திலுள்ள சாதாரண மக்களிடையே மகத்தான அரசியல் விழிப்பு ஏற்பட்டது. அதன் விளைவாக பிரதேச மொழிகளில் ஏராளமான பத்திரிகைகளும், பிரசுரங்களும் வெளிவரத் தொடங்கின. ஆம்; இலக்கியத் துறையளவில் தேங்கிக்கிடந்த பிரதேச மொழிகள், அரசியல் துறையிலும் மறுமலர்ச்சி அடைந்தன.

இம்மாதிரி பொதுமக்களிடையே ஏற்பட்ட அரசியல் விழிப்பையும் அரசியல் உணர்ச்சியையும் நன்கு பயன் படுத்திக்கொண்டு **1921**-லும் **1931**-லும் விரிவான அளவில் ஆங்கில சாம்ராஜ்யத்தை எதிர்த்துப் பொதுஜனப் போராட்டங்களை நடத்தியது காங்கிரஸ் மகாசபை. அந்தப் போராட்டங்களின் விளைவுதான் **1947** ஆகஸ்ட் **15**ல் பாரதநாடு அடைந்த அரசியல் விடுதலை.

ஆனால், மொழித் துறையில் காந்திய லட்சியம் அதோடு முடிவடைந்துவிடவில்லை. காங்கிரஸ் மாகாணங்களின் அடிப்படையில் ராஜ்யங்கள் திருத்தி யமைக்கப் பட்டு அந்த ராஜ்யங்கள், அது அதற்குரிய மொழியில் நடைபெறத் துவங்கி, கல்வியின் எல்லாக் கட்டங்களிலும் பாடங்களெல்லாம் தாய்மொழியிலேயே கற்பிக்கப்படும் போதுதான் மொழித்துறையில் காந்தியம் பூர்த்தி பெறும்.



